# ஸ்ரீ சங்கர திக்விஜயம்

# பாட்டு.



ஸகல வேதாந்த ஸித்தாந்த வித்வத் சிரோமணியாகிய
பிரம்மஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்களின் வம்ச
பரம்பரை... ச் சேர்ந்த கோடக நல்லூர்
N. அ... ய சாஸ்திரிகளின் புத்திரி

## A. S. லெக்ஷ்மி அம்மாளால்

இயற்றப்பட்டது.

---



இதன் விலை] 1967 [ரூபா 4–00

குருப்யோ நம:
பரப்ரம்மணே நம:



# ஸ்ரீ சங்கர திக்விஜயம் பாட்டு.

இஃது
ஸகல வேதாந்த ஸித்தாந்த வித்வத் சிரோமணியாகிய
பிரம்மஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்களின்
வம்ச பரம்பரையைச் சேர்ந்த கோடக நல்லூர்
N. அப்பய்யா சாஸ்திரிகளின் புத்திரி
**காசிவாஸி A. S. லெக்ஷ்மி அம்மாளால்**
இயற்றப்பட்டது.

———o———

பிரம்மஸ்ரீ காலடி H. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகளால்
பரிசோதிக்கப்பட்டது.

பாலக்காடு
வாணீவிலாஸ் அச்சகத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1966 ] [ விலை 12-00.

# சமர்ப்பணம்.

எது—எங்கும் நிறைந்த பரிபூரணாநந்தமோ

எது—அவாங் மானஸ அகோசரமோ

எது—ஆலடியில் அமர்ந்துகொண்டு ஸனகாதி நால்வர்களுக்கு சகல தத்துவங்களையும் சாற்றுமல் சாற்றி சந்தேகம் தவிர்த்ததுவோ

எது—ஸஜாதிய–விஜாதிய–ஸ்வகதபேதரகிதமோ.

அந்த—தரணி மானிடராய் காலடி க்ஷேத்திரத்தில் கங்கை சந்திரனைமறைத்து சிவகுருவிற்கு மகவாய் தோன்றி ஆஸேது ஹிமாசலம் பாதசாரியாய் நடந்து ஷண்மதங்களையும் ஸ்தாபித்து அத்வைதக் கொடியை பறக்கவிட்டு ஸனாதன தர்மத்தை பாலர் முதல் விருத்தர்வரையும் அனுஷ்டிக்கும்படி அனுக்கிரஹித்து ஆங்காங்கு அநேக பீடங்களையும் பத்மபாதர் முதலிய சிஷ்யர்களையும் ஸ்தாபித்து ஸர்வக்ஞபீடம், சாரதா பீடம் ஏறி சகலருக்கும் அருள்மழை பெய்து 32 வயதில் கேதாரம் சென்று கைலாஸத்தை சென்றடைந்து அப்பப்போ அவனியில் தோன்றி அனுக்கிரஹிக்கும் ஆதி பகவத்பாதாள் பாதாரவிந்தத்திற்கு என் ஹிருதயகமலத்தில் வீற்றிருக்கும் குருவாகிய பத்மாஸனியின் பாதாரவிந்தத்திற்கு இப்பாமாலையை அர்ப்பணம் செய்கின்றேன்.



ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு மஹாசந்நிதானம்
ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள் அவர்கள்

# முன்னுரை.



அன்று திராவிட சிசுவாம் ஞான சம்பந்தன் அன்னையின் ஞானப்பால் உண்டு வாக்சித்திபெற்று அருட்பா மாலையை பாடி அருளியது சரித்திரப் பிரசித்தம். இன்றோ நம் கண்முன் காணும் காட்சியாக திராவிட சிசுவாம் லக்ஷ்மி அம்மை அன்னை பராசக்தியின் ஞானப்பால் தீக்ஷை பெற்று அருட்பா மாலையாக **"சங்கர விஜயம்"** என்ற நூலை இயற்றி உள்ளார்கள்.

ஸர்வ வேதாந்த சித்தாந்த பாஸ்கரராகி விளங்கிய ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் வம்சத்திலுதித்த ஸ்ரீ அப்பய்யா சாஸ்திரிகளின் அருமைப்புத்திரியாய் ஜனித்து பால்ய அவஸ்தையிலேயே ஸ்ரீ பாலா திருபுரஸுந்தரியின் அருளுக்குப் பாத்திரமாகி அகண்டைகரஸ அத்வைத வித்தியை அனுபவித்து தன்னை நாடிய யாவருக்கும் தான் பெற்ற இன்பத்தைத் தந்து விளங்கி வருகிறார்கள் லக்ஷ்மி அம்மை. அம்மையின் குடும்பம் ஸாக்ஷாத் அன்னை பராசக்தியின் குடும்பமே.

ஸௌச, சந்தோஷ, தபஸ்வாத்யாய, ஈஸ்வர பிரணிதானம் என்கிற கிரியா யோகத்தில் எக்காலமும் ஈடுபட்டு அடைந்த சமாதி நிலையில் உதித்த நூலாகும் **"சங்கர விஜயம்"**. அம்மையின் அகத்து நின்றும் உதித்த சிச்சக்தியின் பிரபாவமே சங்கர விஜயமாக விகஸித்துள்ளது. உள்ளத்திலுதித்த ஸத்குருவின் கருணைப்பரவசத்தை உலக மாந்தர்கள் களித்து உய்யும் பொருட்டே அம்மையவர்கள் இந்நூலை இயற்றி உள்ளார்கள். அருட்பா ரூபத்தில்

வெளியிடப்பட்டுள்ள இந்நூல் ஸாக்ஷாத் பகவான் சங்கரரின் அவதாரமாய் இவ்வுலகில் ஜனித்து ஷண்மதஸ்தாபனம் செய்து அத்வைத வித்தியையும், ஈஸ்வர பக்தியையும், நிஷ்காமயகர்மயோக நிலையையும் உபதேசித்து ஸர்வக்ஞ பீடத்தை அலங்கரித்து ஜீவர்களை உய்வித்து மறைந்த மூர்த்தி சங்கரரின் திக் விஜயத்தை விவரிப்பதாகும். இச்சரிதம் ஸம்ஸ்க்ருதத்திலும், திராவிட பாஷையிலும் இன்னும் இதர பாஷைகளிலும் எழுதப்பட்டுள்ளது. ஆயினும் சங்கீத சாஸ்த்திரத்தை அனுசரித்து இச்சரித்திரத்தை பாக்களாக இயற்றியுள்ள முதல் நூல் நமது சங்கர விஜயமாகும்.

சிவனின் வழிபாட்டில் ஸங்கீத ஞானத்தின் சிறப்பு சொல்லோணாது. ஸாமகானத்தின் மூலம் சங்கரர் சுலபமாக அடையப்பெறுகிறார். அம்மையும் தன் சங்கர விஜயத்தை ஸங்கீதத்திற்கு அமைந்த இனிய செய்யுள் பாக்களாகவே இயற்றியுள்ளது மஹோன்னதத்திற்கு தக்க சிறந்த ஸாதனையின் அனுபவத்திற்கே! சங்கீத உலகில் இது காலை மும்மூர்த்திகளே இருந்தனர். **"சங்கர விஜயம்"** அருளியது முதல் அம்மையும் சேர்ந்து நால்வராகவே திகழ்வர்!

சிந்தனைக்குரிய சிறந்த ஸங்கீதத்திலுதித்த சங்கர விஜயத்தை பாடியும், கேட்டும் பரவசமடைந்து அளவிலா ஆனந்தத்தில் லயித்து பரம புருஷார்த்தமாகிய ஆத்மானுபூதியை மக்கள் அடைவார்கள் என பிரார்த்திக்கிறோம்.

"யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"

காசி,
21-5-1966.

**யோகீச்வரானந்தன்.**





ஸகல வேதாந்த ஸித்தாந்த வித்வத் சிரோமணியாகிய
பிரம்மஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்களின்
வம்ச பரம்பரையைச் சேர்ந்த கோடக நல்லூர்
N. அப்பய்யா சாஸ்திரிகள் என்ற
ஆனந்தானந்தநாதர்.

# ERRATA.

| பக்கம் | | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 113 | 106 விருத்தம் 4 | தேசி | தேசிகன் |
| 142 | 142 ,, 4 | மங்ளமாய | மங்களமாக |
| 147 | 103 பாட்டு 6–5 வது வரியாக | — | நாதனே நானும் உரைத்தேன் (என்பது சேர்க்க) |
| 153 | 105 பாட்டு 2–4 | மாதர் | மாதவர் |
| 156 | 155 விருத்தம் 1 | அத்தவம் | கர்த்தபம் |
| 157 | 156 விருத்தம் 4 | கர்த்தவ | கர்த்தப |
| ,, | 108 பாட்டு 5-2 | விளங்கு | விளங்ககு |
| 227 | 141 பாட்டு 4–4 | ஶீ | ஸ்ரீ |
| 237 | 222 விருத்தம் 2 | பக்தனிர் | பக்தியின் |
| 256 | 155 பாட்டு 4–4 | | |
| 273 | 163 பாட்டு 2–3 | சுவை | அவை |
| 297 | 175 பாட்டு மெட்டு | ரூபசந்திரரே | ஸ்ரீ சந்திரரே |
| 304 | 178 பாட்டு அனு 2 | பரமனாகி | பரமன் ஆவி |
| | ,, 1–5 | வணாகிட லுற்றார் | வணங்கி உரைக் கலுற்றார். |

———o———

॥ श्रीरस्तु ॥

श्रुतिस्मृतिपुराणानां आलयं करुणालयम् ।
नमामि भगवत्पाद शङ्करं लोकशङ्करम् ॥

——:O:——

உ

ஸ்ரீமச்சங்கர பகவத்பாதேப்யோ நம: ॥

# நான்முகம்.

ஸ்ரீ கைலாஸபதியான பரமேச்வரன் தேவர்களின் ப்ரார்த்தனையை நிறைவேற்ற புனிதமான பாரதபூமியில் கேரளதேசமாம் பரசுராம க்ஷேத்ரத்தில் சசலக்ராமம் என்ற (காலடி) வேத வேதாங்கவித் ப்ராஹ்மணக்ரஹாரத்தில் வஸித்துவரும் ஸ்ரீ சிவகுரு ஆர்யாம்பிகை என்ற தம்பதிகளிடத்தில் அவதரித்து 72—துர்மதங்களை ச்ருதியுக்த்யனுபவத்தால் ஸமூலநாசம் செய்து ஆஸ்திக ஷண்மதத்தை நிலை நாட்டி ஜீவாத்மாக்களின் மூலாஜ்ஞானத்தைப் போக்கடித்து ஸ்வரூபானந்தத்தை அனுபவிக்கவும் தான் தானகவே இருக்கும் நிலையைப் பெற ப்ரஸ்தானத்ரய (உபநிஷத், கீதா, ப்ரஹ்மஸூத்ர) பாஷ்யங்களையும், இவைகளின் ஸாரமாக மந்தாதிகாரிகளின் பொருட்டு பலானப்ரகரணக்ரந்தங்களையும் பல பக்திஸ்தோத்ரங்களையும் 16 வயதிற்குள் இயற்றி பல மடங்களைஸ்தாபித்து திக்விஜயம் செய்து நிஷ்காம கர்மமார்க்கத்தை அஸ்திவாரமாக வைத்து

அத்வைதமதத்தை ஸ்தாபித்து ஸர்வஜ்ஞபீடமேறி அமானுஷ கார்யங்களை செய்துவிட்டு அவதாரக்ருத்யங்களை முடித்துக் கொண்டு 32–வது வயதில் திவ்ய மங்கள விக்ரஹத்துடன் வ்ருஷபாரூடராக கைலயங்கிரியை அடைந்தார், என்ற இம்மஹானின் சரித்ரம் பகவத்பாத பக்தர்களான யாவருக்கும் தெரிந்ததே.

இத்தகைய ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் திவ்யாவதார சரித்ரத்தை அபிநவ காளிதாஸன் முதலான பல மஹான்கள் விரிவாகவும் சுருக்கமாகவும் வரைந்திருக்கிறார்கள். பல பாஷைகளில் பாடல்களாகவும் வெளிவந்திருக்கிறது.

அபிநவ காளிதாஸர் வித்யாரண்யர் என்ற மஹானுலியற்றப்பட்டு, மாதவீய சங்கரவிஜயம் என்று உலகப்ரஸித்தி பெற்ற ஸ்ரீ சங்கர திக்விஜயம் என்ற புஸ்தகத்திலுள்ளபடி ஸ்ரீ சங்கரசரித்ரத்தை பாட்டு, விருத்தம், பல்லவி, அனுபல்லவி, சரணம், கண்ணிகள், தானம், கானம், என்றிவ்விதமாக கானசாஸ்த்திர நியமப்படி இயற்றி வெளிவந்திருக்கும் இப்புஸ்தகம் மக்களுக்குப் பேரானந்தத்தை உண்டுபண்ணி ஸ்ரீ சங்கர பக்தியைப் பெருகச்செய்யும் என்பதில் ஐயமில்லை.

இதில் சங்கராவதாரம், மண்டனமிச்ர ஸம்வாதம், முதலான பலான கட்டங்கள் வெகு அழகாக ப்ராஸங்களுடன் அமைந்து கேட்கக் கேட்க ஆனந்தமும் புது உணர்ச்சியும் ஏற்படுத்துவது குறிப்பிடத்தக்கது. இதை இயற்றியவர் A. S லக்ஷ்மி அம்மாள் என்ற திருநாமம் கொண்டவர்கள். அம்மாளுடைய தீக்ஷா நாமம் மஹாலக்ஷ்மீ அம்பா என்று. இந்த சங்கர திக் விஜயம் என்ற புஸ்தகத்தை 15 வது வயதிலிருந்து செய்து வருகிற

ஸ்ரீ சங்கர பூஜா விசேஷத்தாலும். திருநெல்வேலி ஜில்லாவில், கோடகநல்லூர் அக்ரஹாரத்தில் ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் வம்சத்தில் உதித்து ஆனந்தானந்தநாதர் என்று தீக்ஷாநாமம் பெற்ற ஸ்ரீ அப்பய்யா சாஸ்த்ரிகள் என்ற தந்தையின் சிக்ஷை அனுக்ரஹத்தாலும் அத்வைதானந்தர் என்று தீக்ஷாநாமம் பெற்ற ஸ்ரீ நீலகண்ட சாஸ்த்ரிகளான பாட்டனாரின் பரிபூர்ணனுக்ரஹத்தாலும் எழுதியிருக்கிறார்கள்

மேலும் 1) ஸர்வவேதாந்தஸார–ஸமரஸ அத்வைத கீர்த்தனம்.

2) த்ரிபுராரஹஸ்யத்தில்– ஹேமலேகை சரித்திரம் ராக்ஷஸோபாக்யானம்

3) க்ஷேத்ரப்பாடல்

4) குருமணிமாலை

என்ற புஸ்தக ரத்னங்களையும் இயற்றியிருக்கிறார்கள்.

இவ்வித அபூர்வக்ரந்தங்களை இயற்றியிருப்பது நம் பாரத பூமிக்கே பெருமையாகும். தர்சம்யம் அஸிவரணமத்யப்ரதேசமாயும் முக்தி க்ஷேத்ரமாயுமுள்ள வாராணஸீ க்ஷேத்ரத்தில் ஸ்திரமாக வஸித்தும் அவ்வப்போது பல இடங்களில் ஸுவாஸினீ மண்டலீ என்ற ஸபைகளை ஏற்படுத்தி தானியற்றிய வேதாந்த ஸாரம் பக்திரஸம் ததும்பிய பல பாடல் க்ரந்தங்களை கானத்துடன் கற்பித்தும் பல சிஷ்யஸுவாஸினிகளுக்கு ஸ்ரீவித்யாபரமான பல மந்த்ரங்களை உபதேசித்தும் மக்களுக்கு ஜன்மஸாபல்யத்தை உண்டு

பண்ணி தன் வாழ்கையையே லோக ஸமுன்னிதிக்காக அர்ப்பணம் செய்திருக்குமிப் புண்ணியவதியான அம்மாளுக்கு கைமாறு செய்வது இந்த புஸ்தகங்கள் வாங்கி ஒவ்வொரு வீட்டிலும் வைத்து நன்ருக படித்து ஆனந்தத்தை அனுபவிப்பதேயாகும்.

—: சுபம் மங்களம். :—

இப்படிக்கு,

*காலடி H. சுப்ரஹ்மணிய சாஸ்த்ரிகள்,*

பண்டிதவர, ஸலக்ஷணவேத, வேதாந்த வித்வான்,

வேதாந்த சிரோமணி,

*30. பெரிய தெரு, திருவல்லிக்கேணி,*

*சென்னை 3.*



சத்குருவே துணை.

# முகவுரை.

அன்பர்களே, பெரியோர்களே,

ஸத்குருநாதன் அருளாலும், தாயாகியும் உபாஸனா மூர்த்தியாகியும் விளங்கும் அன்னபூரணியின் அனுக்கிரகத்தினாலும், ஜெகத்குருவின் திவ்விய சரித்திரத்தை என் சிற்றறிவுக்கு எட்டியவாறு, விருத்தம், பல்லவி, கண்ணிகள், கும்மிகள், காவடி சிந்து, நோட்டு முதலிய அநேக மெட்டில் எழுதி இருக்கிறேன். ஆஸேது ஹிமாசலம் மிகமிக விரிந்தோங்கும் சங்கரரின் புகழை புகல ஒருவித யோக்கிதையுமில்லா அபலையாகிய எனக்கு என்ன சக்தி இருக்கிறது? இல்லை. ஆனாலும் என் மனதில் பால்யத்திலிருந்தே சங்கர விஜயம் எழுதி பாடவேண்டும் என்ற ஆவலானது என்னை மிகவும் வற்புறுத்தி கொண்டே இருந்தது. நீங்க சங்கரரின் திக்விஜயத்தை எத்தினையோ பண்டிதர்கள் எத்தினையோ பாஷைகளிலும் படித்த பெண்மணிகள் கீர்த்தனரூபமாகவும் எழுதி அச்சிட்டிருக்கிருக்கிறார்கள். இப்படி இருக்க படிப்போ ராகதாளங்களோ ஏதும் அறியாத நானும் சங்கர திக்விஜயத்தை கீர்த்தனரூபமாய் எழுதி அச்சிட துணிந்தது பேதமையே.

15 வயதிலிருந்தே வேதாந்த சிரவணம் செய்து சங்கரரின் புகழையே பாடி வந்தேன். ஸத்குருநாதன் கடாக்ஷத்தால் ஸர்வவேதாந்த ஸித்தாந்த அத்வைத

கீர்த்தனமும் திருபுர ரஹஸ்யம், ஸ்த்லஸங்கமாகாத்மயம் என்ற ஹேமலேகா சரித்திரமும், ராகூஷஸோபாக்கியா னகும்மியும், க்ஷேத்திர பாடல்களும், அத்வைத ஸத் குரு மணிமாலையும் எழுதி குருநாதன் அருளால் அச் சிட்டு அன்பர்களுக்களித்து அங்காங்கு அத்வைத ஸங் கங்களையும் அமைத்து வந்தும் என் மனம் சாந்தியடை யவில்லை. சங்கரவிஜயம் எழுதவில்லையே என்ற குறை யானது என்னை மிகவும் துன்புறுத்தியது. சிருங்ககி ரிக்குச் சென்று ஆச்சாரியர் சந்திரசேகரபாரதி சுவாமி களைக்கண்டு அவர் அனுக்கிரஹத்தைப் பெற்று கொண்டு எழுத ஆரம்பித்தேன், பராசக்தியின் அனுக் கிரஹத்தால் சங்கர திக்விஜயம் பூர்த்தியடைந்தது. இந்த கீர்த்தனத்தை அச்சிட்டு அதன் மூலமாக சங்கர ரை பவனி செய்ய வேண்டும் என்ற ஆவல். அதை சங் கரர், சாரதா தேவியின் அருளால் பரசுராம க்ஷேத்தி ரமாகிய பாலக்காடு எஜுகேஷனல் ஸப்ளைஸ் டெப் போ, வாணிவிலாஸ் அச்சகம் உரிமையாளர் ஸ்ரீ டி. ஜி. சேஷய்யர் அவர்கள் முகாந்திரம் நிறைவேற் றிவைத்தார். என் தந்தையாகவும் வித்தியா குருவா கவும் விளங்கும் ஆனந்தானந்தர் அனுக்கிரஹத்தா லும், பரம குருவாகிய அத்வைதானந்தரின் பிரேரணை யாலும், நரஸிம்ஹானந்தராகிய பரமேஷ்டி குருவின் கருணாவிலாஸத்தாலும், சிறு வயதுதொட்டு, குளமும் தாமரையும் போலும், கண்ணும் இமையும் போலும் இணைபிரியாது இருந்துகொண்டு வேதாந்த விசாரத் திலும், தேவி உபாஸனையிலும் ஒன்றாய் கலந்து ஸம்ர க்ஷித்துவரும் என் அருமை சகோதரர் ககனாநந்தனின் ஒத்தாசையாலும்,

ஆதி சங்கர பகவத்பாதர் அமைத்த சாரதா பீடத்தை அலங்கரித்து வரும் அபிநவ வித்யாதீர்த்த சங்கர பகவத்பாதாள் அருளாலும் காமகோடி பீடத்தையலங்கரித்து கொண்டு ஸகலருக்கும் அருள் மழை பொழிந்துவரும் கும்பகோணம் சங்கராசாரியரின் அருளாலும் இச் சங்கரவிஜயம் எழுதி அச்சிடும் பாக்கியம் கிடைத்தது. இதில் அநேகம் பிழைகள் சிக்கல்கள், இருக்கலாம், அதை எல்லாம் பொருட் படுத்தாது. 'சங்கரா' என்ற நாமத்தை உத்தேசித்து அபலையான என்னை அனுக்கிரகித்து இச் சங்கர விஜயத்தையும் ஏற்று கொள்ளும் படி ரொம்பவும் தாழ்மையுடன் கேட்டு கொள்ளுகிறேன்.

மெத்தவும் சிரமத்தை பாராட்டாமல் இப்பணியில் ஈடுபட்டு இரவும் பகலும் உழைத்து சங்கர விஜயத்தை அச்சிட்டு புகழுடன் பவனிவரச்செய்த ஸ்ரீ. சேஷய்யர் அவர்களுக்கும் அவர் குடும்பத்தவர்களுக்கும் உதவியாளர்களாய் இருந்து அச்சு கோர்த்து பிழைதிருத்தி அச்சிட்ட இதர சகோதரர்களுக்கும் குருநாதன் ஆனந்தானந்தன் அனுக்கிரஹத்தாலும் உபாஸனு மூர்த்தி அன்னபூரணி அருளாலும் மேலும் மேலும் சகல பாக்கியங்களும் உண்டாக குருநாதனை வேண்டிக் கொள்ளுகிறேன். அத்துடன் என் நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

எ. எஸ். லெக்ஷ்மியம்மாள் தமிழ் உரை எழுதி உதவிய காசி வாசி யோகாநந்தருக்கும் சங்கர விஜயத்

தைப் பார்த்து பரிசோதித்து நூன்முகம் எழுதி உதவி செய்த, காலடி எச். சுப்பிரமண்ணிய சாஸ்திரிகளுக்கும் ராக, தாளம் அமைத்து தந்த ராமேஸ்வரம் கல்யாண சுந்தர சாஸ்திரி அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,

ஏ. எஸ். லெக்ஷ்மி அம்மாள்,

சிவகாசி.



ஸ்ரீ

ஸத்குருவே துணை.

ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாரவிந்தாப்யாம் நம:

சாரதாம்பிகாயை நம:

ஸ்ரீமத் வித்யாரண்ய ஸத்குருப்யோ நம:

ஸ்ரீ மஹா கணபதயே நம:

# ஸ்ரீ சங்கர திக்விஜயம்

## பாட்டு.

### 1. விருத்தம்.

சங்கரன் புகழை இந்த தாரணி தனில் உரைக்க
சங்கரன் ஈன்றெடுத்த ஐங்கரத்தோனே வந்து
சங்கை இல்லாமல் நானும் சாற்றிட அருள்மிகுந்தே
மங்களமாக செய்வாய் மானிலத்தோர்கள் போற்ற.

### 1. பாட்டு—கணபதி துதி

தாளம்: த்ருபுடை] பல்லவி [ராகம்: நாட்டை

கணபதியே குணநிதியே குருபரன் புகழ் பாட
அருள்புரியே

அனுபல்லவி

மணம் திகழ் மலரடி மகிழ்ந்து தினம் பணிந்து
மகத்துவமான கதை மண்ணில் உரைத்திடவே

சரணம்

1. துஷ்டமத மடக்கி சிஷ்டரைக் காக்கவே
இஷ்டமுடன் சிவகுருவின் மகவாய் வந்து

அஷ்டதிக்கும் ஜயித்து அத்வைதத்தை ஸ்தாபித்து
கஷ்டமெல்லாம் தவிர்த்த கருணை வள்ளலைப்பாட (கண)

2. பத்மாஸனியாள் பாதம் பாங்குடனே பணிந்து
பக்தர்கள் பாத தூளி சிரம் அணிந்து
சித்தம் தனில் நினைந்து தீவிரமாய் துணிந்து
மெத்த ஆனந்தமாக மேன்மையுடன் உகந்து (கண)

## 2. விருத்தம். கலைவாணி ஸ்துதி.

கவிவாணர் போற்றும் கலைவாணியே உமது
கருணைகடாக்ஷமதினால்
புவி மீதில் மிக்க புகழ் ஓங்கி வாழும் புனித
சரித முரைக்க
தவறுமல் வந்து தளராத சிந்தை தந்தே
அருள் புரிகுவாய்
தவ ராஜனான குருராஜன் திவ்விய சரிதம்
உரைக்க நானே.

## 2. பாட்டு. சாரதா ஸ்துதி

தாளம்: ஆதி] [ராகம்: கமாசு

சாரதையே வருவாய்—சங்கர விஜயம் இத்-
தாரணியிலுரைக்க.

அனுபல்லவி

1. போராத ஆனந்த பேரின்ப வாரிதியே
சீரதாய் இக்கவிக்கு சிறக்க அருள்ததியே (சார)
2. தேவர்கள் துயர் தீர்க்க சிவகுருவின் மகவாய்
ஆவலாய் புவிவந்த ஹரன் புகழை புகல்வாய் (சார)
3. ஆரியாம் பிகையின் அகம் மகிழ்ந்திட தினம்
சீராய் லீலைகள் செய்த திவ்விய கதையுரைக்க (சார)

4. மங்கையின் தரித்திரத்தை தாங்காமல் செய்திடவே
தங்க நெல்லிக் கனி தந்தோன் கதை சாற்றிட (சார)

5. பால பருவத்திலே சீலமுடன் ஸந்நியாஸக்
கோலம் கொண்டு இந்த ஞாலம் நடந்த கதை (சார)

6. கோவிந்த பாதரை தாவி பணிந்தவரால்
மேவியே துரிய ஆசிரமம் பெற்ற கதை (சார)

7. ஸூத்ர பாஷிய மியற்ற பார்த்து வியாசர் மகிழ
வாழ்த்தியே வயதுமேலும் பதினாறென்ற கதை (சார)

8. ஜைமினி சூத்திரத்தை ஜகமெங்கும் அனுஷ்டிக்க
ஜயங்கொண்ட குமரிலா பட்ட பாதர் கதையை (சார)

9. மண்டனப் பண்டிதரை வாதில் ஜயங் கொண்டு
மண்டலம் புகழுவே தொண்டராய் செய்த கதை (சார)

10. யோகத்தினால் தேகத்தைத் தியாகம் செய்த அமருகன்
தேகத்தில் ஏகி காம போகம் புஜித்த கதை (சார)

11. அக்கிரமத் தொழில் கொண்ட உக்கிர பைரவன் தன்னை
நிக்ரகித்து ஜயம் கொண்டோன் புகழ்பாட (சார)

12. அஸ்தாமல கரையும் அழகாய் தோடகரையும்
உத்ஸாகத்துடன் சிஷ்யனாக்கிக் கொண்ட கதை (சார)

13. பத்ம பாதர் முதலாம் பாங்காம் சிஷ்யர்களுடன்
எத்திக்கிலும் ஜெயித்து ஏக புகழ் கொண்டகதை (சார)

14. ஸர்வக்ஞ பீடமென்ற சார்ந்த நின் பீடத்தில்
ஸர்வக்ஞராய் அமர்ந்த சங்கர திக்விஜயத்தை (சார)

15. சிருங்க கிரி தன்னில் சிறக்க பீடம் அமைத்து
சங்கரா சாரி யரான புகழ்பாட (சார)

16. பத்மாஸனி யாக பாரில் குருவாய் வந்து
அத்வைத ஞானத்தை அருமையுடன் போதித்த (சார)

## 3. விருத்தம் வித்யாரண்யர் ஸ்துதி

அத்வைதம் தனை போதித்து அவனியில் பேதம் தீர்த்து
நித்தியானந்தமாகும் நிலையதை அனுக்கிரகித்து
ஸத்திய போதம் தன்னைசார்ந்தவர்க்குபதேசித்து
வித்யாரண்யர் பாதம் விளங்க நம் சிரமேற் கொள்வோம்.

## 4. விருத்தம் சங்கரர் ஸ்துதி

கங்கை சந்திரனை விட்டு கேரள தேசம் தன்னில்
துங்க ஞானம் மிகுந்த சிவ குரு மகவாய் தோன்றி
அங்கையில் நெல்லி என்ன அத்வைதம் தனை போதித்த
சங்கர பகவத் பாதர் தன் சரண் நம் தலைக்கே

## 5. விருத்தம் அவையடக்கம்

தத்துவ ஞானம் பெற்ற ஸாது ஸங்கத்தினாலும்
சித்தத்தில் அமர்ந்த போத சித்பரை அருளினாலும்
இத்தரை தன்னில் அத்தன் சரிதமே சாற்றலுற்றேன்
ஸத்துக்களே குற்றங்கள் ஸகித்தெனை அனுக்கிரகிப்பீர்

## 3. பாட்டு குருஸ்துதி

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: பிலஹரி

ஜெகத்குரு பாதம் பணிவாய் தினமும் நெஞ்சே

அனுபல்லவி

யுகந்தோரும் யுகந்தோரும் உகந்தவதாரம் செய்து
அகமகிழ்ந்து தர்மத்தை அவனியில் தாபித்த

சரணம்

1. சஞ்சலம் வேண்டாமினி தஞ்சமென்றே பணிந்து
ஸத்குருவின் திவ்விய பாத தூளியணிந்து
கொஞ்சமும் ஸந்தேகமில்லாமலே துணிந்து
கூறுவாய் குருபரன் சரிதம் மிக உகந்து (ஜெகத்குரு)

2. பக்தர்கள் பாடியே பாரெங்கும் புகழ்ந்திடும்
ஸித்தர் கொண்டாடியே திக்கெட்டும் திகழ்ந்திடும்
முக்தர் கொண்டாடியே முக்காலும் மகிழ்ந்திடும்
அத்தன் அவதாரம் அவனியில் சிறந்திடும் (ஜெகத்குரு)

3. பத்மாஸனியாக பாரில் குருவாய் வந்து
தத்துவ உபதேசம் ஸந்தோஷமாக தந்து
நித்திய நிர்குண நிர்மலமாய் உகந்து
ஸத்திய ஞானனந்த ஸாகரத்தில் கலந்து (ஜெகத்குரு)

## 6. விருத்தம்.

சஞ்சலம் ஏனோ நெஞ்சே ஸத்குரு சரிதம் சாற்ற
தஞ்சமென்றவர் பாதத்தை ஸந்ததம் சார்ந்து நின்றால்
அஞ்சேலென்றுதரித்து அனுக்கிரகித்து அருள்வார் ஐயன்
வஞ்சமில் மனமதாகி வள்ளலைப் பாடுவாயே

## 4. பாட்டு

தாளம்: ரூபகம்] பல்லவி [ராகம்: பைரவி

பயம் வேண்டாம் மனமே நீ
பகருவாய் பாரினில் பாங்காய் சங்கர சரிதம்

அனுபல்லவி.

சுயம் ஜோதியான குருநாதன் அருள் புரிவான்
சுத்தமன முடனே தூய பாதம் பணிவாய்

சரணம்.

1. வாக்கில் வைகரி யாகி வசனிப் பவன் குருவே
நீக்கமற நிகழும் நித்தியானந்தம் குருவே
ஏக்கம் தவிர்த்து உன்னை இயம்பச் செய்வோன் குருவே
போக்கு வரவுமற்ற பிரம்ம வஸ்து குருவே (பயம்)

2. பத்மாஸனியாய் வந்த பாதபத்மம் பூஜித்து
சித்தமதில் ஸந்தேகம் சற்றுமின்றி தியஜித்து
அத்தன் அடிபணிந்து அவன் அருளை புசித்து
ஸத்துக்கள் இடத்தினில் ஸதா ஆசியையாஜித்து (பயம்)

## 7. விருத்தம்

சங்கர சரிதம் தன்னை சாற்ற ஆனந்த மாகும்
சங்கர சரிதம் தன்னை கேழ்க்க பேதங்கள் போகும்
சங்கர சரிதம் நம்மை சார்ந்தவன் பிறவி நீக்கும்
சங்கர சரிதம் நம்மை ஸமரஸமாக்கி வைக்கும்.

## 5. பாட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: சங்கராபரணம்

சங்கர சரித்திரம் ஆனந்தம்
சாற்ற சாற்ற (சங்கரர் சரித்திரம்)

அனுபல்லவி

1. எங்கும் மங்கள மிக ஓங்கும்
அருளமுதம் பொங்கும்
அன்பருளத்தில் தங்கும்
ஸந்தேகமெல்லாம் நீங்கும் ... ஸமரஸமாய்
(சங்கர சரித்திரம்)

2. ஏற்றி ஹரன் புகழை சாற்றி
அஞ்ஞான இருள் நீற்றி
அகண்டன் பாதம் போற்றி
அன்பாய் ஸ்துதித் தேற்றி .... அனு தினமும்
(சங்கர சரித்திரம்)

3. ஓட்டி பேத வாதியை வீட்டி
அத்துவைத ஸ்தம்பம் நாட்டி
நாதாந்த வெளி காட்டி
நான்மறை பொருள் கூட்டி .... உரை செய்த
(சங்கர சரித்திரம்)



# சங்கரர் சரித்திரம் ஆரம்பம்



பிரும்மன் முதலான தேவர்கள் கைலாசத்திற்குச் சென்று பரமேசுவரனை சரணமடைந்து ஸ்துதிக்கின்றார்கள்.

## 8. விருத்தம் - தேவர்கள் ஸ்துதி.

ஹர ஹர சம்போ போற்றி அடிமுடியற்றாய் போற்றி
புரமூன்றும் எரித்தாய்போற்றி புராதன போற்றி முன்னாள்
சராசர உயிர்களுக் கெல்லாம் தந்தை தாய் ஆனாய் போற்றி
பராபர பொருளே இன்னாள் பார்த்தருள் புரிவாய்போற்றி.

### நாமாவளி

சம்போ கங்காதரா — சங்கர கிருபாகரா
நின் பாதமே கதி — நிற்குண நிராதரா
பக்த பரிபாலகா — பாப விமோசகா
முக்தி பிரதாயகா — மும் மூர்த்தி நாயகா
கஜமுகஷண்முக கௌரி ஸமேதனே
வசன ரகிதனே வஸ்து சொரூபனே.

## 6. பாட்டு

மானஸஸஞ்சரரே—என்ற மெட்டு.

தாளம்-ஆதி] பல்லவி [ராகம்-சாமா

அடைக்கல மென்று வந்தோம் — ஹே பிரபோ

அனுபல்லவி

கடைக்கண்ணால் பார்த் தெங்கள் கவலைகளை தீர்த்து
இடுக்கண்ணெல்லா மகற்றி ஈடேற்ற வேண்டும் சம்போ

சரணங்கள்

1. பௌத்த மதம் மிகுந்து பாரெங்கும் வியாபித்தார்
பரவியே இருள் மூடி பாஷண்டராய் பிரமித்தார்
தவிர்த்து தர்மங்களெல்லாம் தன்மதத்தைபோதித்தார்
ஸத்கர்மம் செய்வோரையும் ஸந்ததமும் தண்டித்தார்.
(அடைக்கலம்)

2. வர்ணாசிரமதர்மத்தில் வாஞ்சையில்லாமலே
வையகத்தில் போக போக்கியமே மெம்மேலே
நிர்ணயம் இது என்று எண்ணுமல் புவிமேலே
நீசாசாரம் கொண்டு நிலைகெட்டார் இக்காலே.
(அடைக்கலம்)

3. ஸந்தியா வந்தனம் முதல் ஸத்கர்மத்தை விடுத்தார்
தனித்தனியாய் ஒரு சார்ந்த மதம் ஸ்தாபித்தார்
நிந்தித்து ஸந்நியாஸ ஆசிரமத்தை வெறுத்தார்
நிகிலம் தனில் பௌத்த மதத்தை மிக விரித்தார்.
(அடைக்கலம்)

3. யாகாதி கர்மத்தின் ஆஸக்தியை ஒழித்தார்
தியாகம் செய் வோரையும் தன் வழிக்கே அழைத்தார்
மோகத்திலும் போகமுண்டு மிக செழித்தார்
போக பரலோக மில்லை என்றே மறுத்தார்
(அடைக்கலம்)

4. சைவ வைஷ்ணவம் முதல் ஸகல மதங்களிலும்
சங்கை யில்லாமலே தாரணி எங்கிலும்
உய்யும் வகையில்லை உம்மையல்லாமல் மூக்காலும்
உகந்தவதனத்திந்த உலகை கார்ப்பீர் மேலும்
(அடைக்கலம்)

பிரம்மாதி தேவர்களின் பிரார்த்தனைக்கு அம்பிகாபதி இணங்கி "அமரர்களே அஞ்சவேண்டாம்; நாம் மண் உலகில் அவதாரம் செய்து உங்கள் அபீஷ்டத்தை நிறைவேற்றுவோம்" என்றருளினர்.

## 9. விருத்தம்

துஷ்டரை நிக்கிரகிக்க துருஸ⁻டன் அவதரிப்போம்
சிஷ்டராம் வியாசர் செய்த சிறந்த சூத்திரமதற்கு
கஷ்டமாய் பாஷியம் செய்து துலங்க சிஷ்யற்குரைத்து
கஷ்டமெல்லாம் தவிர்ப்போம் கவலை நீர் கொள்ள
வேண்டாம்.

## 10. விருத்தம்

அஞ்ஞான இருளை நீக்கி அகண்ட ஞானம் போதிப்போம்
விஞ்ஞான வாதிகளுக்கு விளங்கவே வழியுரைப்போம்
எஞ்ஞான்றும் ஏகமென்று எங்கிலும் பறையடிப்போம்
ஸ⁻ஞ்ஞான சூரியன் என்ன தொல்லுலகத்துதிப்போம்

## 7. பாட்டு

தாளம்: ஏகம்] பல்லவி [ராகம்: நாதநாமக்ரியை

அவதாரம் செய்வோம் அவனியில் நாமிப்போ

அனுபல்லவி

அவதாரம் செய்குவோம் அஞ்சவேண்டாமினி
அமரர்களே நீங்கள் ஆனந்தமாய் செல்வீர்

சரணம்

1. மண்ணை விண்ணாக்கிட இந்திரன் ஏகட்டும்
புண்ணிய கர்மம் செய்ய பிரம்மன் புறப்படட்டும்
பண்ணைப் பரப்பிட பரந்தாமன் பார்க்கட்டும்
எண்ணிய படி செய்ய குமரனும் போகட்டும் (அவ)

2. கீர்த்தி நிறைந்தோர் கேரளதேசத்தில்
ஆர்த்தியை தீர்த்திட ஆரியையின் கர்ப்பத்தில்
மூர்த்தீ கரித்து முக்காலம் உணர்ந்ததில்
சீர் நிறைந்த அந்த சிவகுரு இல்லத்தில் (அவ)

## 11. விருத்தம்

கதிரவன் ஒளியை மேவி கமலம் வாய் திறப்பதே போல்
கடைக்கண்ணால் கர்தன் பார்க்க கார்த்திகேயனுமறிந்து
துதிபெறும் திங்கள் கண்ட சிறந்த பார்கடலே என்ன
துங்க ஆனந்தம் கொண்டு துலங்கிட ஸ்கந்தன் மேலே
நதியணி கடவுள் சொல்வார் நலமுடன் குமரனே நீ
நன்மையாய் கர்மம் பக்தி நவின்றிடு உலகர்க்கென்றார்
ததி இது தரணிதன்னில் சார்ந்து விப்ரர் குலத்தில்
சடுதியில் அவதரித்து ஸத்கர்மம் புரிவாய் என்றார்.

## 12. விருத்தம்

பன்னகராஜன் தானே பதஞ்சலி வடிவம் கொண்டு
தன்னகமின்றி யோகம் சாற்றுவான் சூத்திரத்தை
பன்னகசயனன் பக்தி மார்க்கத்தை பரப்பிவைப்பான்
உன்னித கர்மம் செய்ய உகந்து பிரம்மன் பிறப்பார்.

## 8. பாட்டு

ஐந்து வயதிலே — என்ற மெட்டு
கிளிகண்ணிகள்

1. வேதம் பிரமாண மென்று ஸௌகதமதம் தன்னை
வென்று ஜெயம் கொள்ளுவாய் குமரா
பேதமெல்லாம் தவிர்ப்பாய் குமரா
2. விப்ரர் குலத்தில் பிரம்மன் மேவியவதரித்து
சுப்பிரமண்ணியா உனக்கு துணைபுரிவார்
ஒப்பிலா கர்மம் செய்வார்
3. இந்திரன் புவிதனில் சுதன்வா என்ற பெயரால்
சுந்திர மாகிஷ்மதி பட்டினத்தை
சுதந்திரமாக ஆள்வான்

4. தந்தையுரைத்த மொழி ஸ்கந்தனும் கேட்டுகந்து
அந்தப்படி செய்குவோம் எந்தையே
வந்தனம் தந்தோ மென்றார்

## இந்திரன் பாகிஷ்மதி பட்டினம் ஏகுதல்.

---

### 13. விருத்தம்

ஹரன் திரு உரையை கேட்டு அமரேசன் ஆமோதித்து
திறப்பட உலகை எல்லாம் சீர்பெற செய்வோமென்று
பரம ஸந்தோஷம் கொண்டு பரனடி பணிந்து போற்றி
கரமதை சிரம் குவித்து களித்து ஆ உலகில் வந்தார்.

### 9. பாட்டு

தில்லையம்பலஸ்தலம்—என்ற மெட்டு

தாளம்: ரூபகம்] கண்ணிகள் [உசேனி

1. பிரஜைகளை பரிபாலனம் செய்ய—அமரேசன் அப்போ
பிரதிக்ஞை செய்து பிறந்தார் உலகுய்ய
2. மண்ணுலகை விண்ணுலகமாக்கியே—மகிழ்ச்சியுடனே
கெண்ணிய மான குணத்துடன் நிறைந்தார்
3. தர்மமாய் பிரஜா பாலனம் செய்தார்—
ஸௌகதர்களின்
தர்மத்தையே தானும் அனுஷ்டித்தார்
4. ஸர்வமும் தான் அறிந்த போதிலும்—
அறியாதவர் போல்
ஸௌகதர் ஸபை யாகவே சிறந்தார்
5. சுப்பிர மணியர் வரவை நோக்கியே—
ஸுதன்வா ராஜன்
எப்பவும் மனம் ஏங்கி தயங்கியே

6. துஷ்டனுன தாரகன் தன்னை துலைத்த குமரன்
பட்ட பாதராகவே பிறந்தார்

7. எட்டுதிக்கும் கீர்த்தி மேவியே—ஏகமாக
மட்டிலாத மகிமையாய் வந்தார்

8. கங்குலை நீக்கும் கதிரவன் போலே—கார்த்திகேயனும்
இங்களென திகழ்ந்திட நின்றூர்

9. ஜைமினி செய்த வேத மார்க்கத்தை—விளக்க
எங்கிலும்
ஜெயித்துமே ஜெபமாகவே நின்றூர்

10. திசைகளெங்கிலும் சென்று மதஸ்தரை—பட்ட
பாதரும்
விசையாய் ஜெயித்து விரைந்து வந்தனர்

11. ஸுதன்வா ராஜன் நகரத்தை யடைந்தார்—அரசனும்
அப்போ
எதிர் கொண்டு உபசரித்துமே மகிழ்ந்தார்

12. வேதங்களின் உள் தாத்பரியம் அறிந்து—மீமாம்ஸ
சாஸ்த்திரத்தை
பேத மறவே சாற்றியே மிகுந்து

13. ஆசிகூறி அமரேசனுக்கப் போ—குமரேசனும் நன்றுய்
நேசமுடனே நிகழ்த்தினுர் பிரமிக்க

## 14. விருத்தம்

மன்னனின் ஸபை சோபிக்க மகிழ்ந்து யாவரும் களிக்க
அன்னிய மதஸ்தரான ஸௌகதர்தனை ஜெயிக்க
உன்னியே மனதில் எண்ணி—உகந்துமே ஸ்கந்தன் தானும்
மன்னிய காக மொன்றை மகிழ்ந்துமே பார்த்துரைப்பார்

## 10. பாட்டு

ஸ்ருஷ்டிக்கு முன் சச்சிதாநந்தமாகிய பிரும்ம் ஏகம்
என்ற மெட்டு

தாளம் : ஏகம்] கண்ணிகள் [ராகம் புன்னாகவராளி

1. அரசர் ஸபைதனில் அன்புடனே அமர்ந்து—பட்ட பாதர்
வரிசையாக ஒருவார்த்தை யுரை செய்வார் பட்ட பாதர்
2, சபையின் எதிரினில் தனித்தோர் மரத்தில் காகம் இருக்க
அபயம் அளிப்பவர் போலே அதை பார்த்து ஒன்றுரைக்க
3. காக்கை கூட்டங்களில் கூடி கரைகிறாய்—குயிலே
ஏக்கத்தினால் ஏனோ இப்படி அலைகிறாய் குயிலே
4. தன்னினம் தன்னோடே சேர்ந்து வாழ்ந்தாலன்றோ குயிலே
தன்பலம் தன்னுக் கறிய வரும் அப்போ குயிலே
5. துஷ்டருறவை துரத்தி விட்டால் இப்போ குயிலே
சிஷ்டனாகவே சிறந்திடுவாய் பார் குயிலே
6. இந்த கருத்தினை அந்த சபை யுளோர் அறிந்தார்
சிந்தை கலங்கி சினங் கொண்டுமே யவர் மிகுந்தார்
7. யுக்தியாகிய கோடாரியினால் அப்போ பட்டபாதர்
புத்த மத கொள்கையான மரங்களை வெட்டி விட்டார்
8. அதைக்கண்டு பௌத்தரும் அடங்காத அக்கினியாய் ஜொலிக்க
இதைக்கண்டு பட்ட பாதரும் தன் மதம் தன்னை சாற்றி நிற்க
9. அவரவர் மதங்களை அவரவர் ஸ்தாபித்தார் அந்தவேளை
அவனி முழுவதும் ஆகோஷமானது அந்த வேளை

10. பட்ட பாதருட யுக்தியாகிய வஜ்ராயுதத்தினலே
துஷ்ட மதமலை சிறகற்று வீழ்ந்தது அந்த வேளை

11. சித்திர பதுமையாய் சிறக்க செய்தார் அப்போ
பட்டபாதர்
புத்த மதஸ்தரும் புத்தி அயர்ந்தனர் அந்த வேளை

12. நிக்கிரகித்து ஸர்வமதங்களையும் நன்ருய் பட்டபாதர்
அக்கரையாகவே ஆதித்தியன் போல் நின்ருர்
பட்டபாதர்

13. அந்த பௌத்தர்களின் அகந்தையடக்கியே
பட்டபாதர்
சுந்திர வேதத்தின் சூக்ஷ்மத்தை போதித்தார்
அரசனுக்கு

## 15. விருத்தம்

வெற்றி தோல்வி ஈதென்று விளம்பிட ஒண்ணதந்தோ
கற்றறிந்தோர்களே நாம் கழறிடும் மொழியை கேட்பீர்
உற்ற இம்மலையின் உச்சி உகந்துமே எரி வீழ்ந்தும்
பற்றிய அபாயம் இன்றேன் பாங்குடன் ஜயித்தோன்
ஆவான்

## 11. பாட்டு

ஆரோபிதஜெகத்தெல்லாம் — என்ற மெட்டு

தாளம்: ஆதி] கண்ணிகள் [ராகம்: எதுகுலகாம்போதி

1. அரசன் மொழி கேழ்க்கவே அனைவர்களும்
ஒருவரை ஒருவர் முகம் பார்த்து நன்ருய்

2. வேதமே பிரமாண மென்று எண்ணும் குமரர்
வேதனை தவிர்க்க மலையுச்சியில் சென்ருர்

3. ஆகம வேதங்களே பிரமாணமாகில்
வேகமாய் கார்க்கட்டு மென்று எண்ணி மனதில்

4. நொடிக்குள் பட்ட பாதரும் குதித்திடவே
துடித்து பௌத்தவாதிகள் பிரமித்திடவே
5. தீய நெறியை ஒழித்து ஜெகத்தில் யார்க்கும்
தூய நெறி காட்டும் குருவாக யாவர்க்கும்
6. அங்ககுறையின்றி நிற்கும் அவரைக் கண்டு
அங்கம் பூரித்தரசன் ஆனந்தம் கொண்டு
7. வேதங்களே பிரமாணமாகக் கொண்டான்
பேதமதியை விட்டு புகழ்ந்து கொண்டான்

## 16. விருத்தம்

வேதமே ஸத்திய மென்றும் வேறான மதங்களெல்லாம்
விநோத மாத்திரம் வீண் என்றும்
வேதனை செய்யும் பேதவாதிகள் தன்னை வென்றும்
விளங்கவே வேதம் தன்னை விதைத்திட வேண்டும் என்றும்
ஸாதனையாலே இந்த தாரணி எங்கும் சாஸ்திரம்
சாற்றிட வேண்டு மென்றும் ஸந்தோஷமாக நன்றாய்
போதனை செய் வோமென்று புகன்றான் பூ பதியும் அப்போ
பௌத்தர்கள் அதனைக் கேட்டு பொறாமை கொண்டதுரைப்
பார்

## 12. பாட்டு

கனக ஸபாபதி தெரிசனம்— என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் தனுசு

இந்தப் பந்தயத் தினால் இவன் ஜெயித்தான் என்று
எண்ணுவது சிதமன்று ராஜே

அனுபல்லவி

மந்திரத்தாலும் மணி ஔஷதத்தா லுடலை
சுந்திரமாக்கிக் கொள்வார் சிந்தை தளர வேண்டாம்

சரணம்

1. துஷ்டர்கள் மொழி தன்னை
துரிசாய் ராஜனும் கேட்டு
கஷ்டத்தினல் கெட்டு கவலைக்குள் அகப்பட்டு
திட்டமாய் குடத்தினுள் தீயபன்னகம் விட்டு
செப்புவீர் இதற்குள் ளிருக்கும் பொருளை வெட்டு
இந்த

2. இந்த உண்மை யுரைத்தோர் மதங்களே இங்கு
நித்தியம்
பந்தைய மிதுவாகும் பகர்ந்திடுவீர் அகத்தியம்
எந்த விதத்திலும் நீர் தப்பி விடீர் பத்தியம்
எந்தனுக் கெடுத்து உரைத்திடுவீர் ஸத்தியம்

## 17. விருத்தம்

அரசனே நாளை வந்து அறைகுவோ மென்று பௌத்தர்
பரவசமாகி விப்ரர் பாங்குடன் மனம் மகிழ்ந்து
ஸரஸமாய் தவமியற்ற தாமரைத்தடாகம் சென்ருர்
கரஸரோருகத்தால் நன்ருய் கதிரவன்தனை பூஜித்தார்

## 13. பாட்டு

ப்ராரப்தம் பட்டால் என்ன—என்ற மெட்டு

தாளம்: த்ருபுடை] பல்லவி [ராகம்: யதுகுலகாம்போதி

தாமரை தடாகத்தில் தாழ்ந்து ஜலத்தில் நின்று
தவம் செய்தார் விப்ரோத்தமர்கள்

அனுபல்லவி

பாமரர்களாகிய பௌத்தர்களை துலைக்க
பாங்காய் அரசன் வைத்த பந்தயத்தில் ஜயிக்க

சரணம்

அஞ்ஞான இருள் நீக்கும் ஆதித்திய பகவானே
அகில முழுதிர்க்கும் அறிவூட்டும் சொரூபனே
விஞ்ஞானத்தை அளித்து வேதனை தீர்ப்பாய் தானே
வேந்தன் கேட்க்கும் மொழிக்கு விளங்கவை
யுறைதானே

## 18. விருத்தம்

பன்னகம் தன்னை வேந்தன் பந்தையமாய் அமைத்தான்
பயம் கொள்ள வேண்டாம் நீங்கள் பகருவீர் திடமதாக
என்று பானுவும் உரைத்து ஏகிட அந்த வேளை
எல்லையில் இன்பம் கொண்டு சென்றனர் சபையைநோக்கி
உன்னிய யுக்தியாலே உணர்ந்துமே பௌத்தரெல்லாம்
உகந்துமே உரைப் போமென்று உறுதி கொண்டவரும்
வந்தார்
மன்னன் சபையை நாடி மகிழ்ந்து எல்லோரும்கூடி
மாசரும் விவாதம் காண மற்றும் அங்குள்ளோர் வந்தார்

## 14. பாட்டு

சங்கரா-சிவசங்கரா—என்ற மெட்டு

தாளம்: ஆதி] [ராகம்: தோடி

1. சந்தோஷத்துடன் யாரும் வந்தனர்
அந்த ராஜசபையிலே
சிந்தை மகிழ்ந்து ஸுதன்வ ராஜனும் முந்தி ஈது
உரைக்கவே

2. குடத்தின் உள்ளிருக்கும் பொருள் தன்னை கூசாமல்
கூறுமென்கவே
படத்துடன் அரவம் உண்டென்றுபாங்காய் பௌத்தர்
பகரவே

3. ஸன்னகத்தின்மேல் பத்மனுபனும் பள்ளிகொண்டிருக்கிறுன்
மன்னனே என்று மகிழ்ந்து விப்ரர்கள் மலேயாமல் பதில் உரைத்தனர்

4. விப்ரர்கள் மொழி கேட்கவே வேந்தன் வந்து சிந்தை கலங்கினுர்
தப்பிதம் இவர் சாற்றினுர் என்று தன்னுள் மெத்த மயங்கினுர்

5. அந்த வேளேயில் ஆகாசவாணி அருள்வாக்கதை
சிந்தை தளரவேண்டாம் வேந்தனே செப்பியது ஸத்தியம் விப்ரர்கள்

6. அந்த மொழியை வேந்தனும் கேட்டு மந்தகாஸ முகத்துடன்
முந்தி சென்று குடத்தை மும்முறை வந்து ராஜனும் பார்க்கவே

7. ஆதிசேஷன் மேல் ஹரி அமர்ந்ததை ஆனந்தத்துடன் கண்டனர்
ஜோதிரூபன் திருவடிகளே ஸ்தோத்தரித்து மகிழ்ந்தனர்

## 19. விருத்தம்

அற்புத செய்கை கண்டு அரசனும் ஆமோதித்து
தூர்மத வாதிதன்னே துலேத்திட உத்திர விட்டான்
நிர்பயமாகி விப்ரர் நிகிலத்தில் வாழவென்றும்
கர்ம மார்க்கத்தை எங்கும் கருதிட உரைத்தார் நன்முய்

## 15. பாட்டு

நீ உரைப்பாய் அனுமானே — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: ஸ்ரீராகம்

கட்டளே இட்டான் ராஜன்
பௌத்தமதம் விரட்ட — கட்டளே இட்டான் ராஜன்

அனுபல்லவி

திட்டமாய் துஷ்டரை துலைத்து துருஸூடனே
எட்டுதிக்கிலும் வேத தர்மம் போதிக்கும்படி (கட்டளை)

சரணம்

ஆக்கவும் அழிக்கவும் ஊக்கமுள்ள மதமே
நீக்கமற நிகழும் நிர்மல மதமென்று
வைதிக கர்மத்தால் உய்யலாம் என்றறிந்து
கைதவமான அந்த பௌத்தர்களை துலைக்க (கட்டளை)

## 20. விருத்தம்

குகன் திரு அம்சமாகும் குமரிலாபட்டரப்போ
ஜகமதில் சிறந்ததான ஜைமினி ஸூத்திரத்தை
மிகப்பட யாரும் செய்து மேன்மையை அடைவதற்கு
அகமதில் நினைந்துகொண்டு அவ்விடம் விட்டேகினரே

## 16. பாட்டு

ஏகாக்கிரமாய் இருந்து பார் — என்ற மெட்டு

தாளம்: த்ருபுடை] பல்லவி [ராகம்: பியாகடை

கங்கு லகற்றியே கதிரோன் வருவது போல்
ஸ்கந்தனும் புறப்பட்டாரே

அனுபல்லவி

மங்களமாம் வேத மார்க்கங்கள் ஓங்கிட
துங்க ஞானம் செழித்து துன்பங்கள் நீங்கிட (கங்கு)

சரணம்

1. மறைகளாகிற மரம் தன்னை அழித்திட
மதம் கொண்ட பௌத்தர்கள் பலங்களை ஒழித்திட
கரையற்ற ஆனந்தம் கர்த்தனும் அளித்திட
நிறைமதி போலவே நிகிலத்தோர் செழித்திட (கங்கு)

2. மதம் பொழியும் பௌத்த மத யானையை கொல்ல
மகத்தான சிங்கம் போல் மதந்து அவரும் மெல்ல
இதமான வேத மார்க்கங்கள் எங்கிலும் சொல்ல
ஈசனும் உலகினில் அவதாரமாக நல்ல (கங்கு)

## 21. விருத்தம்

இப்படி யுலகமெல்லாம் இணையில்லா கர்மம் செய்ய
செப்பியே கந்தன் அப்போ சிறப்புடன் வாழ்ந்திருக்க
விப்ரர்கள் துன்பம்தீர்க்க விளங்கவே செழிக்கவென்று
இப்புவிதன்னில் ஈசன் தோன்றிட எண்ணம் கொண்டார்

விருத்தம்—21] [பாட்டு—16.

முதல் அத்தியாயம் முற்றிற்று.

— ★ ★ ★ —

# இரண்டாம் அத்தியாயம்.

## ஆசாரியர் அவதாரம்.

### 22. விருத்தம்

பாரினில் பிரவிர்த்தி மார்க்கம் பரவியே நிறைந்த பின்பு
நேரதாய் நிவிர்த்தி மார்க்கம் நிகிலத்தோர் குறைக்க
வென்றே
கேரள தேசம் தன்னில் கிருபையுடன் ஹரனும் அப்போ
சீரதாய் சுயம்புலிங்க மாகவே தோன்றினரே

### 17. பாட்டு

கோபிகாரணகோகுலோத்ஸவா— என்ற மெட்டு.

தாளம்: த்ருச்ரமிச்ரம்] [ராகம்: ஆனந்தபைரவி

1. வேதம் புகழ் விருஷபாசலம் தன்னில் மெத்த
கருணையால்
போதம் திகழ் பூரணாநதி கரையோர மதி தனில்

2. தோன்றினர் சுயம் ஜோதியாக சுயம்புலிங்க மதாகவே
ஈன்றளித்து அழிக்குமீசனும் இணை இலா அருள்
பொங்கவே

3. எங்கும் நிறைந்த மங்கள வஸ்து இங்கு லிங்க
வடிவமாய்
துங்க ஞான சொரூபமாய் சிவசம்புவும் ஆனந்தமாய்

4. வெட்ட வெளியில் விமலனும் லிங்ககாரமாகவிளங்கினர்
கஷ்ட மாற்றி கலியின் தோஷ மகற்ற கர்த்தன்
கருதினர்

5. காற்றுடன் கடும் வெய்யிலும் மழையும் மிக்க பொழியவே
சாற்றொண்ணு துயர் கொண்டவர் போல் சர்வேசனும் அங்குறையவே

6. தன் மகிமையறிந்து ஜீவர்கள் தன்மயமாக எண்ணியே
மன்னன் கனவில் மகிழ்ந்து செல்ல மகேசனும் அங்கு நண்ணியே

## 23. விருத்தம்

அரசனே நமக்கு கோயில் அன்புடன் அமைப்பீர் என்று
ஹரனும் ஆனந்தமாக அரைந்தவர் மறைந்து விட்டார்
தரணிபன் உணர்ந் தெழுந்து தன்னுளம் மிக உகந்து
திறனுடன் சிவனுக்கப்போ சிறக்க ஆலயம் அமைத்தார்.

## 18. பாட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : சுருட்டி

ஆலயம் கட்டிவைத்தார் — ஹரனுக்கு

அநுபல்லவி

காலம் தவராமல் களிப்புடன் பூஜைகள்
கோலாகலமாக செய்யக் கட்டளையிட்டார் (ஆல)

1. காலடி என்ற அக்கிரகாரம் அங்குண்டு
கால பயங்கள் இடுகிப் போவதும் உண்டு
சீலமான மிக அந்தணர்களுண்டு
காலகாலனைகண்டு கவலை கடந்தோர் உண்டு. (ஆல)

2. வித்தியாதிராஜன் என்ற ஓர் பேர் கொண்ட
மெத்தவும் எங்கிலும் மிக்க பிரஸித்திகொண்ட
உத்தமற்கே மகவாக பிறந்திட
அத்தனின் சித்தத்தில் எண்ணம் மிகுந்திட (ஆல)

## 24. விருத்தம்

வித்தியாதிராஜன் செய்த விமலமாம் தவத்தினாலே
இத்தரையோர்கள் துன்பம் எளிதில் தீர்ப்பதற்கு
புத்திரனாக இந்த புவிதனில் பிறக்கவென்றே
நித்தியானந்த ஜோதி நிகிலத்தில் தோன்றினாரே.

## 19. பாட்டு

ராஜனும் தசரதன் — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : சாவேரி

பிரம்ம தேஜஸுடன் பிரம்ம குலத்தில் சிவ
சம்புவும் தோன்றினாரே

அனுபல்லவி

அற்புத வடிவுடன் அமர குருவோ என்ன
சொற் பொழிவது கேட்டு ஸ்தோத்திரம் செய்தார் யாரும் (பிர)

சரணம்

1. சிவனுக்கு குருவாக இருப்பதால் அவருக்கு
சிவகுரு என்னவே சிறக்க நாமமுமிட்டு
பவ பய வினை யெல்லாம் பறந்து போகுமே விட்டு
தவ புதல்வனைக் கண்டு ஆனந்தத்துள் பட்டு (பிர)

2. குருகுல வாஸம் செய்து கோதிலா வித்தைகற்றார்
குவலய மெங்கிலும் கொண்டாடவே பெற்றார்
பருவத்துடன் காலை மாலைகளிலும் அக்கினி
காரியமது செய்து களிப்புடனே இருந்தார் (பிர)

3. வேதங்கள் நான்கையும் சாஸ்திரங்களாறையும்
வேதனை சற்றுமின்றி விரைவாய் விசாரம் செய்தார்
போதம் திகழ் பிரம்ம சாரியாக இருந்து
பூரண வித்தை கற்று பூரித்துள்ளம் மகிழ்ந்து (பிர)

## 25. விருத்தம்

சீடனின் திறமை கண்டு சிரக்க ஆனந்தம் கொண்டு
சேடமில் வித்தை எல்லாம் தெளிவுற கற்ருய் நன்ருய்
மாட மாளிகை சோபிக்க மகிழ்வுடன் இல்லறத்தை
தேடுவாய் என்று நன்ருய் செப்பினுர் குருவும் அப்போ

## 20. பாட்டு

பித்தம் தெளிய மருந்து — என்ற மெட்டு

தாளம் : ஆதி] கண்ணிகள் [ராகம் : நாதனுமகிரியை

பக்தி சிரத்தை நிறைந்த உத்தமனே உன்னை
பிரிந்திட மனம் வருமோ
மெத்தவும் தவம் செய்து பெற்ற தாய் தந்தையின்
சிற்றடி பணிந்து மகிழ்வாய்
பந்து வர்க்கங்கள் எல்லாம் சிந்தை மகிழ்ந்துமே
சீக்கிரம் எதிர் கொண்டு வருவார்
மந்தகா சத்துடனே அவர்களை மகிழ்விப்பாய்
மங்கள வாக்கியமே தருவார்
பக்குவ காலத்தில் பாணி கிரஹணம் செய்து
மிக்கவும் இல்லறம் கொள்ளுவாய்
தக்க சமயம் தன்னில் சத்புத்திரன் பிறந்து
எக்காலமும் அறம் செழித்து

## 26. விருத்தம்

சிறப்புடன் குருவும் சொல்ல சிவகுரு கேட்டு உகந்து
பரிவுடன் பாத பத்மம் பணிந்தவர் ஈதுரைப்பார்
நிரம்ப வைராக்கியம் உற்று நிர்மல ஞானத்தை பெற்ருல்
துறவறம் கொள்வதற்கு சொல்லுமோர் தடையும் உண்டோ
ஆகமவேதம் கற்ருல் அநித்திய ஸம்ஸாரத்தை
தாகமாயடைய வேண்டும் என்ற தாய் நேமமுண்டோ

மோகமாயா விகாரம் முற்றிலும் துறந்தவர்க்கு
வேகமாய் ராஜமார்க்கம் வேறுண்டோ குருவே என்றுர்

## 21. பாட்டு

என்றைக்கி சிவகிருபை — என்ற மெட்டு

தாளம்: த்ருபுடை] பல்லவி [ராகம்: முகாரி

இல்லறம் ஸுகம் தருமோ குருநாதா
இரண்டற்ற இன்பம் தான் வருமோ

அனுபல்லவி

அல்லும் பகலும் உமதடி மலர்க்கே தொண்டு
ஆயுள் மட்டும் புரிந்து ஆனந்தமாய் இறப்பேன் (இல்)

சரணம்

1. ஆரம்ப காலத்தில் ஆனந்த மிக காட்டும்
அகங்காரப் பேயுடன் அகப்படுத்தியே ஆட்டும்
போராத துன்பத்தை பேணிடும் படி நாட்டும்
பேத குணத்தினுல் போதம் இழக்க வாட்டும்
(இல்லறம்)

2. இல்லறம் பொல்லாத இல்லாமையால் வருத்தும்
இகபர மறியாமல் இவ்வுலகில் நிறுத்தும்
செல்வம் இல்லார் செய்ய தானதர்ம முண்டோ
சொல்வது என் கொண்டோ ஸ்ரீகுரோ இது நன்றே
(இல்லறம்)

3. செல்வம் மிக வரில் செருக்கும் மிகவரும்
செல்வத்தினுல் நன்மை தீமை அறியாமல் கெடும்
எல்லா விஷயத்திலும் எப்பவும் மனம் நாடும்
நல்லோர் பெரியோரையும் நாடொட்டாமல் ஓடும்
(இல்லறம்)

4. காமாதி கள்வர்கள் கைகொண்ட ஸம்ஸாரம்
ஏம நேமாதிகளை இழந்திடும் ஸம்ஸாரம்
தாமத குணத்தினுல் தள்ளாடும் ஸம்ஸாரம்
பூமானந்தத்தையும் புறக்கணிக்கும் ஸம்ஸாரம்
(இல்லறம்)

5. அகங்காரத்தால் மிக ஆட்டிவைக்கும் ஸம்ஸாரம்
தீங்கான மார்க்கத்தை தீண்ட செய்யும் ஸம்ஸாரம்
நீங்காத மோகத்தால் நிலை கொள்ளாது ஸம்ஸாரம்
பாங்காய் கருணை வைத்து பார்த்திடுவீர் இந்நேரம்
(இல்லறம்)

## 27. விருத்தம்

இப்படி குரு சிஷ்யர்கள் இயம்பியே இருக்க அங்கு
அப்பொழு தன்பர் சூழ வித்தியாதி ராஜன் வந்தார்
ஒப்பிலா அவரைக் கண்டு உள்ளம் பூரித்துகந்து
செப்புவார் வாக்கியம் ஒன்று சிந்தை பூரித்து நின்று

## 22. பாட்டு

பிரித்துபாரடா — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: உசேனி

கழலடி பணிந்தார் கற்ற பெரியோர்
முற்றும் உணர்ந்த வித்தியாதி ராஜனும்

அனுபல்லவி

பழவினை எல்லாம் கழலும் படிக்கு
பாங்குடன் பலகலையும் போதித்த

சரணம்

1. இதம் தரும் நல்ல விவாகமதனை
இஷ்டமாய் மைந்தனுக்கு செய்யவே முன்னே

2. தக்ஷிணையாய் வெகு செல்வங்கள் கொடுத்து
அக்ஷணம் மைந்தனை அழைக்க நினைந்து

3. தந்தையும் மகனும் சந்தோஷ மாகவே
தத்துவ குருவின் சம்மத மாகவே

4. இன்ப மாகவே தன் இல்லறத்திற் கேகினார்
அன்னையை கண்டவர் ஆனந்தம் கொண்டனர்

5. குருவின் ஆக்ஞை என்று குறித்துமே
இருந்தார் தந்தை தாய் கண்டு மகிழ்ந்துமே

## 28. விருத்தம்

சிவகுருவின் சீர்மையும் தெளிவான கல்வியும்
திக்கெட்டும் திகழ்ந்தோங்கிட

தவவடிவாய் வந்ததோர் தனயனைக் கண்டுமே
தாய் தந்தை மிக மகிழ்ந்தார்

இவருக்கு இணையான இல்லாளைத் தேடியே
இதமுர திருமணத்தைத்

தவராமல் செய்திட தந்தையும் சந்ததம்
தன் உளம் நினைந்து கொண்டார்

## 23. பாட்டு

தெண்டனிட்டேன் — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : தோடி

திருமணம் செய்ய நினைந்தார்
சிவகுருவிற்கு அப்போ

அனுபல்லவி

குருகுலவாஸம் செய்து நிறைமதியாய் இருக்கும்
அவருக்கு கன்னிகையை அளிக்க யாருக்கும் சிறக்கும்

சரணம்

1. மகத்துவம் நிறைந்ததோர் மகத் பண்டிதரும் கேட்டு
ஜகத்தினில் இதுபோல் வேறு சிறந்தவரன் ஏதென்று
அகத்தினில் நினைந்தவர் ஆனந்தம் மிகக் கொண்டு
அன்பாய் ஆரியாம்பிகையை அளிக்க அவரும்வென்று (திரு)

2. எங்கள் கிருகத்தில் வைத்து மங்களமாய் விரித்து
உங்கள் மனம் குளிர உகந்து சீர் வகை செய்து
எங்கிலும் புகழ்ந்திட இணையிலா கலியாணத்தை
இப்போவே செய்திட இசைந்திடுவீர் பெரிது. (திரு)

3. பண்டிதரே நீரும் பகர்ந்தது மிக நன்று
எண்டிசையும் புகழ எங்கள் கிருகத்தில் வைத்து
கொண்டாடியே செய்வோம் குறையரவே இன்று
விண்டதில் ஐய்யம்கொள்ள வேண்டாம்இதுவோநன்று (திரு)

## 29. விருத்தம்

இருவரும் இவ்வாராக இயம்பியே இருக்கும்போது
அறிவினில் சிறந்தோரரான ஒருவர் அங்கெழுந்து செல்லார்
விரும்பும் வித்தியாதி ராஜன் விருப்பமே செய்வீர் என்று
பரிவுடன் குறிப்பால் சொல்ல பண்டிதர் அறிந்து கொண்டார்

## 24. பாட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: சௌராஷ்டிரம்

திருமணம் செய்ய நினைத்தார் — அங்கு

அனுபல்லவி

விரும்பியபடிக்கப்போ வித்தியாதி ராஜனும்
மனம் மிக மகிழ்ந்து மங்களமாய் உகந்து (திரு)

சரணம்

ஜோதிடர்கள் தீர்மானம் செய்த சுப முஹூர்த்தத்தில்
நீதி தவராமலே நிகழ்த்திடவே நினைந்து
அஷ்டாதச வாத்தியங்களும்
எட்டுதிக்கு ஒலியிட
இஷ்டமுடன் பந்து மித்திரர்
கஷ்டமற்று மகிழ்ந்திட (திருமணம்)

விதவிதமான நல்ல விசித்திர பணிகள் பூண்டு
இத வசனத்தினாலே எல்லோரும் ஆனந்தம் கொண்டு
வதூ வரர்களைக் கண்டு வானவரோ இவர் என்று
குதூகலத்துடன் நின்று கூற ஒண்ணானந்தம் கொண்டு
(திருமணம்)

## 30. விருத்தம்

இருவரும் அழகு மிக்க இல்லறம் தனை நடத்த
மருவிலா மனது மிக்கோர் மகத்தான அனுஷ்டானங்கள்
கருமகாண்டம் விதித்த கருத்ததை யறிந்து நன்றாய்
நிருமல மாகத்தானே நித்தியமும் நிகழ்த்தி வந்தார்

## 31. விருத்தம்

அக்கினி ஆதானம் செய்து அனைவரும் ஆமோதிக்க
அக்கினிஷ்டோ மாதியான அனேக யாகங்கள் செய்தார்
மிக்கவே தேவரெல்லாம் அவர் தரும் அவிசையுண்டார்
தக்கதோர் அமுதத்தாசை தவிர்த்தவர் சாந்தி பெற்றார்.

## 25. பாட்டு

தாளம் : த்ருபுடை] கண்ணிகள் [ராகம் : ஆனந்தபைரவி

1. தேவ யக்ஞம் பித்ரு யக்ஞம் செய்து மகிழ்ந்தார்
தேவ தேவனை பூஜித்து சிந்தை குளிர்ந்தார்

2. அன்ன தானம் ஸ்வர்ணதானம் அநேக தானங்கள்
இன்னிலத்தவர்க்குமிக ஈந்து மகிழ்ந்தார்

3. பந்து வர்க்கங்களை எல்லாம் பேணி வளர்த்தார்
ஸந்ததமும் சாது சங்கத்துடன் செழித்தார்

4. கற்பகமோ காமதேனுவோ இவரென
அற்புதமாய் இப்புவியோர் ஏற்றி புகழ்ந்தார்

5. சமதமாதி குணங்களாலும் ஸந்தோஷத்தாலும்
நமது நாம் என்பதறவே நாலும் கிழித்தார்

6. பொறுமையினில் பூமிதேவி என்ன இருந்தார்
அருமையான கல்வியால் அகமும் மகிழ்ந்தார்

7. வாரம் பக்ஷம் மாதமாய் வருஷம் சென்றிட
நேராக வயோதிக பருவம் வந்திட

8. தையலே கேள் நமக்கு மிக்க தளர்ச்சி வந்ததே
மைந்தனில்லா குறையினால் மனது நொந்ததே

9. முன்னவர்க்கு அன்ன வஸ்திரம் அளித்து மகிழ
அன்னமே நமக்கு மைந்தன் இல்லை சிறக்க

10. உத்தம குலத்துதித்த உத்தமியே கேள்
புத்திரன் இல்லார்க்கு கதி இல்லை என்பார்கள்

11. உத்தம சுருதிகளெல்லாம் ஓலமிடுதே
மெத்தவும் என் சிந்தை இப்போ தளர்வடையுதே

12. வம்ச வழியான வித்தை மயங்கியே விடும்
உம்பர்களுக்கு செய்யும் விதியாவுமே கெடும்

13. என்ன செய்வோம் ஏது செய்வோம் ஒன்றும்
அறியோம்
உன்னி உன்னி பார்க்க ஒரு வழியும் தெரியோம்.

## 32. விருத்தம்

புத்திரனில்லாதார்க்கு புகலிடம் ஒன்றும் உண்டோ
புத்திரனில்லாதார்க்கு புவியினில் புகழும் உண்டோ
புத்திரனில்லாதார்க்கு புகல ஆனந்தம் உண்டோ
உத்தமியே இதர்க்கோர் உபாயம் நீ உரைத்திடாயே

## 26. பாட்டு

சேதி சொல்லவந்தோம்—என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம்: கானட

கவலை கொள்ள வேண்டாம் —
நாதா கவலை கொள்ள வேண்டாம்

அனுபல்லவி

பவ பயம் அறும் சிவனை பூஜித்து
தவம் புரிகுவோம் தனையனை யாசித்து

சரணம்

1. கருதிய தெல்லாம் அளிக்க அவர்
கற்பக விருக்ஷமாய் இருக்க
சுருதியின் வாக்கியமே சிரக்க நாமும்
செய்குவோம் பூஜை சிறக்க

2. காலனை காலால் உதைத்தான் பாலன்
உண்ண பாலாழி கொடுத்தான்
சீலமாய் தேவர்கள் துன்பம் தவிர்க்க
ஆலாகலமதை அள்ளியே புஜித்தான்

## 33. விருத்தம்

உத்தமி உரையை கேட்டு உகந்து சிவகுருவும் நன்றாய்
பக்தியாய் பரனை நாமும் பாங்குடன் பூஜை செய்து

புத்திர பாக்கியம் பெற்று புகழுடன் கிகழ்வோமென்று
சித்தமே மகிழ்ந்து ஒன்ருய் செய்தனர் தவத்தை
நன்ருய்

### 35. விருத்தம்

நேமமாய் ஸ்நானம் செய்து நித்திய கர்மங்கள்செய்து
காமனை எரித்த அந்த கர்த்தனை கருத்தில் எண்ணி
ஸோமனை சிகையில் கொண்ட சுந்தரி மணுளன் தன்னை
ஸாமகானங்கள் செய்து சாம்பனை பூஜை செய்தார்

### 34. விருந்தம்

அன்ன பானங்களற்று ஹரனையே தினம் பூஜித்து
தன்னினைவற்று ஒன்ருய் தலைவனையே தியானித்து
மன்னியே விருஷபாசலேசன் மலரடியே நினைந்து
அன்னிய நினைவில்லாமல் கோரமாய் தவமிருந்தார்

### 27. பாட்டு

கண்ணெடுத்தாகிலும் — என்ற மெட்டு.

பல்லவி [ராகம்: ஸிம்மேந்திர மத்திமம்
தாளம்: ஆதி]

கருணைவைத்தெங்களை காருமையா
கவலைகள் யாவையும் தீருமையா

அனுபல்லவி

விரும்பியதளிக்கும் விருஷபாசலேசனே
அருமையாய் ஒரு மகவளிப்பீர் கிருபேசனே

சரணம்

1. உலகத்தில் ஒன்றையும் நாடவில்லை மனம்
பல பல விஷயத்தில் ஓடவில்லை தினம்
பல கர்மம் புரிவதால் பலனுமில்லை ஐயா
பாலன் இல்லார்க்கு பரகதியுமில்லை மெய்யா

2. சோதனை செய்வதினி போதுமையா ... ஈசா
ஆதியந்தமுமற்ற ஜோதி சுயம்பிரகாசா
வேதியர் குலமிப்போ விளங்கிடவே ஸர்வேசா
சாதித்திடுவீர் கிருபை சங்கர சித்சபேசா

## 36. விருத்தம்

தப்பிலாதிவர்கள் அப்போ தனையனை வேண்டி நன்றாய்
ஒப்பிலா தவங்கள் பூஜை ஓய்விலாதியற்றி வந்தார்
அப்ரமேயஸ்வரூபன் அப்பொழுதவர் கனவில்
விப்ர வேஷம் பூண்டு விளங்கவே தோன்றினரே

## 28. பாட்டு

திமிக்கிட—திமிக்கிட — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: கானட

விரும்பிய தென்ன சொல்வாய் சிவ குருவே
விரும்பிய தென்ன சொல்வாய்

அனுபல்லவி

அருமையாய் நீங்கள் செய்த அருந்தவத்தால் மகிழ்ந்தோம்
அரைகுவீர் உமக்கிப்போ அபீஷ்டமெல்லாம் தருவோம்

சரணம்

உங்களுள்ள மறிந்து உகந்து நாமிங்கு வந்தோம்
மங்களமாக வரம் தந்திடவே நினைந்தோம்
மங்காததான பூஜைகண்டு மிக உகந்தோம்
துங்க ஞானம் நிறைந்த தூய மனம் அறிந்தோம்

## 37. விருத்தம்

சிவனுரை கேட்டுணர்ந்து சிவகுருவும் மகிழ்ந்து
குவலயத் தோர்கள் போற்ற குழந்தையைத் தருவீர் என்றார்

அவருளம் மகிழ்ந்து அன்பாய் அரைகுவார் அருள்வாக்
கொன்றை
கவலைகள் வேண்டாம் இப்போ கருதியதளிப்போ
மென்ருர்

## 29. பாட்டு

எட்டாதகொம்பில் லிருக்கும் அக்கனி — என்ற மெட்டு.

தாளம் : ஏகம்] பல்லவி [ராகம் : அடாணு

1. அறிவு மிகுந்து ஆயுள் குறைந்த ஒரு மகவைத்
தரவோ — இல்லை
அறிவற்ற மூடனாய் அதிகம் வயதுள்ள அநேகம்
புத்திரரை — தரவோ

2. இந்த மொழிதனைக் கேட்டு சிவகுரு சிந்தை மிகத்
— தளர்ந்து
எந்தையே எல்லாம் உணர்ந்ததோர் ஏக புதல்வனைத்
— தாருமென்ருர்

3. அந்த படியே அளித்துவிட்டோமினி சிந்தை தளர
— வேண்டாம்
அந்தி பகலும் நீர் அங்கம் மிக நோக அருந்தவம்
— செய்ய வேண்டாம்

4. பாக்கியவானென்று பாரிலுள்ளோர் உம்மை பாங்
குடனே — புகழ்வார்
ஏக்கம் கொள்ள வேண்டாம் இல்லத்திற்கேகுவீர்
என்று — ஈசனுரைத்தார்

5. ஈசன் நமக்கு இட்ட கட்டளை ஈதெனவே —
மகிழ்ந்தார்
ஆசை மிகுந்து ஆரியாம்பிகையிடம் அறிந்த —
கனவுரைத்தார்

6. புத்திரப்பேருண்டு என்றதைக் கேட்டதும் உத்தமியும் — மகிழ்ந்தாள்
அத்தன் அருளால் அளித்த வரமென்று மெத்த அகம் — களித்தாள்

7. அன்புடனே கிரகம் அடைந்து இருவரும் அன்ன தானங்கள் — செய்தார்
இன்பமாய் அந்தணர் ஆசிகளைப் பெற்று இணையில் லாமல் — இருந்தார்

## 38. விருத்தம்.

அந்தணர்கள் அன்னம் உண்டு ஆசிகள் கூற மெத்த
சிந்தையில் ஐயம் நீங்கி சிவகுரு அவ்வன்னத்தை
சந்தோஷத்துடனே உண்ண சங்கரர் தேஜஸ்ஸங்கு
வந்துமே கலந்ததப்போ வான் ஒளிபோலே ஒன்றாய்

## 30. பாட்டு

ஐயா நீர் தந்த ஆனந்தம் — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: ஆரபி

சிவகுரு புஜித்திட்ட திவ்விய அன்னத்தில்
சிவதேஜஸும் (புகுந்ததப்போ) கலந்ததப்போ

அனுபல்லவி

அவர் புஜித்த அன்ன சேஷத்தை ஆரியாம்பிகை
அகமகிழ்ந்து புஜிக்க அடைந்தாள் கர்பம் சிறக்க

சரணம்

1. அங்கங்கள் அழகுடன் மங்கள ஒளி வீச
அங்கு வந்தோர்கள் கண்டு அகமகிழ்ந்துமே பேச
திங்களைப் போல் அதி சீத கிரணம் வீச
தினகரன் ஒளிபோலெ கண்டவர் கண்கள் கூச

2. அஷ்ட மூர்த்தி வடிவாய் அவனி முழுதும் தானாய்
கஷ்டங்கள் தவிர்த்திட கர்த்தனும் கருதினார்
அஷ்ட திக்கும் அமரர் ஆனந்தம் மிக்க வானோர்
திட்டமாய் சிவகுரு சிந்தை மகிழ்ந்தோரானார்

3. வாஸனையுள்ளதான வஸ்துக்களை வெறுத்தாள்
வஸ்து வாகனதியில் வாஞ்சையெல்லாம் விடுத்தாள்
போஜனம் செய்வதிலும் புனிதவதி மறுத்தாள்
போதம் சிறந்த தவ ஜோதிதனை ஸ்துதித்தாள்

4. பந்து வர்க்கங்களெல்லாம் ஸொந்தமுடன் மகிழ்ந்து
பண்டம் பதார்த்தங்களும்பணி-அணியும் கொணர்ந்து
சிந்தை மகிழ்ந்தளிக்க சீக்கிரமாயுகந்து
சிறப்புடன் ஆரியாம்பிகை அதை புஜித்தாள் மிகுந்து.

## 39. விருத்தம்

முன்னோர் செய்த தவத்தாலும் முழுதும் உணர்ந்
தோர் அருளாலும்
மன்னிச் செய்த தவத்தாலும் மகவை தரித்தோமென
மகிழ்ந்தாள்
தன்னுள் தானாய் மிகச்சிறந்து தனி மெஞ்ஞான
பொருள் தன்னை
உன்னி உன்னியே அவளும் உகந்து தியானம்
செய்திருந்தாள்

## 40. விருத்தம்

பொன்னாட்டவரும் மிகப் போற்ற போதன் வரவை
எதிர்நோக்கி
இன்னாட்டவரும் இவளருகில் இருந்தார் இரவும்
பகலுமதாய்

மின்னார் உடலும் மிக ஜோதி மின்னல் என்ன
ஒளியிடவே
தன்னால் தர்மம் செழிக்கவென்றே தயையால்
சங்கரரும் உதித்தார்

## 31. பாட்டு

ஆனந்தகளிப்பு — என்ற மெட்டு

தாளம்-ஆதி] பல்லவி [ராகம்-நாதநாமகிரியை

சங்கரர் அவதாரம் செய்தார் அங்கு
மங்களமாய் சிவ குருவும் மகிழ்ந்தார்

அனுபல்லவி

துங்கமான சுப கிருகங்கள் சுப லக்கினமும் சேர்த்தேசர்
சுக்கில பஞ்சமியில் — சங்கரர் அவதாரம் செய்தார்

சரணங்கள்

1. சிவகுரு மைந்தனைக்கண்டார் மிக்க
சிந்தையில் சிறக்கவே ஆனந்தம் கொண்டார்
பவ கடலை விட்டு மீண்டார் அப்போ
பரவசமாய் அவர் பாரெங்கும் விட்டார் (சங்கரர்)

2. நதியில் இறங்கி ஸ்நானம் செய்தார் யார்க்கும்
விதிப்படி தான தர்மமெல்லாம் செய்தார்
கதிக்கு வழி பிறந்த தென்றார் இனி
துதித்திடுவோம் நன்றாய் பரமனை என்றார் (சங்கரர்)

3. பகைவர்கள் பகையெல்லாம் விட்டார் அப்போ
பாஷண்டர்கள் கொண்ட பேதங்களை சுட்டார்
வகையுடன் வையத்தோர் கேட்டார் அவர்
வழிபிறந்ததென்று வாழ்த்தி புகழ்ந்திட்டார் (சங்கரர்)

4. பேத மதம் வீழ்ந்ததுவே நன்றாய்
வேத மந்திரங்களும் மிக ஒலித்ததுவே

போத ஸ்ஹகம் நிகழ்ந்ததுவே அப்போ
வேத வியாசர் கருத்தும் மலர்ந்ததுவே (சங்கரர்)

5. அக்கினி மூன்றும் ஜொலித்திடவே மிக்க
ஆகாசத்தில் அமரர் — மலர் சொரிந்திடவே
தக்க ஸமயம் இது எனவே அங்கு
மிக்கவும் ஸாதுக்கள் மனம் ஒளியிடவே (சங்கரர்)

6. வைசாக சுத்தமதிலே அவர்
வளமான ஆர்திர நக்ஷத்திரம் தனிலே
கைலாசபதி கருணையாலே அவரும்
களிப்புடன் அவதாரம் செய்தார் கலியிலே (சங்கரர்)

7. அருளே வடிவாய் வந்த மைந்தன் தன்னை
ஆரியாம்பிகை கண்டு அங்கம் குளிர்ந்து
தெருளே திரண்டெழுந்தது போல் அந்த
தேஜஸ்ஸு திக்கெட்டும் ஜொலிக்க சூரியன் போல்
(சங்கரர்)

8. ஜோதிடர்களை யெல்லாம் அழைத்தார் அவர்
ஜாதக பலன் தன்னை சாற்றுவீர் என்றார்
வேதியர்களும் அதை அறிந்தார் நன்றாய்
நீதியுடனே நிகழ்த்திட நினைந்தார் (சங்கரர்)

9. ஸர்வக்ஞனகவே வாழ்வான் இவன்
ஸர்வ கலைகளும் கற்றே மகிழ்வான்
ஸர்வ மதங்களையும் ஜெயிப்பான் வாதில்
ஸர்வக்ஞையான சாரதையேயும் ஜெயிப்பான்
(சங்கரர்)

10. எட்டுதிக்கிலும் புகழ் ஓங்கும் வெறும்
துஷ்ட மதஸ்தரின் மதம் மங்கி தூங்கும்
கஷ்டங்கள் யாவையும் நீங்கும் இனி
திட்டமாய் ஜெகத்தினில் ஆனந்தம் ஓங்கும்
(சங்கரர்)

11. ஆதியந்த மற்ற ஜோதி இந்த
அவனி முழுதும் அடையும் பிரக்கியாதி
வாதிகளுக்கெல்லாம் பீதி இவன்
வள்ளலாய் யாவர்க்கும் உரைத்திடும் நீதி (சங்கரர்)

12. ஆணி பொன்னிழைத்திட்ட பணிகள் அப்போ
அன்பாய் கொணர்ந்தார்கள் அநேகம் பெண்மணிகள்
காணிக்கையாய் வெகு மணிகள் மிக்க
கணக்கின்றியே கொடுத்து மகிழ்ந்தார்கள் (சங்கரர்)

13. சந்திரனோ இந்திரனோ என்று அவர்
சுந்திர வடிவத்தை பார்த்துமே நின்று
சிந்தை துயரமெல்லாம் வென்று இனி
ஸந்ததமும் ஸந்தோஷ மாச்சுதென்று (சங்கரர்)

## 41. விருத்தம்

இவருடைய இல்லம் நன்ருய் இலங்கிட ஜோதி மிக்க
அவருடைய அங்க ஜோதி அங்குள இருள் விழுங்க
தவறுடைய மதங்களெல்லாம் தயங்கியே வீழ கண்டார்
சிவகுரு அவருக்கப்போ சிறக்க சங்கரரென பேரிட்டார்

## 32. பாட்டு

மாதவர் குலத்துதித்த — என்ற மெட்டு
நொண்டிச்சிந்து — கண்ணிகள்

1. சங்கர லீலையை கேளீர் பால
உங்கள் மனம் குளிர் உவக்கை யாளீர் (சங்கர)

2. சிரிப்பார் ஒரு வேளை சிவகுரு
சிந்தை மகிழ மந்தஹாஸம் புரிவார் (சங்கர)

3. தவிழ்ந்தே விளையாடுவார் கண்டவர்க்கு
தவர்ந்தேவிடும் த்வைதபாவனை என்பார் (சங்கர)

4. நடந்தே வீதி வருவார் நாதாந்த
நடனம் செய்தெல்லார்க்கும் இன்பம் தருவார்
(சங்கர)

5. கட்டிலிலும் தொட்டிலிலும் குழந்தைபோல்
கண்ணுறங்கு பவர் போல் பாசாங்கு செய்வார்
(சங்கர)

6. தொட்டிலை காலால் உதைவார் அப்போ
துஷ்டமதவாதி எல்லாம் தூளாய் விடுவார் (சங்கர)

7. மழலைச் சொல் கேட்டவுடனே வாதிகள்
மௌனமடைந்து மதி மயங்கியே விட்டார் (சங்கர)

8. சரத்கால சந்திரனைப்போல் ஒளியும்
சராசர மெங்கும் சார்ந்து நிறைய (சங்கர)

9. பாத காந்தியினாலே இந்த
பார் முழுதும் பனிழத்தால் ஆனது போலே (சங்கர)

10. சந்திர கலை நெற்றியில் கண்ணும் நன்றாய்
சாற்றிய புஜத்தில் திரு சூல வடுவும் (சங்கர)

11. உடலோ ஸ்படிக நிறம் நிகரற்ற
அடையாளம் கண்டறிஞர் ஹரனே என்றார் (சங்கர)

12. அங்கத்தின் அமைப்பை கண்டு யாவரும்
சங்கரர் எனவே அப்போ அறிந்து கொண்டார்
(சங்கர)

13. ஸகலர்க்கு மின்பம் அளிக்க அங்கு
ஸர்வக்ஞனும் பாலனாக சிறக்க (சங்கர)

விருத்தம் —19] [பாட்டு —16

சங்கரர் அவதாரம் உரைக்கும்
இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

# மூன்றாவது அத்தியாயம்

## மற்ற தேவர்கள் அவதாரம்

✦✦✦✦✦

### 42. விருத்தம்

மண்ணுலகத்தில் ஈசன் மகிழ்ந்தவதாரம் செய்து
பண்புடனிருக்க அப்போ பரிவுடன் தேவரெல்லாம்
புண்ணியம் நிறைந்த அந்த பூமியில் பிறக்கவென்றே
எண்ணிட விஷ்ணு அப்போ ஏகினார் விமலர் தன்பால்

### 33. பாட்டு

ஆதி சிதம்பரத்தே — என்ற மெட்டு கிளிக்கண்ணி

கண்ணிகள்

1. விமலர் என்றதான அந்தணர்க்கு
புதல்வனாய் பிறந்தார்
கமல கண்ணனப்போ மிகவும்
களிப்புடன் வளர்ந்தார்

2. ஸனந்தனன் என்றே அவர்க்கு
தகுந்த நாமமிட்டார்
ஸகல மதஸ்தரேன் அவரும்
தங்காமல் ஓட்டி விட்டார்

3. யாகாதி கர்மங்களை எங்கும் செய்
என்றே எடுத்துரைத்தார்
ஏகமனமாகி இறைவனை
எண்ணி மிக இருந்தார்

4. பிரபாகரர் என்றவர்க்கு பிரகாசிக்கும்
வாயு புதல் வரானர்
பிரஸித்தியுடன் அவரும் பிற
மதங்களெல்லாம் கண்டித்தார்

5. அஸ்தா மலகம் போலே அவரும்
ஆத்ம தத்துவம் உரைப்பார்
அஸ்தமலகர் என்று ஆசாரியார்
அழகான பேரும் வைப்பார்

6. சூத்திராத்மா வடிவாம் வாயுவும்
தோடகராய் பிறந்தார்
நேத்திரமாய் இருந்து குருவிடம்
நேர்மையாய் வித்தை கற்பார்

7. நந்தி கேசுவரரும் உலகினில்
நலமுடனே பிறந்தார்
ஸொந்தமுடன் அவரும் வாதிகளை
தோர்க்கும் படிக்கு செய்தார்

8. ஸுந்திர நாமமிட்டார் அவர்க்கு
உதங்கர் என்று அப்போ
மந்தஹாஸத்துடனே மகாதேவர்
வரவை பார்த்திருந்தார்

9. பிரம்ம தேவர் பிறந்தார் சுரேசுவரர்
என்னும் நாமத்துடனே
கர்மகாண்டங்கள் கற்று களிப்புடன்
கிரகஸ்த தர்மம் செய்தார்

10. பிரகஸ்பதியும் வந்தார் ஆனந்த
கிரி எனும் நாமத்தால்
பிரஸித்தியுடனவரும் மதங்களை
பதற அடித்து விட்டார்

11. அருணனும் பிறந்தான் அப்போ
ஸனந்தனன்பேரால்
வருணனும் பிறந்தார் அழகாக
சித்சுகர் என்னும் பேரால்

12. ஸகல தேவர்களும் சங்கரர்
சரணம் பூஜிக்கவே
நிகிலத்தில் பிறந்தார் யாவரும்
நெஞ்சம் மகிழ்ந்திடவே

13. ஸரஸ்வதியும் அப்போ தாரணியில்
ஸந்தோஷமாக வந்தாள்
பிரஸித்தியாகவே உபய
பாரதி என்று பேரால்

---

## ஸரஸ்வதியின் அவதாரத்தின் காரணம் உரைத்தல்.

———o———

### 43. விருத்தம்

முன்னொரு காலம் தன்னில் முனீசுவரர் யாரும்சேர்ந்து
மன்னியே பிரம்மலோகம் மகிழ்ந்து எல்லோரும் சென்றார்
உன்னியே வேதம் தன்னை உகந்துமே யாரும் கூடி
சொன்னதில் தூர்வாஸருக்கு ஸ்வரமது பிசகித்தப்போ

## 44. விருத்தம்

வாக்தேவியதனை கேட்டு வகையுடன் நகைத்து விட்டாள்
தாங்கொணு கோபம் கொண்டு ஸரஸ்வதி தன்னை நன்ருய்
நோக்கியே முனியும் அப்போ நிகழ்த்தினுர் சாபமொன்றை
ஏக்கமே கொண்டு தேவி இணையடிதனில் பணிந்தாள்

## 45 விருத்தம்

செருக்குக் கொண்டதினுல் அன்ருே சிரித்தனை
ஸபையில் வைத்து
சுருக்கவே மண்ணில் நீயும் ஜெனித்திட வேண்டு மென்ருர்
பிறக்கவே சாபமிட்டார் துர்வாஸ முனியுமப்போ
கருக்கவே மனதில் துன்பம் கழலடி பணிந்து கேட்டாள்



## மற்றுமுள்ள முனிவர்கள் துர்வாஸரை வேணடல்



## 34. பாட்டு

என்னையும் வரச்சொன்ருேரா — என்ற மெட்டு

தாளம்-ஆதி] பல்லவி [ராகம்-ஆனந்தபைரவி

குற்றம் பொறுத்துக் கொள்வீர் துர்வாஸ முனியே

அனுபல்லவி

புத்திரன் செய்திடும் தப்பிதத்தை தந்தை
ஸகித்துக் கொள்வதே போலெ ஸரஸ்வதி செய்த சிறு

சரணங்கள்

1. நெஞ்சம் மகிழ்ந்துமே துர்வாஸர் ஈதுரைப்பார்
சஞ்சலம் வேண்டாம் மண்ணில் சங்கரரை ஸந்திப்பாய்

அஞ்சாமல் உன்னிடம் அவரும் வாதில் ஜெயிப்பார்
மிஞ்சிய ஜோதி என்ன மின்னிடையே நீ நிற்பாய்
(குற்றம்)

2. அவருரைத்தபடியே அந்தணர் குலம் தனில்
அழகு மிகுந்த சோண நதிக் கரையோரம் தனில்
எவரும் புகழும் விஷ்ணு மித்திரர்க்கு புத்திரியாக
விளங்கவே தோன்றினள் விமலையும் புதிதாக (குற்றம்)

3. ஆறு சாஸ்திரங்களும் அறுபத்தாறு கலையும்
ஆறு அங்கத்துடனே ஆயும் வேதங்கள் நாலும்
சீரும் சிறப்பும் ஓங்க சிறந்த குணங்களாலும்
யாரும் மகிழ்ந்திடவே ஆனந்தமாக மேலும் (குற்றம்)

(பல்லவியைப்போல் கூறவும்)

தாரணி தனில் பிறந்தாள்—ஸரஸ்வதியைப்போ
ஸந்தோஷமாக சிறந்தாள். (குற்றம்)

## 46. விருத்தம்

விப்ரகுலத்தில் பிரம்மன் விச்வரூப பெயரால்
ஒப்பிலா குணம் நிறைந்து உலகெலாம் புகழ் பெற்றோங்க
தப்பிலா மகிமை தன்னை ஸரஸ்வதி கேட்டு நன்றாய்
எப்போ நாம் காண்போமென்று ஏங்கியே தளர்ந்துநின்றாள்

## 35. பாட்டு

தூண்டில் புழுவினைபோல் — என்ற மெட்டு

தாளம்: ஆதி] கண்ணிகள் [ராகம்: ஸிந்துபைரவி

1. ஆசை மிகுதியினால் இருவரும் அங்கம் மிகத்தளர்ந்து
பேச வொண்ணு துயரால் பிரிவை எண்ணி மிகவும்
நொந்தார்

2. நேசமான விஷயம் தனிலே நெஞ்சும் சொல்லாமல்
பாசம் மிகுதியினால் அவர்கள் படுத்துறங்கிடுவார்

3. நித்திரை செய்திடவே அப்போது ஸொப்பன
மொன்று காண்பார்
மெத்த பிரமையுடனே அவர்கள் சுத்தி வந்தே
மகிழ்வார்
4. விழித்துக் கொண்டதான அவர்கள் மெத்த துயர்
அடைவார்
செழித்த மேனி எல்லாம் குளரி செயல்களற்றதுவே
5. ஆகார நித்திரை யற்று மிகவும் அல்லல் மனதில் உற்று
ஏக மனமாக இருவரும் இருந்தார் உடல் மெலிந்து

## 47. விருத்தம்

இவர்கள் இவ்வாறிருக்க இணையிலா துன்பம் கொண்டு
அவருடைய தந்தை தானும் அருமையாம் மகனைக்கண்டு
தவறுடைய சிந்தையில்லா தனயனே நீயுமிப்போ
கவலைகள் கொண்டதான காரணம் உரை செய்வாயே

## 36. பாட்டு.

தாளம் : ஆதி] கண்ணிகள் [ராகம் : தோடி

1. உந்தன் உடலம் மெலிந்து உள்ளமதில்
உற்ற துயர் ஏது மைந்தா
சிந்தை திறந்து எந்தனிடத்தில் நீ
செப்பிடுவாய் எந்தன் மைந்தா
2. கல்வியும் செல்வமும் காயபலமும்
கருதிய தெல்லாம் இங்கிருக்க
அல்லும் பகலும் நீ ஆகார நித்திரைகள்
அற்றிருப்ப தென்ன பிரமிக்க
3. கலியாணம் செய்வதற்கான காலமின்னம்
காணவில்லையே என் மைந்தா

அல்லல் படுவதேன் அன்புடன் என்னிடம்
அரைந்திடுவாய் எந்தன் மைந்தா

4. உத்தமமானதோர் வித்தைகள் மெத்தவும்
கற்று உணர்ந்த என் மைந்தா
சித்தம் தனில் நீயும் பித்தம் கொண்டவன் போல்
மெத்த தளர்வதேன் மைந்தா

5. யாரும் புகழ்ந்திட யாரும் மகிழ்ந்திட
யாருக்கும் அஞ்சாமல் மைந்தா
சீரும் சிறப்புமாய் சிறந்த உன் மேனி
சிறுமையுற்ற தென்ன மைந்தா

## 48 விருத்தம்

இருவர்கள் தந்தை தாயும் இவ்விதம் அவரைக் கேழ்க்க
ஒருவராய் மனம் தெளிந்து உகந்துமே ஈதுரைப்பார்
பெரும்பாலோர் விஷ்ணுமித்ரர் பெற்ற பெண் புகழ் உரைக்க
விரும்பிய தெனது உள்ளம் விளங்கவே காண்க என்றார்

## 37. பாட்டு

ஸ்வாமி விவேகாநந்தா — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : பியாக்

ஹிம மித்திரர் கேட்டுகந்தார் மைந்தனின்
எண்ணமெல்லாம் அறிந்தார்

அனுபல்லவி

அமைதியுடனிருப்பாய் அருமை மைந்தனே என்று
அவருரைத்தார்
இமைப் பொழுதிற்குள் இரு பேரை அனுப்பிவைத்தார்
இக்ஷணமே அறிந்து வருவீர் என்று
இலக்ஷணமுடன் அவரும் விஷ்ணு மித்திரர்
தேசம் சென்றார்

சரணம்

இவ்விதமாய் இங்கிருக்க
இசையுடன் ஸரஸவதியும் எடுத்துரைப்பாள்
அவ்வேளை அன்னையிடம் அன்பாய் மனமுகந்து
ஆனந்த மாகவே அுரையலுற்ருள்
செவ்வையாய் எடுத்துரைப்பாய்
தேன்மொழியே என்றிடவே
(பல்லவியைப்போல்)
அன்னையே கேட்பாய் என்ருள் அகமகிழ்ந்து
தந்தையே கேட்பீர் என்ருள்
மன்னன் ஸபை தனிலே
தன்னியனுய் விளங்கும் விசுவரூபர்
தன்புகழ் கேட்டுகந்தேன் என்னுள்ள மிக மகிழ்ந்தேன்
உன்னிதமாய் அவரைக் காண வென்றே
அன்னவர் தனை மணக்க அருள் புரிவீர் என்றுரைத்தாள்
அன்னையே கேட்பீர் என்ருள் அகமகிழ்ந்து
தந்தையே கேளும் என்ருள் (ஹிம)

## 49. விருத்தம்

புதல்வி இவ்வாறதாக புகன்றதைக் கேட்டு நிற்க
இதம் தரும் நண்பர் போல இருவர்கள் வந்து நின்ருர்
பதமதைக் கண்டபோதே பணிந்தவர் எழுந்து நின்ருர்
ஸுதையுண்ட அமரரென சொல்லொணு ஆனந்தம்
கொண்டார்

## 38. பாட்டு

ப்ருகிமுகுந்தேதி — என்ற மெட்டு

[ராகம் : செஞ்சுருட்டி
தாளம் : ஆதி] பல்லவி

அந்தணரை பூஜித்தார் வந்த அந்தணரை பூஜித்தார்

அனுபல்லவி

1. சிந்தை மகிழ்ந்து அர்கிய பாத்தியங்கள் கொடுத்து
வந்த காரியம் தன்னை மகிழ்வாய் கேட்பார் எடுத்து

2. விஷ்ணு மித்திரரும் மிக வினவ ஆனந்தம் கொண்டு
விளம்பலுற்ருர் வந்த காரியம் இன்னதென்று

3. அமைதியும் அறிவும் ஐசுவரியமும் நிறைந்த
ஹிம மித்திரர் அனுப்பிட இங்கு வந்தோம் என்ருர்

4. தர்மத்தில் சிறந்தவர் தானத்தில் உயர்ந்தவர்
நிர்மல கிருத்தியமாய் நிகழும் உத்தமர் என்ருர்

5. விசுவ ரூபன் என்றே விளங்கவே பேர் கொண்ட
விசுத்தனை ஒரு மைந்தனுண்டவர்க்கென்ருர்

6. கல்வியும் செல்வமும் களங்கமில்லா மனமும்
எல்லாம் மிக நிறைந்த ஏக புதல்வன் என்ருர்

7. (உன்) புத்திரியின் புகழ் கேட்டு மெத்த ஆனந்தம் கொண்டு
புத்திரனுக்கேற்றதோர் உத்தமி எனக் கண்டு

8. ஸதிபதியாய் இவர்கள் ஸந்ததம் வாழ்ந்திடவே
ததி இது கலியாணம் செய்திடுவோம் மகிழ்ந்திடவே

## 42. விருத்தம்

அந்தணர் உரையைக் கேட்டு அங்கம் பூரித்துகந்து
எந்தன் இல்லாளைக்கேட்டு இயம்புவேன் பதி நாமென்ருர்
சுந்திர வடிவாள் தன்னை துருஸாடன் கேட்க அப்போ
சிந்தையும் மகிழ்ந்து நன்ருய் செப்பிடலுற்ருள் தானே

## 39. பாட்டு

சித்தம் எப்படியோ — என்ற மெட்டு

தாளம்: த்ருபுடை] பல்லவி [ராகம்: நாதநாமகிரியை

அறிந்து நீர் செய்ய வேண்டும் — கலியாணத்தை
தெரிந்து நீர் செய்ய வேண்டும் — கலியாணத்தை

அனுபல்லவி

1. தூர தேசத்தில் வாஸமென்றுரை செய்கின்றீரே
சீராய் அவர் ஆசாரம் தெரிய வருமோ நேரே
2. கன்னிகா தானம் செய்து களிப்புடன் இருந்திட
உன்னி விசாரித்து உரைப்பீர் நீர் சிரந்திட
3. வரன் குணத்தை வர்ணிக்க வாக்கில் அடங்கிடாது
பொருளும் புகழும் நம்மால் புகன்றிடவும் கூடாது
(பல்லவிபோல்)

மங்கையே மனம் தெளிவாய் நீயும் நன்றாய்
மங்கள வாக்குத் தருவாய்
(அனுபல்லவிபோல்)

4. பக்குவ காலம் வந்து பாங்காய் இருக்கையிலே
தக்க வரனைத்தேடி கொடுக்க வேண்டும் கையிலே
5. தர்ம சாஸ்திரப் படிக்கே தகுந்த வரனிடத்தில்
நிர்மல மனதுடன் நிகழ்த்த வேண்டும் கலியாணம்
6. காலம் தவறியே நாம் கலியாணம் செய்வோமாகில்
காலன் இடும் நரகுக்களாகுவோம் உலகில்
7. இருவரும் இனிவாது செய்வது வீணே என்று
அருமைப் புதல்வியிடம் அரைந்து விடுவோம் இன்று
8. ஸகல விஷயங்களும் சாற்றிடவே நன்றாய்
அகலா ஆனந்தமுடன் அறிந்து கொண்டாளே நன்றாய்

## 43. விருத்தம்

உன் கருத்தறிய வேண்டி உகந்திங்கு வந்தோ மம்மா
பன்னிய உன் புகழைக் கேட்டு ஹிம மித்திரர் அனுப்பி
வைத்தார்

உன்னித விப்ரர் இங்கு உகந்து வந்திருக்கின்றார்கள்
உன்னபிப்பிராயம் ஏதென்றெடுத்துரை செய்குவாயே

## 40. பாட்டு

கலங்கிடுகிருள் — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம்: செஞ்சுருட்டி

அங்கம் சிலிர்த்துமே ஆனந்தம் பொங்கவே
மங்கையும் மகிழ்ந்தி துரைப்பாள்

அனுபல்லவி

1. சங்கை கொள்ள வேண்டாம் தந்தையே உமக்கு
மங்களமே இனி நமக்கு

2. வேணபடி இங்கு ஸாதுக்கள் வந்துமே
விச்வ ரூபர் புகழ் உரைத்தார்
பூணும்படி மனம் புத்தியை கரைத்து
பூரணானந்தமே அளித்தார்

3. கேட்டவுடனே நான் கிலேசம் தவிர்ந்துமே
நாட்டம் கொண்டேன் உள்ளில் அவரை
நண்ணிய காரியம் நன்மை என்றறிவீர்
வாட்டம் கொள்ள வேண்டாம் என்ருள்

## 44. விருத்தம்

சம்மதம் என்று நீரும் சாற்றுவீர் தளர்ச்சி இன்றி
நம்மவர் தன்னை இப்போ நலமுடன் அனுப்பிவைப்பீர்
சம்மந்தியானேமென்று சாற்றுவீர் அவர்களுக்கு
செம்மையாய் கலியாணத்தை சிறக்கவே செய்வோ
மென்று

## 45. விருத்தம்

இன்றைக்கு பதினலாம் நாள் இசைந்ததோர் சுப
தினத்தில்
என்றுமே புகழ்பெற்ருேங்கும் இலங்கிடும் சுப
முகூர்த்தத்தில்

அன்று கலியாணம் தன்னை அழகுர செய்வோமென்று
நின்று நீர் புகல்வீர் இப்போ இலக்கினப் பத்திரிகை
அளித்து

## 41. பாட்டு

சீதை ஸகிகளுடன் கூடி — என்ற மெட்டு
( காவடிச்சிந்து )

1. சந்தோஷத்தால் உள்ளம் பூரித்தார் — விசுவ
ரூபன் தந்தையிடம் உரைத்தார்
அந்தணர்கள் மொழியை அவரும் அறிந்து
ஆமோதித்தார் — ஆர்பரித்தார் (சந்தோ)

2. பத்திரிகை தன்னை அவர் படித்தார் — பர
மானந்த கடலினில் குளித்தார்
மெத்தவும் உயர்ந்ததான — வஸ்திர பூஷணங்களை
கொடுத்தார் அகம் களித்தார் (சந்தோ)

3. விசுவரூபரும் அதைக் கேட்டார்
விளங்க ஆனந்தத்துட் பட்டார்
அச்சம் தவிர்ந்த அவரும்—ஸௌச்ச கிருதமாய்
அமர்ந்தார் மெத்த சிறந்தார் (சந்தோ)

4. அணி பணிகள் மெத்த அணிந்து — பந்து
வர்க்கங்களுடன் அவர் சிறந்து
பணிந்து ஸாதுக்களின் — பாத தூளிதன்னை
அணிந்து உள்ளம் குளிர்ந்து (சந்தோ)

5. சோண நதிக்கரை தன்னல் — தந்தை
தாய் பந்து வர்க்கங்கள் சூழ
காண கண்ணுயிரம் வேண்டுமென்றெல்லோரும்
வந்தார் மனம் மகிழ்ந்தார் (சந்தோ)

6. விஷ்ணு மித்திரரும் இதைக் கேட்டார் மிக
விளங்க விருதுகளை விட்டார்

பக்ஷமுடனே பதினெட்டு வாத்தியங்களும்
முழங்க எதிர் சென்றார் (சந்தோ)

7. நானே பாக்கிய வான் என்றார் நன்றாய்
நானே தன்னிய நானேனென்றார்
உன்னை யடைந்த பலன் உற்றது இன்றென்று
புகழ்ந்தார் மெத்த மகிழ்ந்தார் (சந்தோ)

8. ஆஸனம் கொடுக்கவே அமர்ந்தார்—பாத்திய
அர்க்கிய ஆசமனியமும் கொடுத்தார்—நாங்கள்
தாஸராளேமென்று சந்தோஷம் கொண்டு அவர்
சாற்றினார் மெத்த போற்றினார் (சந்தோ)

9. முன்னோர்கள் செய்த தவம் தானோ எந்தன்
கன்னிகை செய்த பூஜை தானோ
இன்னில மெங்கும் புகழும் ஹிமமித்திரரே உம்மை
காண இன்பம் பூண (சந்தோ)

10. விரும்பிய படி இங்கு — நன்றாய் நீரும்
இருந்து பெந்துவர்கள் மகிழ
சிறப்புடனே கலியாணம்–சிறக்கவே செய்து புகழ்
பெருவீர் அகம் மகிழ்வீர் (சந்தோ)

## 46. விருத்தம்

விஷ்ணுமித்திரரும் சொல்ல ஹிமமித்திரரும் கேட்டுகந்து
லக்ஷணமாகவே ஸம்பாஷணம் செய்து கொண்டார்
பக்ஷமாய் பெந்துவர்க்கம் பார்த்து ஸந்தோஷம் கொள்ள
இக்ஷணமே கலியாணம் இங்கு நாம் செய்வோமென்றார்

## 42. பாட்டு

நல்வரவு சொல்லு சிரு பல்லி — என்ற மெட்டு

கண்ணிகள்

1. ஸம்மந்திகள் இந்தவிதம் ஸம்பாஷணம் செய்து
சிந்தை மகிழ்ந்து மைந்தனை சிறப்புடன் அழைத்து

உந்தனுக்கு உகந்ததான அணி பணிகள் பூண்டு
ஸந்தோஷமாக இருப்பாய் தனயனே நீ என்றார்

2. பெண்மணிகள் கூடிவந்து பிரியமுடன் அப்போ
பெண் கொடியாள் ஸரஸ்வதிக்கு பொன்மணிகள் அணிந்தாள்
மண்ணுலகும் விண்ணுலகும் மகிழ்ச்சி மிக ஓங்க
எண்ணியபடி கலியாணம் செய்து அவர் மகிழ்ந்தார்

3. பேரியுடனே மிருதங்க வாத்திய மெங்கும் ஒலிக்க
பேதமரவே வேதகோஷம் எங்கிலும் தொனிக்க
சீருடனே விசுவரூபர் தேவி கரம் பிடிக்க
சிந்தை மகிழ்ந்து ஸரஸ்வதியும் மிக ஜொலிக்க

4. விதிப்படியே கலியாணம் விமர்சையுடன் செய்தார்
விரும்பியபடி வரிசை விதவிதமாய் கொடுத்தார்
ததி இதுவே நாங்களினி சென்று வரோம்மென்றார்
ஸம்மந்திகாள் உத்திரவு தந்திடுவீர் நன்றாய்

5. ஏதுமறியாத சிறு குழந்தை இவள் என்றார்
எங்கள் இரு கண்மணியாய் இங்கிருந்தாள் என்றார்
ஏதும் பகர்வதற்கு இனி இல்லை இங்கு என்றார்
எல்லாம் உமது பொறுப்பு என்றவர் புகன்றார்

6. சிந்தை துயர் கொள்ள வேண்டாம் சம்மந்திகாள் என்றார்
எந்தன் அருமை புதல்வி ஆகும் இவள் என்றார்
வந்தனங்கள் செய்துமே ஸரஸ்வதியும் நின்றாள்
மந்தகாஸத்துடன்னவளை பார்த்தோர் வார்த்தை யுரைப்பார்

## 47. விருத்தம்

புதல்வியே புகலக்கேளாய் புத்தியும் சிறக்க நன்றாய்
இதம் தரும் இல்லரத்தை இனிமையாய் நடத்தவேண்டும்

உதவுவாய் இருகுலத்திற் கிசையவே புகழையம்மா
இத முடன் புத்தி தன்னை இன்னமும் இயம்புவேன்கேள்

## 43. பாட்டு

ஆடும் சிதம்பரத்தே கிளியே — என்ற மெட்டு

கண்ணிகள்

1. செல்வகுழந்தையே கேள் நானிப்போ
செப்புமொழியதனை
அல்லவிரைந்த தான அதீத ஆனந்தம் ஆகும்
சொன்னேன்

2. பர்தா மனம் போலே குழந்தாய் பாங்குடனே
நடப்பாய்
அர்த்த சரீரமம்மா அவருக்கு அரிந்துமே சிறப்பாய்

3. புருஷன் புஜிப்பதற்கு முன் நீ புஜிப்பது கூடாது
புத்தி குறைந்துவிடும் உலகில் புகழும் மங்கிவிடும்

4. கணவன் இல்லாவேளை பணிகள் அணியலாகாது
கழலடி மறந்து கணமும் இருக்கக் கூடாது

5. கோபம் கொண்டு விட்டால் எதிர்த்து கோபிக்க
லாகாது
பாப கர்மம் வந்தால் பலனை தராமல் போகாது

6. ஒத்த மனதுடனே இல்லறத்தை ஒழுங்காக நடத்த
வேண்டும்
வித்தியாஸம் வந்தால் மெத்தவும் விபரீதமாகிவிடும்

7. மாமியார் மாமன்மார்கள் மனம் மகிழ செய்ய
வேண்டும்
காமியார்த்த பலமும் உனக்கப்போ கைமேலே
வந்துவிடும்

8. ஸகோதரர்களிடம் ஸதா அனுகூலமாய் இருந்து
அகோசரமான புகழை அடைந்துமே சிரந்து

9. இந்த விதமாக ஸுந்தரியே நீயுமிருந்தாயானல்
எங்கள் தவப் பயனே என்றெண்ணி எந்நேரமு
மிருப்போம்

## 48. விருத்தம்

பெற்ருேரின் மொழியைக் கேட்டு பேணியே
பணிந்தெழுந்து
உற்றதோர் உருதி ஈது உரை செய்தபடி இருந்து
கற்ருேரை பூஜை செய்து கணவன் சொற்படி
நடப்பேன்
குற்றேவல் செய்வேன் என்று கோதையும்
உரைத்து நின்ருள்

## 49. விருத்தம்

பிறந்த குலம் புகுந்த குலம் இரு குலத்தவர்களுக்கும்
பரந்ததோர் புகழை நன்ருய் பாரெங்கும் ஓங்கவைத்து
நிரந்தர இன்பம் தன்னை நிரைந்திட செய்தாள் அங்கு
சிறந்ததோர் நாமமிட்டாள் உபய பாரதி என்று
அப்போ.



## இனி சங்கரர் பால லீலை.

———:o:———

## 50. விருத்தம்

சங்கரர் பால லீலை செய்துமே இருக்கும் போது
திங்களோ ரவியோ என்ன திக்கெட்டும் ஜோதியின்ன
மங்கையர் எல்லாம் கண்டு மனதினில் மகிழ்ச்சி
கொண்டு
பொங்கவே புகழும் நன்ருய் புவியினில் முழுதும் ஒன்ருய்

துஷ்டர்கள் மதத்தை எல்லாம் தூளதாய் செய்து நன்றாய்
சிஷ்டரைக் கார்க்க வென்று சிந்தையில் எண்ணம் கொண்டு
கஷ்டங்கள் தவிர்ந்து விப்ரர் களிப்புர வாழவென்றும்
திட்டமே இட்டு பால சங்கரர் வாழ்ந்து வந்தார்

விருத்தம்: 17 ] [பாட்டு : 11

மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

# நான்காம் அத்தியாயம்.

## சங்கரர் இளமை பருவம்

### 51. விருத்தம்

மகிழ்வுடன் மகேசனப்போ மாயையால் மதலையாகி
புகழவே லீலை செய்தார் புவியிலுள்ளோர்கள் காண
நிகழவே வயது ஒன்றில் சிரக்கவே லிபிகள் கற்றார்
திகழவே சிவ குருவும் சிந்தை பூரித்து நின்றார்

### 44. பாட்டு

சரணாகதி அடைந்தேன் — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: நாதநாமகிரியை

அற்புதம் அற்புதமே — ஆதிசங்கரர் செய்கை மிகவும்

அனுபல்லவி

நிர்பயமாகவே நிகிலத்தில் யாவரும்
நிகழ்ந்திட அவதரித்தார் மிக

சரணம்

1. அழகு பெரும் திவ்விய வயதொன்றிலே அவர்
அன்பத்தோர் அக்ஷரமும் படித்தார்
குழந்தை இரண்டாம் வயதில் கூரிய
மொழிதன்னை எழுதியே விடுத்தார் (அற்புதம்)

2. காவிய அலங்காரம் களிப்புடன் புராணமும்
கற்று மகிழ்ந்தவர் சிறந்தார்
பாவியார்த்தங்க ளெல்லாம் பகராமலே அவர்
பாவித்து தன்னுக்குள் மகிழ்ந்தார் (அற்புதம்)

3. கேட்ட அர்த்தத்தையுடன் கிலேமின்றியே அவர்
நாட்டமுடன் நன்ருய் உரைப்பார்
தேட்டமுடன் தேசிகர் செப்பிடாத வித்தையும்
வாட்டமில்லாமல் அறிந்தார் (அற்புதம்)

4. ஸகல லிபியும் கற்று ஸகல கல்வியும் கற்று
ஸகல கலையும் அவர் கற்ருர்
நிகில முழுதும் போற்ற நிர்மல தேஜஸ்ஸுடன்
நின்ருர் சௌளமும் செய்து (அற்புதம்)

5. காயத்திரி முதலான மந்திர அர்த்தமெல்லாம்
வியாகிருதி யுடன் தானே அரிந்தார்
தூய மனதுடனே ஸூக்ஷ்மார்த்தம் தெரிந்து
துலங்க வேதர்கநூல் அரிந்தார் (அற்புதம்)

6. கற்றுணர்ந்து மிக கர்வம் அடைந்தவர்கள்
சொற்றிறமை தன்னை இழந்தார்
கற்ற பெரியோர்கள் கருத்துகந்து புகழ்ந்தார்
சுற்றி அவருடன் நின்ருர் (அற்புதம்)

7. ஆயிரம் நாவுள்ள ஆதிசேஷன் வாக்கையும்
அதிக்ரமித்தே அவர் உரைப்பார்
பாயிரம் கோடி படித்த பண்டிதர்களும்
பரிசு இழந்தே அங்கு பிரமிப்பார் (அற்புதம்)

## 52. விருத்தம்

ஒப்பற்ற வித்தையாலும் ஓங்கிய ஒளியினாலும்
செப்ப ஒண்ணாததான தேஜஸைக் கண்டு தந்தை
இப்பவே மைந்தனுக்கு இலக்ஷணமாக பூணூல்
தப்பர செய்ய வென்று தன்னுளம் கொண்டார் நன்றாய்

## 45. பாட்டு

எத்தினை தூரமே — என்ற மெட்டு

கண்ணிகள் [ராகம்: நாதநாமகிரியை

1. உபநயனம் செய்து உகந்திட வேண்டுமென்று
சிவகுருவும் நினைக்க செய்கை வேறானதந்தோ
2. அருமை மைந்தனைக் கண்டு ஆனந்தமாய் இருக்க
கருமமும் வேறதாகி காலன் கையினில் சென்றார்
3. உத்தமனை தோர் புத்திரனை யடைந்தும்
மெத்தவும் பாக்கியமற்று இத்தரை விட்டகன்றார்
4. பர்த்தாவின் பிரிவினால் பரிதவித்தே நின்றாள்
உற்றார் உறவினர்கள் முற்றும் மனம் தளர்த்தார்
5. ஆரியாம்பிகைக்கவர் ஆறுதல் சொல்லி மேலும்
சீரிய கர்மங்களை செய்தார் தாயாதிகளும்
6. அருமை மைந்தனைக்கண்டு அகம் தெளிந்தே இருந்தாள்
வருஷம் ஒன்றானதும் மனதில் ஒன்று நினைந்தாள்
7. முறைப்படி மைந்தனுக்கு முதியோர்களை யழைத்து
சிறப்பாய் உபநயனம் செய்ய வென்றே நினைந்தாள்

## 53. விருத்தம்

1. சுபமான முகூர்த்தம் தன்னில் சுற்றத்தோர்
சூழ்ந்திருக்க
உபநயனத்தை செய்தார் உகந்தவர் மகிழ்ந்திருந்து

உபமான மிவர்க் கில்லாமல் உபநிஷத் வேதம் கற்றும்
ஜபதவம் முதலாய் செய்து சிந்தையும் களித்து நின்றார்

(குருகுலவாஸம்)

2. அங்கம் ஆறுடன் அழகாய் வேதமும் அறுபத்தாறு
கலைகளும்
மங்களமாய் குருவும் போதிக்க மாசரவே படித்தனர்
எங்கும் சங்கரர் கீர்த்தி பொங்கியே ஏகமாக
இருக்கவே
சங்கையற்றுமே ஸத்குரு மிக ஸந்தோஷமாய்
மகிழ்ந்தனர்

## 46. பாட்டு

ஒதுங்கி நின்றாரே —என்ற மெட்டு

தாளம்: திருபுடை] பல்லவி [ராகம்: சங்கராபரணம்

குருகுல வாஸம் செய்தார் — சங்கரர் நன்றாய்

அனுபல்லவி

அரும் குல மணியாக யாரும் புகழ்ந்திடவே
ஒருவரும் இவர்க்கிணையில்லாதிருந்திடவே

சரணங்கள்

1. குருவும் அவருக்கு வித்தை கூறமிக கூசினார்
குவலயத்தோர்களெல்லாம் கொண்டாடியே பேசினார்
வரும் மதவாதிகளை வாதித்தவர் ஏசினார்
வையகம் முழுதும் வையோன்போல் ஒளி வீசினார்
(குருகுல)

2. வேத வித்தையில் இவர் வேதாவே என்றுரைப்பார்
வேத தியானத்திலிவர் கார்க்கிய முனிவர் என்பார்

வேத பொருள் சொல்வதில் பிரகஸ்பதி தானே
என்பார்
வேத தர்மம் உரைக்கும் ஜைமினி முனியோர்
என்பார் (குருகுல)

3. வேதாந்த பொருளான வியாஸ ஸூத்திரமும் கற்றார்
வேடிக்கை போல யோக பதஞ்சலி ஸூத்திரமும்
கற்றார்
நாதாந்த முடிவான நாத பிரும்மமாய் நின்றார்
நாதனும் ஸகல மதங்களும் தானே வென்றார் (குரு)

## 54. விருத்தம்

(சங்ரர் பிக்ஷைக்கேகுதல்)

குருகுல வாஸம் செய்து குருகிருபை தன்னை பெற்று
விரும்பியே பிக்ஷை வாங்கி விளங்கவே புஜிக்க வென்று
வரும் பவ பிணியகற்றும் வள்ளலும் மனதில் எண்ணி
வரும் வழி தன்னில் விப்ரர் கிரகமதில் வகையாய் சென்றார்

## 47. பாட்டு

மாயே — என்ற மெட்டு

தாளம்: ஆதி] [ராகம்: சுத்த தரங்கிணி

1. பவதி பிக்ஷாம் தேகி பவதி பிக்ஷாம் தேகி
பாவாபாவ ரஹித பரஞ்சோதி பவதி பிக்ஷாம்தேகி
2. நித்திய நிராமய நிர்குண நிர்மலம்—பவதி பிக்ஷாம்தேகி
3. அத்வய அத்புத அகணித குண கணம் — பவதி
பிக்ஷாம்தேகி
4. பிரம்மைவாகம் பிரத்தியக பின்னம் — பவதி
பிக்ஷாம்தேகி
5. பிரம்மானந்த அபேதமயோகம் — பவதி பிக்ஷாம்தேகி

6. பாதி சராசர ஜோதிர்மயோகம் — பவதி பிக்ஷாம்தேகி
7. ஸ்வஜாதி விஜாதி ஸ்வகத பேத ரஹிதம் — பவதி
பிக்ஷாம்தேகி
8. இலக்ஷியாலக்ஷிய விலக்ஷண ஸ்வரூபம் — பவதி
பிக்ஷாம்தேகி

## 48. பாட்டு

தாளா தளங்கள் — என்ற மெட்டு

தாளம் : ஆதி] கண்ணிகள் [ராகம் : புன்னாகவராளி

1. பவதி பிக்ஷாம் தேகி யென்று பரமனும் நிற்க
பாவையவள் பரவசமாகி பிரமிக்க
2. குவலயத்தில் இவருக்கு இணை கூடுமோ சொல்ல
கோமல பாதங்கள் நோக ஏகினார் மெல்ல
3. இவருக்கு பிக்ஷை இடும் பாக்கியம் இன்றி ஆனதே
என்ன செய்வோம் ஏது செய்வோம் என்று
திகைத்தாள்
4. முன்னமே நாம் செய்தவினை முண்டதே என்று
முன்னும் பின்னும் பார்த்து அவள் மௌனமாய்
நின்றாள்
5. தேடித் தேடி மனம் வாடிப் பார்க்கும் பொழுது
தேட்டமாய் நெல்லிக்கனி தென்பட்டதப்போது
6. ஓடிவந்து ஒப்பிலா ஆனந்தத்துடனே
ஈடிலா உமக்கு பிக்ஷை இட்டோம் ஈதென்றாள்
7. சங்கரரும் கேட்டு மிக சந்தோஷம் கொண்டு
மங்களமாய் இவரைக் காக்க எண்ணமும்
கொண்டார்.

---

## சங்கரர் மகாலக்ஷ்மியைத் துதித்தல்



### 53. விருத்தம்

ஸிந்துவில் உதித்ததான சுந்திர வடிவோடொத்த
இந்திரை தன்னை யப்போ ஈசனும் துதிக்க வென்றே
சிந்தையில் நினைந்து கொண்டு சிறப்புடன் அவளைப்பார்த்து
வந்தருள் செய்வாய் என்று வள்ளலும் ஸ்துதிக்கின்றரே

### 49. பாட்டு

அந்தம் மிகுந்த — என்ற மெட்டு

தாளம்: ஏகம்] பல்லவி [ராகம்: இந்துஸ்தான் தோடி

பங்கஜ கண்ணனின் அங்கத்தில் அமர்ந்த
மங்கள ரூபியே வா வா நீ வா வா — வா வா வா

அநுபல்லவி

மங்கையின் தரித்திரம் தீர்க்க — மஹா லக்ஷ்மியே வா வா

தொகையரு

விப்ரரின் வருமை தன்னை விரைவுடன் விலக்கி நீயும்
ஒப்பிலா தனத்தை ஈவாய் ஒளிதிகழ் வடிவினளே
செப்பொண்ணு துன்பத்திருலே திகைத்திடும் இவரை
இப்போ
திரு கடாக்ஷம் வைப்பாய் இணையிலா கருணையாளே

பல்லவி

பத்மலோசனி பங்கஜாஸனி
பத்மநாபனின் தேவியே வா பரஞ்சோதியே
வா—வா—வா

தொகையரு

ஸகல சுருதி ரூபிணி ஸகல சுபகர்ம பலபிரதாயினி
ஸகல குண ஆச்ரயே ஸகல புஷ்டியும் துஷ்டியும் அளிக்கும்
ஸகல சக்தி ஆனந்த ரூபிணி அச்சுதன் மன மோஹினி
அகிலாண்ட கோடி பிரும்மாண்ட நாயகி

பல்லவி

இந்து ஸோதரி — ஸிந்துவில் வந்த
ஸுந்தரியே நீ வந்தருள்வாய் — வரம் தந்தருள்வாய்
வா—வா—வா—வா

தொகையரு

நமோஸ்துதே த்ருலோக காரிணி நமோஸ்துதே
ஸ்வர்ண பீட நிலையே சுபபிரதாயினி நமோஸ்துதே
ஸகல தேவதா ரூபிணி நமோஸ்துதே
ஸகல பக்த வரபிரதாயினி நமோஸ்துதே
ஸகல ஜீவஸாக்ஷிணி

பல்லவி

ஸித்தர் போற்றிடும் ஸித்த லக்ஷ்மியே
நித்தியானந்த ரூபியே வா பரமேச்வரியே
வா—வா—வா—வா

தொகையரு

ஸகல ஸம்பத்தும் தந்தருள் செய்திடும்
சௌபாக்கிய லக்ஷ்மி நீ
நிகிலத்தவர்க்கு நினைத்த வரம் தரும் நிகரிலா
வரலக்ஷ்மி நீ நித்தியமும்
அகமகிழ்ந்தன்பருக்கருள் செய்யும் ஆதி லக்ஷ்மி நீ

பல்லவி

சாந்த லக்ஷ்மி சௌக்கிய லக்ஷ்மி
ஏந்திழை துன்பம் தீர்க்க வா நீ இங்கு வா—வா
வா—வா—வா—வா

## 50. பாட்டு

ஆசைமுகம் மறைந்து போச்சே — என்ற மெட்டு.

தாளம்-ஆதி] பல்லவி [ராகம்-செஞ்சுருட்டி

1. பங்கஜ லோசனியை கண்டார் — இப்போ
சங்கரரும் தொழுது நின்றார்
சங்கையறவே அவர் — விண்டார்
மங்கள ரூபிணியும் கொண்டாள் (பங்கஜ)

2. சொன்ன மொழிகளெல்லாம் அறிந்தேன்—இவர்
ஜென் மாந்திர பலனும் தெரிந்தேன்
உன்னித தர்மம் ஒன்றும் புரிந்தே — இவர்
ஜென்மம் எடுக்க வில்லை சிறந்தே (பங்கஜ)

3. புண்ணியம் செய்யார்க்கு புகழ் உண்டோ—அக்ர
கெண்ணியனே அறியா தென் கொண்டோ
மண்ணில் இவர்க்கு ஸுகம் — உண்டோ
திண்ணமாய் நீர் சொல்வது நன்றோ (பங்கஜ)

4. திருமகள் இப்படி உரைக்க — அப்போ
அருமையுடன் சங்கரர் சிறக்க
பெருமையாம் உன் கடாக்ஷம் — இருக்க
வறுமை இனி நிற்குமோ நிரக்க (பங்கஜ)

5. தர்மம் செய்ய வில்லையே என்றாய் — இப்போ
தனம் தருவ தெப்படி என்றாய்
நிர்மல நெல்லிக்கனி — நன்றாய்
நிர்மலையே அளித்தார் என்றார் (பங்கஜ)

6. பிக்ஷை யளித்து விட்டாள் இன்று — நன்றாய்
பக்ஷமுடன் கார்பாய் நின்று
லக்ஷ்மி நின் கடாக்ஷமே — நன்று
ரக்ஷித்திடுவாய் நீயும் சென்று (பங்கஜ)

7. குற்றம் பொறுத்தருள்வாய் நீயே — அம்மா
பெற்ற தந்தையும் தாயும் நீயே
முற்றிலும் பொறுத்து காப்பாயே
வற்ற கருணை யுடையாய் — நீயே. (பங்கஜ)

### 64. விருத்தம்

1. மதுரமாம் மொழியைகேட்டு மாமலர் மகளும் அப்போ
துதிபெரும் ஸொர்ண ஆமலகமே சொரிந்தாள் நன்ருய்
ஏதும் தரும் ஈசனின் நற்கருணை ஈதென்றெல்லோரும்
பதும பாதத்தை நன்ருய் பணிந்துமே தொழுது நின்ருர்
2. மறையவர்க்கனுக்கிரகித்து மங்கையும் மறைந்த பின்பு
குறையிலா இந்த செல்வம் குருபரன் அருளே என்று
கரையிலா புகழ் பிரவாகம் கரை புரண்டோட நன்ருய்
தரையினில் மாந்த ரெல்லாம் சங்கரர் பெருமை என்ருர்
3. கருதிய தளிக்குகின்ற கர்பகத் தருவோ என்ன
உறுதியாய் பணிந்தோர் தங்கள் உற்றதோர் குறைகள் தீர்த்து
குருகுல வாஸம் செய்து குணமணியாய் நிகழ்ந்து
பருதிபோல் பிரகாசம் ஓங்க பரிவுடன் விளங்கிஞரே.

—:o:—

## சங்கரர் பாதாதிகேச வர்ணனம்.



### 51. பாட்டு

வஞ்சி விருத்தம்.

பச்சமலை பவழமலை — என்ற மெட்டு

பாத மஹிமை.



1. வேதங்களுக் கெட்டாத விமலமதாம் பாதம்
பேத மத வாதிகளை — பேதித்திடும் பாதம்

2. பங்கஜத்தை பழிக்குகின்ற சங்கரரின் பாதம்
சங்கை எல்லாம் வேரறுக்கும் திங்களொத்த பாதம்

3. அந்தணர்கள் பூஜை செய்யும் ஸுந்திரமாம் பாதம்
சிந்தை துயர் தீர்த்தருளும் எந்தை குரு பாதம்

4. ஒப்புவமை இல்லாத அற்புதமாம் பாதம்
இப்புவியோர் ஏற்றி தினம் இரஞ்சுகின்ற பாதம்

5. யோகியர்கள் ஹிருதயமதில் இலங்குகின்ற பாதம்
தியாகியர்கள் தினமும் ஸ்துதித் தேற்றுகின்ற பாதம்

6. ஆத்ம ஞானம் அளிக்குகின்ற அத்வைத பாதம்
ஸாத்வீக குணமுடையோர் சார்ந்து நிற்கும் பாதம்

7. ஆறு வைரியும் அகற்றி ஆளுகின்ற பாதம்
சீருடனே தீவினையை தீர்க்கும் குரு பாதம்

8. மார்க்கண்டனை கார்க்க வந்த மகிமை பெறும் பாதம்
ஓர்க்க இரண்டில்லாமல் ஒளிதிகழும் பாதம்

9. பணிந்தவர்க்கு பதம் அளித்து பாதுகார்க்கும் பாதம்
அணிந்தவர்க்கு அபரோக்ஷம் ஆக்கி வைக்கும் பாதம்

10. அபஸ்மார வியாதியெல்லாம் அகற்றி விடும் பாதம்
சுபஸ்தானம் அளித்து அன்பர் துன்பம் தீர்க்கும் பாதம்

11. அஞ்ஞான இருளகற்றும் ஆத்மஞான பாதம்
மெஞ்ஞான ஒளிவீசும் அருள் ஞான பாதம்

12. நீங்காத கருணையுள்ள நிர்மலமாம் பாதம்
ஓங்கார பொருளுரைக்கும் ஒப்பற்ற பாதம்

13. முனிவர்கள் தினம் பணிந்து கனிவுபெற்ற பாதம்
தனிப் பெருமை கொண்டதான இனிமைதரும் பாதம்

14. பாத தூளியை யணிந்து பாக்கியத்தைப் பெறுவோம்
பேத மதியை யகற்றி பேரின்பத்தை உருவோம்

15. பல்லவத்தைப் பழிக்குகின்ற பரமன் திரு பாதம்
சொல்ல இரண்டற்றிலங்கும் சுருதி முடிவாம் பாதம்.

## 65. விருத்தம்.

தெய்வ யானை துதிக்கையோ என துடையின் அழகும் ஜொலித்திட
துய்ய வஸ்திரம் தரித்த இடைதனில் துங்க மௌஞ்சும் துலங்கிட
கையில் புஸ்தகம் கண்டவாதிகள் கருத்திழந்து மயங்கிட
மெய்யன் காட்டிய ஞான முத்திரை மேதியோர் மகிழ்ந்திட

## 52. பாட்டு

ராமனை கண்ணார கண்டாரே — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: மோகனம்

அழகையுரைக்க தரமா சங்கரர் — அங்க

அனுபல்லவி

கழலிணை பணிந்தோரை கருணையுடன் அணைக்கும்
கரமோ கற்பக தளிர் என்னவே திகழ்ந்திடும்

சரணங்கள் [ராகம்: கல்யாணி

1. அங்க அழகைக் கண்டு அஞ்சினது கமலம்
அங்கம் பூரித்து விப்ரர் அடைந்து கொண்டார் பலம்
தங்கிடுமோ பேத வாதிகள் கேது பலம்
சங்கரர் புகழ் ஓங்கி சார்ந்து நின்றது நிலம்— (அழகை)

[ராகம்: தோடி (கேதாரம்)

2. மார்பின் விசாலமதை வர்ணிக்க மிக ஆகும்
கீர்த்தியாம் ஜெயலக்ஷ்மிக்கு இருப்பிடம் அதுவாகும்
ஆர்த்தி களெல்லாம் தீர்க்கும் அகண்ட ரஸமே பொங்கும்
பார்த்தவர் பவ பிணி பற்றிடாமலே நீங்கும் (அழகை)

[ராகம் : தன்யாசி

3. திக்கெட்டும் ஜயம் கொண்டு திகழுகின்ற திருக்கை
அக்கரையுடன் அன்பர்கருள் புரியும் திருக்கை
முக்தியளிக்கும் ஞான முத்திரை தரித்த—கை
பக்தர்கள் அபீஷ்டத்தை பாலிக்கும் அபயகை
—(அழகை)

[ராகம்: சாவேரி

4. சரத்கால சந்திரன்போல் தவளும் யஞ்ஞோபவீதம்
சிறந்த சங்கின் சோபைபோல் ஜொலிக்கும்
கண்டத்தில் நிதம்
உரைக்க வரும் சப்தத்தின் ஒலியோ மிக பிரமாதம்
பறக்கும் சப்தத்தைக் கேட்டால் பிர மதங்களும்
நிதம்—(அழகை)

[ராகம்: காம்போதி

5. பவிழக் கொடி தனிலே பரந்த சந்திரன் போலே
பல்லின் காந்தியும் பட்டவுடனே உதட்டின் மேலே
தவஸிகள் மனம் போலே தாவள்ளிய மாய்
மெம்மேலே
ஸரஸ்வதி முகம் பார்க்கும் ஸாதனம் கபோலம் மேலே

[ராகம்: சங்கராபரணம்

6. சிந்துவில் எழுந்த தோர் சந்திரன் போல் முகமும்
ஸந்ததம் சாற்றும் மொழி ஸாதுக்களுக்கு அமுதமும்
எந்த வினைகளையும் வக செய்திடும் நிதமும்
மந்த காஸ முகத்தில் மயக்க மற்ற பதமும்—(அழகை)

## 66. விருத்தம்

சங்கரரின் கடைக்கண் பார்வை ஸகல மதவாதிகளேன்
ஜெயித் தே நிற்கும்

சங்கரின் கடைக்கண் பார்வை சாற்றௌு சுகம் அளித்து
தானுய் ஆக்கும்
சங்கரின் கடைக்கண் பார்வை சந்தேகம் மாய்த்து
ஸமரஸமாய் தேக்கும்
சங்கரின் கடைக்கண் பார்வை ஸம்ஸார ஸாகரத்திற்கு
அணையும் ஆகும்

## 53. பாட்டு

மந்திரமாவது நீறு — என்ற மெட்டு

தாளம்: ஆதி] கண்ணிகள் [ராகம்: ஆரபி

1. சங்கரர் கொண்ட வெண்ணீறு—சங்கைகள் தீர்க்கும்
வெண்ணீறு
தங்க ஞானம் தரும் நீறு—பங்கையன் போற்றும்
வெண்ணீறு

2. மூன்று கோடுள்ள வெண்ணீறு மும்மலமாற்றும்
வெண்ணீறு
மூன்று லோகங் களுக்கும் செல்வ முழுதும்
வழிகாட்டும் நீறு

3. மூன்று நதிகளோ என்ன முனிவர்கள் போற்றும்
வெண்ணீறு
மூன்று வேதங்களும் மூன்று ரேகை களான
வெண்ணீறு

4. முக்குணம் மாற்றும் வெண்ணீறு நிர்குணமாக்கும்
வெண்ணீறு
ஸத்குணர் இட்ட வெண்ணீறு ஸர்வமும் தாமாகும்நீறு

5. ஜென்மவினை தீர்க்கும் நீறு சின்மயன் நெற்றி
வெண்ணீறு
தன்மயமான வெண்ணீறு வன்பிணி மாய்க்கும்
வெண்ணீறு

6. பேத மகற்றும் வெண்ணீறு அபேத ஸுகம் தரும் நீறு
பாதமலர் சேர்க்கும் நீறு பரமன் அணிந்த வெண்ணீறு

## 67. விருத்தம்

அஞ்ஞாரண்ணியம் தன்னில் அறிவிழந்துழல்வோர்க்
கெல்லாம்
விஞ்ஞானமளித்து மெள்ள வேதனை தீர்க்கவென்றே
எஞ்ஞாற்றும் புகழும் ஈசன் இரங்கியே கருணையாலே
மெஞ்ஞான வடிவுகொண்டு மேதினிதனில் எழுந்தார்

## 54. பாட்டு.

நடமாடி திரிந்த — என்ற மெட்டு

தாளம்: ரூபகம்] பல்லவி [ராகம்: காம்போதி

மௌன விருதத்தை விட்டு மஹேசனும் மாணிலத்தில்
மானிட உருவாய் வந்தார்.

அனுபல்லவி

கௌனத்துடனே பௌத்த மதங்களெல்லாம் பேதிக்க
கேதம் மெல்லாம் தவிர்த்து கீர்த்தி எங்கும் வியாபிக்க

சரணம்

1. ஆலடி தன்னை விட்டார் அன்பர் கருள வென்று
காலடி க்ஷேத்திரத்தில் கருணையுடனே இன்று
மேலடியார்கள் போற்ற மேன்மையாகவே நின்று
ஞாலம் முழுவதும் நடந்தார் நாதனும் சென்று
—(மௌன)

2. அஞ்ஞான அடவியில் அரியாமை என்னும் தீயில்
அகப்பட்டு விழித்திடும் ஆத்மகோடியிடத்தில்
மெஞ்ஞான ஸுகம் தன்னில் மேவியிருக்க அதில்
மெய்யனும் கருணையால் மேனி கொண்டார் உலகில்
—(மௌன)

3. துஷ்டமதஸ்தருக்கு துஷ்டராய் இருப்பவர்
கஷ்டமெல்லாம் தவிர்க்கும் கருணை வள்ளலும் அவர்
இஷ்டமுடன் பாதத்தை தினமும் பஜிப்பவர்க்கு
சிஷ்டரைக் காக்க திருடவிரதம் உடையவர்க்கு
—(மௌன)

4. ஸாங்கியன் முதலான ஸகல மதஸ்தர்களும்
ஓங்கியே கவலையால் உலேந்தார்கள் என்றாலும்
பாங்காக பிரம்மணியம் பரவியே எங்கிலும்
நீங்காமல் யாக யாகங்கள் நிகழ்ந்தது மேமம்லேும்
—(மௌன)

5. ஆஸ்திக மதமெங்கும் ஆரவாரித்தது
நாஸ்தி கர் மதமெல்லாம் நாடாமல் ஒழிந்தது
சாஸ்திர வழி எல்லாம் தானே பிரகாசித்தது
ஸ்தோத் தரித்து தேவர்கள் சிந்தை குளிர்ந்தது
—(மௌன)

6. இவருக்கு இணையாக எவ்வுலகத்தும் இல்லை
இவர் புகழை இயம்ப யாருக்கும் வல்லமை இல்லை
இவருக்கு சரியாக இருப்பார் ஒருவரில்லை
இவருக்கு இவரேதான் இல்லாமல் வேறில்லை—(மௌ)

## 68. விருத்தம்

வள்ளலின் வாக் பிரவாகம் வர்ணிக்க யாரே வல்லார்
வெள்ளைத் தாமரை அமர்ந்த வேதனும் விளம்பார்
என்றால்
உள்ளத்தில் உறுதியில்லா உலகமானிடரோ வல்லர்
அள்ளத்தகாத ஆத்ம சக்தியை கொண்ட மெய்யன்

## 55. பாட்டு

கும்மி மெட்டு

1. இந்திரியத்தால் வரும் விஷயங்களை எல்லாம்
தந்திரமாக இவர் ஜெயித்தார்
சிந்தையில் எழும் சினங்களை யெல்லாம்
சுந்திரர் பெருமை யினால் ஜெயித்தார்

2. காம குரோதங்களை ஜெயித்தார் அவர்
தாமத குணம் தனை துலைத்தார்
நேமமாய் நித்தியானந்த நிலைதனில்
(எமமும் ஜாமமுமாய் இருந்தார்)
காம தகனனும் தானிருந்தார்

3. பொருமையை கூறும் பொழுது அவருக்கு
பூமிதேவியும் நிகராகாள்
அருமையாய் அவர் அடைந்த கல்விக்கு
ஆறுமுகனும் ஸமனாகார்

4. அகத்தில் கொண்ட வைராக்கியம் உரைத்திட
சுகமுனியும் இணையாகார்
ஜெகத்தில் உள்ள முனிவர் களுக்கெல்லாம்
மிகவும் சிகரம் போல் இருந்தார்

5. குலமும் பரிசுத்தம் ஆச்சுதென்று அப்போ
குவலயத் தோர்கள் கொண்டாடி நின்றார்
கலையும் பல கற்று கருணையுடன் அவர்
களிப்புடன் மெத்த காட்சி யளித்தார்

6. அறிஞர் களுக்கெல்லாம் அரசனை போலவர்
ஆனந்தமாகவே வீற்றிருந்தார்
பிரியா அன்பர்கள் பிரமரம் போலவே
பாதமலர் மது உண்டுகந்தார்

7. அஞ்ஞான மதத்தில் அறிவிழந்தோர்க் கெல்லாம்
மெஞ்ஞான ஒளஷதமாய் இருந்தார்
பிரஞ்ஞ வடிவமாய் சங்கரரும் அப்போ
மெஞ்ஞானத்தாலே ஜொலித்து நின்றார்

8. கங்கா பிரவாஹம் போல் எங்கிலும் நிறைந்து
சங்கரர் வாக்கமுதம் பொழிய
பங்கம் செய்த பட்ட பாஸ்கரர் மதமும்
சங்கையில் லாமல் அழிந்தது வே

9. மனம் எனும் மதயானையை அடக்க
பாசற்ற வாக்கு கயிறுகும்
தினமும் ஞான அரசன் அமர்ந்திட
திழுகம் திவ்விய நகராகும்

10. அரியாமை என்னும் அழுக்கை அலம்பிட்
அத்வைத வாக்கு தண்ணீர் ஆகும்
பொறி புலன் களைந்த பூரண ஞானிகள்
பூண்டிடும் முத்து வடமாகும்

11. கவலையென்னும் குவியல்களை யெல்லாம்
காற்றெனவே பறக்கடிப்பார்
பவ கடலை கடத்திடவே பாதம்
பாங்கான தோணியாக இருக்கும்

12. மதம்கொண்ட மதவாதிகள் வாக்கை
மடக்க மந்திரமாய் இருக்கும்
வேத சிகை எனும் தாமரை மலரில்
வாசனை எங்கிலும் வீசி நிற்கும்

13. தாபத்திரயத்தை யகற்றியே அன்பர்க்கு
தத்துவ ஞானம் உரைத்திடுவார்
ஆபத்தை யகற்றி அன்பாய் உள்ளமதில்
அல்லும் பகலும் அமர்ந்து இருப்பார்

14. எங்கும் நிறைந்தது சங்கரர் புகழும்
மங்களமாகவே மாநிலத்தில்
திங்களைப் போல திகழும் ஞான ஒளி
கங்குல் பகல் அரை கண்டதுவே

15. ஆரியர் வாக்கின் பெருமை யுரைத்திட
ஆதிசேஷனாலும் ஆகாது
பாரில் இவர்க்கிணையாக பகர்ந்திட
பல கலையாலும் முடியாது.

69. விருத்தம்

மும்மூர்த்தி வடிவம் என்றும் முழுமுதல் கடவுள் என்றும்
எம்முனீச்வரரும் போற்ற எல்லையில் மகிமை கொண்டு
தம்மதம்தனை ஸ்தாபித்து ஸகலருக்கும் நன்மை நல்க
வம்பர் தம் மதம் துலைத்த சங்கரர் நம்மை காக்க

**சங்கரரின் ஏழுவயது முடிய அற்புத சரித்திரவர்ணனம் என்னும் நான்காம் அத்தியாயம் முற்றிற்று.**

**விருத்தம் —11]** **[பாட்டு—12.**

— ★ ★ ★ —

# ஐந்தாம் அத்தியாயம்

70. விருத்தம்

குருகுல வாஸம் செய்து குறையர கல்வி கற்று
பெருமையாய் பிரம்மசாரி ஆசிரமம் தன்னில் நன்றாய்
அருமையாய் வயது ஏழு ஆனது அவருக்கப்போ
திரும்பி தன் கிருகத்தில்வந்து சிறக்க தாய் அடிபணிந்தார்

## 56. பாட்டு

நீலிமகன் நீயல்ல வோ — என்ற மெட்டு.

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : கரகரப்ரியா

தாயின் தாளடிதனில் பணிந்தார் — சங்கரர் ஸதா

அநுபல்லவி

ஆயும் வேதங்களாலும் அறியாத பரம்பொருள்
தூய மனதுடனே தொழுது தொண்டு புரிந்து

சரணம்

1. ஆர்த்திகளை தீர்க்கும் ஆதிகுருவும் திவ்விய
கீர்த்தி நிறைந்து கிரக கிருத்தியமது செய்ய
பார்த்தவர் இவரை பரமேசனே என்று உய்ய
பார்தனில் எழுந்தார் பால சங்கரர் மெய்ய (தாயின்)

2. மாதுர் சிருஷ்டி செய்து மகிமையுடன் சிரக்க
மகிழ்ந்து காலை மாலையும் மறைகள் மிக ஒலிக்க
ஸாத்வீக குணத்துடன் சகலரை பூரிக்க
சங்கரரும் சதா கதிரவன் போல் ஜொலிக்க (தாயின்)

3. கண்டவர்கள் யாவரும் கைகூப்பி எழுவார்
கழலிணை பணிந்து கவலையெல்லாம் விடுவார்
பண்டை செய்த வினைகள் பரந்ததென்று புகழ்வார்
பரவசமாகி அவர் பரமனென்று தொழுவார் (தாயின்)

4. புத்திரன் புகழ் கண்டு பூரித்துள்ளம் மகிழ்ந்தாள்
புத்தியின் கூர்மை கண்டு பேசொண்ணுமல் நிகழ்ந்தாள்
சுத்த ஸ்படிகம் போல் ஜொலிக்க மேனியைக்கண்டாள்
நித்தியானந்தமாய் நெஞ்சம் பூரித்து உகந்தாள் (தாயி)

## 71. விருத்தம்

அருந்தவத்தாலே பெற்ற அருமை மைந்தனை தாய் கண்டு
வரும் பவ பிணி அகற்றும் வள்ளலே என்று எண்ணி

பெருமையாய் வாழும் போது கிழ பருவமும் வந்ததந்தோ
ஒருதினம் நதியில் ஸ்நானம் செய்யவே தாயும் சென்ருள்

## 57. பாட்டு

சாந்தமாக உன் — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : பாகேச்வரி

ஸ்நானம் செய்திட தாயும் தளிர் நடையாய்
சென்றனள் மெல்ல மெல்ல பூரணு நதிக்கே

அனுபல்லவி

ஈனம் தவிர்த்திடும் ஈசன் அன்னைக் கதிரோன்
தாபம் தாங்காமலே தாமதித்தாள் வரவே

சரணம்

1. தாயை காணுமலே சங்கரர் சந்தேகித்து
தானும் சென்ருர் வழியில் தாயுமிருக்க பார்த்து
தூய மலர்க் கையினுல் சுத்த ஜலம் தெளித்து
துடைத்துபசரித்து துரிசாய் இல்லம் அடைந்து (ஸ்நா)
2. மங்கள மொழியினுல் கங்கை தனை ஸ்துதிக்க
சங்கரர் மொழிகேட்டு கங்கை மிக சிறக்க
கங்கு கரையின்றியே அங்கே யாரும் பிரமிக்க
அங்கம் குளிரக்கண்டு அன்னை அகம் களிக்க (ஸ்நா)
3. நொங்கு நுரையுடனே பொங்கி யெழுந்து வர
அங்கு கண்ட ஜனங்கள் ஆச்சரியத்தை பெற
பங்கஜ கண்ணன் கோவில் பக்கம் பெருகி வர
இங்கனெனவே மனம் சீதளமாய் குளிர (ஸ்நா)

## 72. விருத்தம்

தீரமாம் செய்கையாலே திக்கெட்டும் கீர்த்தி மேவ
யாராலும் ஆற்றவொண்ணு அற்புத செய்கை யென்று

கேரள அரசன் அப்போ கேட்டுளம் மிக பூரித்து
சீரதாய் அமைச்சரே நீர் சென்றுமே அழையுமென்ருர்

## 58. பாட்டு

வாரும் வளைச் செட்டியாரே — என்ற மெட்டு.

கண்ணிகள்

1. அரசன் உரைத்த மொழியை அந்த
அமைச்சனும் கேட்டுகந்தார்
பரம பிரேமை யுடனே பார்க்க
பகரொணுனந்தம் கொண்டார்

2. யானை சேனைகளுடன் அநேக
அற்புத பொருள்களுடன்
ஞான சொரூபனை சங்கரரை
நாடியவர் நடந்தார்

3. ஊனை அடைந் பலன் நமக்கு
உற்றது என்று மகிழ்ந்தார்
தானே தானுய் நிறைந்த சத்குரு
தன்னை நினைந்து புகழ்ந்தார்

4. சம்போ சரணம் என்று தாழ்ந்து
தாளிணையில் பணிந்தார்
நம்பும் அடியோர் துன்பம் தீர்க்கும்
நாதனே என்று புகழ்ந்தார்

5. பேராத புண்ணியத்தால் உம்மை
பார்க்கும் பாக்கியம் பெற்றேன்
கேரள ராஜன் என்னை அனுப்ப
கேத மறவே உற்றேன்

6. மன்னர் மன்னர் மதிக்கும் மிக்க
மகிமையுடையோன் ஆவான்

சின்மய ஞானிகளுக்கு — தொண்டு
செய்து மிக மகிழ்வோன்

7. தீரத்திலும் சிறந்தோன் — யுத்த
வீரத்திலும் சிறந்தோன்
பாராளும் மன்னர்க் கெல்லாம் — மெத்த
சூராதி சூரன் ஆவான்

8. ஸம்ஸார ஸாகரத்தை — தாண்டி
தன்மயம் ஆக்க வென்று
உம்மை பணிந்து உள்ளம் — உண்மை
உறுதியடைய வென்று

9. எம்மை யனுப்பி வைத்தார் — இறையே
இரங்கி அருள வேண்டும்
உம்பர்க் கதிபதியே — இறங்கி
உற்றருள் வீர் கதியே

10. பாத தூளி யணிந்து — ஜன்மம்
பரிசுத்த மாக வென்று
பாதம் பணிந்து உம்மை — இரஞ்சி
பரிவுடன் அழையும் என்றார்

11. ஆணி பொன்னால் அழகு — அமைந்த
யானை சேனைகளெல்லாம்
காணிக் கையாய் அளித்து — களிக்க
கர்த்தனை அழையும் என்றார்

12. அரசன் உரைத்த படி — அமைச்சனும்
அன்பாய் உரைத்து நின்றார்
வரிசை யுடனே கேட்டு — நன்றாய்
வள்ளலும் தானுரைப்பார்

13. உந்தன் மொழியைக் கேட்டு மிகவும்
சந்தோஷ மாச்சு தென்றார்
சுந்திர ஞானி களுக்கு இப்பொருள்
சுகம் உண்டோ சொல்வீர் என்றார்

14. பிரம்ம விசாரம் செய்து தினமும்
பிக்ஷை எடுத்து உண்டு
பிரம்ம சாரி யாகவே இருக்க
பேரின்பம் வேறே உண்டோ

15. மாந்தோலே ஆடையாக உடுத்து
மகிழ்ந்து இருப்பவருக்கு
வணிக்க பொருள் எல்லாம் எங்களுக்கு
எடுத்து நீர் செல்லும் என்றார்

## 73. விருத்தம்.

1. சுதர்மத்தை விட்டு இந்த துச்சமாம் விஷயம் ஆகும்
பதவியை பற்ற வென்று பார்த்திபன் உரைத்தான் என்று
இதம் தருமோ ஈதெல்லாம் என்றுவும் இறைக்கு சொல்லி
எதையும் நாம் விரும்போ மிப்போ எடுத்து நீர் செல்லும் என்றார்

2. மடமையை தீர்த்து இந்த மானிலத் தோரை யெல்லாம்
கடமையைச் செய்ய வென்று கழறுவீர் மன்னர்க் கென்றார்
திடமுடன் உலகில் யாரும் சுதர்மத்தை செய்ய வென்றும்
உடமை ஈதென்று நரனும் உரைத்ததாய் உரைப்பீர் என்றார்

## 77. விருத்தம்

3. சந்திரன் போன்ற அந்த சங்கரர் மொழியைக் கேட்டு
மந்திரி திரும்பி அந்த மன்னனின் பதியில் சென்று
சுந்திரமான பாலர் சங்கரர் சரிதமெல்லாம்
சந்ததமும் உரைக்கக் கேட்டு சாற்றெருணுத இன்பம்
கொண்டார்

## 59. பாட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : கல்யாணி

அந்தணர்கள் சூழவே ஆனந்த மாகவே
சங்கரரும் இருந்தார்

அனுபல்லவி

சந்திர கிரணம் போல் தரித்த யஞ்ஞோபவீதம்
சார்ந்தெங்கும் ஒளியிட சந்தோஷமேலிட

சரணம்

1. தங்க கலரதனை சார்ந்த முஞ்சிக் கயிறும்
சங்கரர் அங்கத்தை சுற்றி யிருக்கையாலும்
அங்கம் பூரித்தவரை கண்டோர் எல்லாம் மேலும்
பங்கஜ பாதத்தை பணிந்தார்கள் எல்லோரும்

2. கற்பக விருக்ஷம் போல் கருணை புன் முறுவலும்
கண்டவர்க் கருத்தினை கவர்ந்திடுவதாலும்
அற்புத மான் தோல்மேல் அமர்ந்து இருக்கையாலும்
அரசனும் அவரடிக்கு அடைக்கலம் ஆனார் மேலும்

3. மன்னனே நீரும் இங்கு வந்த காரியம் என்ன
மலையாமலே நீரும் மகிழ்ந்து சொல்விர் நன்று
தன்னுலியற்றப் பெற்ற சார்ந்த நாடகம் மூன்றும்
தந்தோம் காணிக்கையாக தயை செய்யவேணும்
என்றும்

4. ஐந்து இலக்ஷணங்களும் அமைந்திட்ட கவிதன்னை
ஆமோதித்து ஐயனும் ஆனந்தம் கொண்டார்
முன்னே
எந்த வரமும் கேளும் என்றார் சங்கரர் தன்னை
மைந்தனை தாரும் என்றார் மன்னன் மகிழ்ந்துபின்னே

5. இந்த பொருள்கள் எல்லாம் இல்லறத்தவர்க்கு ஈவீர்
சந்தோஷமாக நீர் சார்ந்து உம்மிடம் போவீர்
புத்தி தளர வேண்டாம் புத்திர காமேஷ்டி செய்வீர்
வந்தருள் புரிகுவார் வாஸுதேவனும் பாரீர்

## 78. விருத்தம்

அருமையாய் அவருரைத்த அமுத பிரவாகம் தன்னை
பெருமையாய் உண்டு வேந்தன் பெருந்தகை மிகவும்
கொண்டு
திருவடி பணிந்து போற்றி சிரத்தில் கரம் குவித்து
திரும்பி தன் நகரம் தன்னை சிறப்புடன் அடைந்தான்
வேந்தன்

## 79. விருத்தம்

கரையிலா வேதத்துண்மை கை நெல்லிக்கனிபோல் கற்று
குறை யெல்லாம் தீர்க்குகின்ற குருபரன் இவரே என்று
அறிவினில் சிறந்ததான அறிஞர்கள் மிக உகந்து
தரையினில் அவதரித்த ஸத்குரு இவரே என்றார்

## 60. பாட்டு

ஸர்குருநாதன் கடாக்ஷவலை — என்ற மெட்டு

தாளம் : திருபுடை] பல்லவி [ராகம் : பூரிகல்யாணி

வயது முதிர்ந்த தாயை வணங்கி உபசரித்து
மகிழ்ந்து நாள் சில கழித்தார்

அனுபல்லவி

தயை நிறைந்த அந்த சங்கரரும் தாய்க்கு
தத்துவ பொருள் தன்னை சாற்றி தியாகியாகி

சரணம்

1. தனயனுக்கு தாய் துணை தாய்க்கு தனயன் துணை
ஆக இருந்து வந்தார்
தனதகம் தன்னிலே சங்கரரும் சதா
துறவறம் நினைந்திருந்தார்
தினகரன் போல் சிவ சம்புவும் ஜொலிக்கவே
மனம் மிகவும் மகிழ்ந்து மாதாவும் சிறக்கவே (வயது)

2. கல்வி கரை கண்ட குமரனைக் கண்டு தாய்
கருத்திலொன்று நினைந்தாள்
நல்ல குலத்திலுதித்த நங்கையை நன்றாய்
நறுமணம் செய்யவென்றே
எல்லாமறிந்துமே எக்காலமும் உணர்ந்தோர்
எல்லா முனிவரும் ஏகினர் அங்கு சென்று (வயது)

3. உபமன்னியு ததீசியும் கௌதமர் திரிதவரும்
உகந்து அகஸ்தியரும்
அபரோக்ஷமாய் அரன் அவனியில் வந்ததை
ஆவலாய் காண வந்தார்
அபரிமி தானந்தம் கொண்டு சங்கரர் அப்போ
அன்னையுடனே அவர் அன்பாய் உபசரித்தார் (வயது)

4. ஆசனம் அளித்து அர்க்கிய ஆசமனியம்
ஆத்ம ஞானிகளுக்கு அளித்தார்
ஆசையுடனே அனேக விஷயங்களை எல்லாம்
பேசி மிகவும் களித்தார்
நேசமாய் சங்கரர் தாயும் நிகழ்ந்திடுவார்
நீங்களிங்கு வர பாக்கியவான் ஆனேனென்றார் (வய)

## 80. விருத்தம்

அந்தமாம் முனிவர் தன்னை ஆரியாம்பிகையாள் பார்த்து
இந்த மைந்தனை யான் பெற்று ஈடிலாதிருப்பதற்கு
முந்திநான் முயன்று செய்த மேன்மையாம் தவமதென்ன
அந்தமாம் மொழியைக் கேட்டு அகஸ்தியர் ஆயலுற்றார்

## 81. விருத்தம்

பதிதிரு பாதமே நீர் கதியென்று இருந்து முன்னாள்
புதல்வனை வேண்டி நீவிர் புராரியை பூஜை செய்தீர்
ததி இது என்று எண்ணி சந்திர சேகரரும் அந்நாள்
துதி பெற அனுக்கிரகித்து தோன்றினார் இங்கு என்றார்

## 61. பாட்டு

எந்தனிடது கண்ணும் தோளும் — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம்: இந்துஸ்தான் காப்பி

இவ்விதமாய் முனிவர் இயம்பியதை அறிந்து
இன்னம் ஒரு ரகஸியம் கேள்பாள் மனது துறந்து

அனுபல்லவி

திவ்விய மைந்தன் ஆயுள் காலம் செப்புவீர் என்று
தேவியும் கேட்கவே திகைத்து நின்றார் பயந்து

சரணம்

1. உந்தனுடைய மைந்தன் வயது எட்டாகுமம்மா
எந்தையருளால் கிட்டும் மேலும் எட்டு அம்மா
சுந்திரமான பதினாறு வயதுடனே
இந்த உலகில் இவர் இருந்திடுவார் அம்மா (இவ்வி)

2. இந்த மொழிகளெல்லாம் வந்த முனிகள் கேட்டு
இன்னும் இரகசியம் இயம்பிடு வரோ விட்டு

வந்த வழியை நோக்கிப் போவோம் இவ்விடம் விட்டு
வள்ளலாம் சங்கரரிடத்தில் விடையும் பெற்று (இவ்)

3. முனிவர் மொழியைக் கேட்டு முற்றும் மனம் குழம்பி
இனி என்ன செய்குவோ மென்று மிக வெதும்பி
தனிமையில் இருக்கின்றோம் சங்கரன் தனை நம்பி
மன அமைதியில்லாமல் மயங்கி கண்ணீர் ததும்பி
(இவ்வி)

## 82. விருத்தம்

தாய் படும் துயரம் கண்டு சங்கரர் ஈதுரைப்பார்
ஓய் வில்லா அலைகள் மேவும் உததியில் அதுபோலம்மா
ஓய்விலா சம்சாரத்தில் ஊறும் சுகமுண்டோ சொல்வாய்
பாய் மரக் காகமென்ன பறக்கும் இவ்வாயுளந்தோ

## 83. விருத்தம்

காற்றினுல் சுற்றுகின்ற கப்பலின் கொடிபோலம்மா
சாற்றுமொரு துயரம் கொண்டு தரணியில் உழல்வோம் ஆயுள்
கூற்றுவன் கொண்டு செல்வான் கூன் உடல் இவ்விடம் விட்டு
தோற்றுவர் உண்டோ தாயே செப்புவாய் என்றுரைத்தார்

## 62. பாட்டு.

நவசித்தி பெற்றாலும் சிவபக்தி இல்லாத நரர்கள்
பெரும்சாவி — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : முகாரி

1. சந்தைக் கூட்டமதினில் சந்திப்பன்றோ ஸம்ஸாரம்
தாயே சுகம் தருமா
மந்த மதியினால் மயங்கி மிக பிரமித்தால்
மாமோகம் தான் விடுமா

எத்தனை அன்னையோ எத்தனை தந்தையோ
எத்தனை புதல்வர்களோ
அத்தனைபேர் களுக்கும் நித்தியம் அழுவதென்றால்
மெத்தக் கடினம் அன்றோ (சந்தைக்)

2. அஞ்ஞானத்தால் மிக அறிவிழந்தோர்களை
அமித்திவிடும் ஸம்ஸாரம்
மெஞ்ஞான வழிதன்னை மேவிடச் செய்யாத
மேதினி ஸுகம் நிஸ்ஸாரம்
சந்நியாஸ ஆசிரமத்தை மன்னியே நானிருக்க
அன்னையே அருள் புரிவாய்
இன்னில ஸுகம் எல்லாம் எண்ணிடேன் இனிஅம்மா
இந்நேரம் விடை தருவாய் (சந்தைக்)

## 84. விருத்தம்

சந்நியாஸ மென்ற சொல்லை தாய் செவி கேட்டபோதே
கன்னியே கருத்து மிக்க கவலையாய் கண்ணீர் மல்கி
என்ன யான் செய்வேன் அந்தோ என் இளம் குழந்தாய் என்று
அன்னையும் அலறி அங்கு அன்புடன் உரைக்கின்றாளே

## 63. பாட்டு

சேறி முற்றும் சிவபக்தி — என்ற மெட்டு

கண்ணிகள்

1. மெத்த தவத்தினால் இத்தரை தனிலே
பெற்றெடுத்தேன் எந்தன் குழந்தாய்
சித்தம் புண்ணாக நீ செப்பிய மொழிகள்
மெத்த கொடுமையே குழந்தாய்

2. ஏக புதல்வனைப் பெற்ற ஏகாங்கி நான்
என்று அறியாயோ குழந்தாய்
ஏகி விட்டால் உடன் போய்விடும் உயிர்
என்று அறியாயோ குழந்தாய்

3. ஈமக்கடன் செய்து என்னை ஈடேற்றிட
யார் இங்கு உள்ளார் சொல் குழந்தாய்
ஸாமகானப் பிரியன் தந்த வரம் இதோ
தத்தளிக்கின்றேன் என் குழந்தாய்

4. எல்லாம் அறிந்த நீ எந்தனை இவ்விதம்
தொல்லைக் குள்ளாக்கவோ குழந்தாய்
எல்லை யில்லா வயதான என்னை நீயும்
எப்படி துறப்பாய் குழந்தாய்

## 85. விருத்தம்

இவ்விதம் அன்னை சொல்ல இறைவனும் கேட்டுதம்முள்
எவ்விதம் ஸந்நியாஸத்திற்கு இசைந்திடச் செய்வதென்று
செவ்வையாய் தாயின் சித்தம் தெளிந்திங்கு இருப்பதற்கு
இவ்வாறுய்ச் செய்வோ மென்று ஈசனும் எண்ணம்
கொண்டார்

## 64. பாட்டு

தன்னை யறிந்தேனே — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: புன்னாகவராளி

உள்ளம் தன்னிலே ஒரு யோசனை ஒன்று கொண்டார்

அனுபல்லவி

வெள்ளப் பெருக்குள்ள பள்ளத்திலிறங்கி
வள்ளலும் ஸ்நானம் செய்திட நெருங்கி

சரணம்

1. அன்னை அனுமதியால் நாமும் அடையவேணும்
ஸந்நியாசம்
முன்னே வழிகாட்டும் முக்கிய முதல்குருவாகும்
நிலையம்
சொன்ன சுருதி மொழி சூக்ஷ்மம் அறிந்தகம்
இன்னிலம் எங்கும் நாம் செல்ல வேண்டியதாகும்
(உள்ளம்)

2. நதியினில் ஸ்நானம் செய்ய நாதனும் நாடி
இறங்கி நின்றார்
விதியே முதலே யென காலே விரைவாய் இழுத்திடவே
கதி இது என்றுமே தாயை அவர் கூவ
கதி கலங்கி தாயும் கிலேசத்தினால் மேவ (உள்ளம்)

3. அந்தக் குரல் கேட்டு மிகவும் சிந்தை கலங்கிவந்தாள்
எந்தன் மைந்தனே இனி நான் என்ன செய்குவேன்
என்றாள்
தந்தையைப் பிரிந்து தவிக்கும் எந்தனுக்கு
மைந்தனே நீ கதி என்றிருந்தேன் அந்தோ (உள்ளம்)

4. பொல்லா முதலே வாயில் புகுந்த மகனைக் கண்டு
எல்லையில்லாத் துயரால் நெஞ்சம் ஏக்கம் மிகவும்
கொண்டு
அல்லல் அகற்றிடும் ஹர ஹர சிவா என்று
அன்னையும் துன்பத்தால் ஆரவாரித்து நின்று (உள்)

## 86. விருத்தம்

அஞ்சிட வேண்டாமம்மா அளித்திடு ஸந்நியாஸத்தை
சஞ்சல சுபாவம் கொண்ட ஜலசரம் என்னை விட்டே
துஞ்சியே போகு மம்மா துயரை நீ கொள்ளவேண்டாம்
மிஞ்சிய ஜோதியாக மேதினி எங்கும் செல்வேன்

65. பாட்டு

மலடி வயிற்று மகன் போலே — என்ற மெட்டு

தாளம்: ஆதி] திருப்புகழ்

1. துறவறம் அது பெற வரமது தருகுவாய்
வரும் பவப் பிணிக் கொரு மருந்தெனத்திகழ்ந்திடும்
இருவினை பயம் அரும் இணை இல்லா சுகம் தரும்
அருள்வாயே

2. ஆகமங்கள் எல்லாம் அரையும் பொருள் இதுவே
தாகமாய் சாதுக்கள் சார்ந்த பதம் இதுவே
மோகமெல்லாம் கடந்த முக்தி நிலை இதுவே
அருள்வாயே

3. பயம் அகற்றி அபயம் அளிக்கும் பதம் இதுவே
சுயம் ஜோதியாகவே துலங்கும் இடம் இதுவே
தயவுடன் தாயே தந்திடுவாய் இந்த
வரம் தானே

4. மைந்தனின் மொழிதன்னை மாதாவும் கேட்டு
தந்தோம் வரம் என்று சந்தேகம் விட்டு
அந்த க்ஷணம் தன்னில் அகன்றது முதலே
விரைந்தே

5. மானஸ ஸந்நியாஸம் வகித்தோம் நாமென்றார்
ஞான ஒளி திகழ ஞாலம் முழுதிலும்
மானவர் வானவர் மயக்கம் தெளிந்து மனம்
மகிழ்ந்தார்கள்

6. தாபத்தை தணித்த தன் தாயினைப் பணிந்தார்
ஆபத் ஸந்நியாஸம் ஆகும் இதென்றார்
கோபமும் மோஹமும் பாபமும் கடந்த
பதமென்றார்

## 87. விருத்தம்

தந்தையின் செல்வமிக்க தளர்வர இருக்குதம்மா
பந்து வர்க்கங்களெல்லாம் பேணியே உம்மைக்காப்பார்
அந்திமக்கிரியை யெல்லாம் அவர்களே அன்பாய் செய்வார்
சிந்தை நீ தளர வேண்டாம் சென்றிட அருள்வாய் என்றார்

## 66. பாட்டு

கண்டதுண்டோ கலியுகத்தில் — என்ற மெட்டு

தாளம் : ஆதி] [ராகம் : இந்துஸ்தான்

1. சங்கரர் சாற்றிய மொழி தாயும் கேட்டாள்
அங்கம் தளர்ந்து மிகவும் ஆயாஸம் கொண்டாள்
மங்கள மதி முகத்தை காண்ப தெந்த நாள்
சங்கரா நீ சாற்றுவது சரியோ இன்னாள்
சங்கரா — சங்கரா — சங்கரா — சங்கரா (சங்ரர்)

2. உந்தன் நாமம் உணர்ந்தோர்கள் உற்றார் ஸாத்வீகம்
உந்தன் புகழ் பேசியே பெற்றாரே ஸுகம்
உந்தன் பாதம் பூஜித்து துறந்தாரே ஜெகம்
உந்தன் மொழி கேட்டு துன்பம் உற்றதே அகம்
சங்கரா — சங்கரா — சங்கரா — சங்கரா (சங்கரர்)

3. சம்புவை தனயனாகப் பெற்றோம் நாமென்று
நம்பியே நாளைக் கழித்து வந்தேன் நானின்று
எம்பிரான் அருள் இதுவோ இசைந்தது இன்று
வெம்பியே தவிக்கின்றேன் மைந்தனே நின்று
சங்கரா — சங்கரா — சங்கரா — சங்கரா (சங்கரர்)

4. தந்தையை இழந்த துன்பம் மறந்து போச்சே
உந்தனைப் பிரியும் துன்பம் வரலாச்சே
பந்து வர்க்கங்ளுக்கிது மிக ஏச்சே
இந்த உலகத்தவர்க்கு மெத்த பேச்சே
சங்கரா — சங்கரா — சங்கரா — சங்கரா (சங்கரர்)

5. அந்திம திசையில் நீயே வரவேண்டும்
மைந்தனே உன் கையால் கிரியை செய்ய வேண்டும்
இந்த வரம் இப்பவே நீ தரவேண்டும்
சிந்தை மிக தவிக்குதே உன்னைக் கண்டும்
சங்கரா — சங்கரா — சங்கரா — சங்கரா (சங்கரர்)

## 88. விருத்தம்

அல்லிலோ பகலிலோ அல்லது அந்தி ஸந்தி அதினிலோ
அன்னையே என்னை நீ அன்புடன் அழைத்திடில் அங்கு
நான் ஓடி வருவேன்
நில்லாமல் வந்து நினைத்தபடி செய்குவேன் நெஞ்சம் நீ
அஞ்சவேண்டாம்
நிதமும் நீ நிர்மல ஞானியர்கள் ஸங்கமே நீங்காமல்
செய்து வருவாய்
நல்லோர்கள் கேள்வியும் நாரணன் பூஜையும் நாளும் நீ
செய்து மகிழ்வாய்
நானும் சில தேசங்கள் சென்றுமே நலமுற தாயே
இருந்து வருவேன்
எல்லை இல்லா வெகு தூரமே ஏகி நான் இருந்திட்ட
போதும் அம்மா
சொன்னபடி செய்குவேன் சோகம் கொண்டிட
வேண்டாம் அன்னையே என்றுரைத்தார்
திக்கில்லா என்னை விட்டுச் சென்று விட்டானே என்று
மிக்கவும் வருந்த வேண்டாம் இங்கு நம் இனத்தோர்
எல்லாம்
தக்கவே ஆதரிப்பார் தயவுடன் தாயே உன்னை
பக்குவமாய் உன் வாக்கால் பதராமல் விடை ஈ என்றார்

## 67. பாட்டு

மானிட ஜென்மமிதேனோ ஸுகம் — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: இந்துஸ்தான் பியாக்

நொந்து கொள்ள லாகாது தாயே — சிந்தை
தந்திடுவாய் வரம் நீயே செல்ல

அனுபல்லவி

அகல இருந்தாலும் அருகில் இருப்பது போல்
ஸகல விஷயங்களும் தானே நடக்கும் அம்மா

சரணங்கள்

1. தந்தையைப் பிரிந்த என் தாயை மிகப் பரிந்து
பந்து வர்க்கத்தோரை பேணி பார்ப்பீர் சிறந்து

2. ஸந்நியாசம் செய்ய வென்று ஸங்கல்பம் செய்து விட்டேன்
அன்னையே அனுக்கிரகம் செய்வாய் நீ உள்பட்டே.

3. உறவினர்களிடத்தில் ஒப்படைத்தார் அன்னையை
துறவியா கவே செல்ல துணிந்துவிட்டார் முன்னையே

4. கன்றைப் பிரிந்த தாயை போலே கண்ணீர் விட்டாள்
சென்றிடவே தாயை தாழ்ந்து விடையும் கேட்டார்

5. கங்கைப் பெருக்கினலே கண்ணன் கோயில் முழுதும்
பொங்கியே புகுந்தது பூரணர் கண்டப்போது

6. கண்ணன் கோயிலிலுள்ள மண்ணைப் பறித்திடவே
கண்டவர்கள் மிகவும் கவலையும் கொண்டிடவே

7. அங்கம் பூரிக்கவே அசரீரி யாகவே
பங்கஜக் கண்ணனும் பாங்காய் பகரவே

8. சங்கரா நீ உன் தாயை சந்தோஷிக்க
கங்கையை அழைத்தாய் கண்டவர் சிறக்க

9. பொங்கியே அலைமோதி எங்கும் பிரவாகிக்க
பங்கமாய் விட்டதே பார்த்தவர் பிரமிக்க

10. அந்த மொழியைக் கேட்டு ஐய்யன் சந்தோஷப்பட்டு
சிந்தையாய் வேறு கோயில் கட்ட உத்திர விட்டு

11. அக்கரையுடன் கிருஷ்ண விக்கிரகத்தை யெடுத்து
மிக்க சந்தோஷமாய் பிரதிஷ்டை செய்தார் அடுத்து

## 89. விருத்தம்

பத்திர மாகத் தானே பிரதிஷ்டைகள் செய்த பின்பு
உத்திரை கர்பம் கார்த்த உத்தமன் அருளைப்பெற்று
மெத்தவும் பெருமை கொண்ட பெற்றதாய் கருணைப்பெற்று
உத்திர திசைக்குச் சென்றார் உகந்து ஸந்நியாசம் கொள்ள

## 68. பாட்டு

குருகுலவாஸம் உல்லாசம் — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: இந்துஸ்தான் பியாக்

இல்லறம் துறந்து சென்றார் குருநாதன்

அனுபல்லவி

1. நல்லற மானதோர் துறவறம் பூண்டிட
நாதன் அருளை வேண்டிட — குரு

2. அன்னைபின் அருளையும் அச்சுதன் கருணையும்
அன்புடனே அடைந்தார் — அகமகிழ்ந்து

3. அகஸ்திய முனிவரால் ஆயுள் பிரமாணம் கேட்டார்
அகத்தில் வைராக்கியம் கொண்டார் — ஆனந்தமாக

4. காமன் தன்னை எரித்த ஸாமகானப் பிரபு
நேமமுடனே நடந்தார் — நிற்குணரப்போ

5. ஆறு குணமும் பெற்று ஆறு சமாதி உற்று
சீராய் வைராக்கியம் பெற்று — சின்மயன் நன்றாய்

6. தேடாமல் கிடைத்ததை திருப்தியுடன் புஜித்து
வாடாமலே நடந்தார் — மனம் நியஜித்து

7. காடு கரையுடனே கிராமங்களும் கடந்தார்
நாடும் நகரம் துறந்தார் — நாடாமல் மனம்

8. இந்திர ஜாலம் போல் இலங்கும் இந்த உலகம்
சிந்தித்தார்க்குண்டோ நலம் — சிறப்பதாக

9. பிரம்ம ஸொரூபமல்லால் பிரபஞ்சம் வேறில்லையென்று
நிர்மலமாக நினைத்தார் — நிர்குணர் அப்போ

10. நாஸ்திகர்களின் மதம் நாடிடாமல் விரட்டி
ஆஸ்திகத்தைப் பாராட்டி — ஹரனும் அப்போ

11. ஆரியனும் இப்படி ஆனந்தமாய் நடந்தார்
சூரியனும் மறைந்தார் — துருஸாடனே

## 90. விருத்தம்

குரு மஹா ராஜனை கோவிந்த பாதர் வாழும்
நர்மதா நதியோரத்தில் நலமுடன் வாஸம் செய்யும்
நிர்மல வடிவைக்காண விமல சங்கரரும் எண்ணி
அற்புதமாக அங்கு ஆசிரமம் ஒன்று கண்டார்

## 69. பாட்டு

எங்கும் நிறை நாதபிரம்மம் — என்ற மெட்டு

தாளம்: ஆதி ] பல்லவி [ராகம்: செஞ்சுருட்டி

எங்கெங்கும் தேடி இங்கு வந்தார்
சங்கரர் மகிழ்ந்தார்

அனுபல்லவி

அங்கு வாழும் முனிவர்தன்னை அன்பாய் அவர் கேட்கவே
தங்க ஞானி வாழும் குக துவாரம் காட்டி நிற்கவே

சரணம்

1. ஆத்ம சொரூபம் தன்னை அடைந்து களிக்கவே
ஏத்த சமயம் இது என்று தான் சுகிக்கவே (எங்)

2. தத்துவ உபதேசத்தை சார்ந்து கொள்ள வேண்டிட
நித்தியனும் நெஞ்சில் எண்ணி நின்றாரே கொண்டாடிட (எங்)

3. கோவிந்த பாதர் வாழும் குகையதனைக் கண்டார்
மேவியே பணிந்தெழுந்து மெத்த இன்பம் கொண்டார் (எங்)

4. மும்முறை குகையை அன்பாய் முதல்வன் சுற்றி வந்துமே
எம்பிரான் இவரே என்று எண்ணியே பணிந்துமே (எங்)

5. தஞ்சமென்று பணிந்து குக துவாரமதில் சென்றார்
நெஞ்சம் பூரித்தவரை ஸ்தோத்தரித்து நின்றார் (எங்)

6. ஆயிரம் பணமுடியால் அவனிதன்னைத் தாங்குவீர்
அன்புடன் ஹரன் அங்கத்திற்கு ஆபரணம் ஆகுவீர் (எங்)

7. பத்மநாபர் பள்ளிகொள்ள பஞ்சணை நீர் ஆகுவீர்
சித்தம் மகிழ்ந்தெனக்கு சீக்கிரம் அருளுவீர் (எங்)

8. பதஞ்சலி சொரூபமாக பார்தனிலே தோன்றினீர்
பாங்குடன் பல சிஷ்யருக்கு பகர்ந்தீர் யோகநூலும் நீர் (எங்)

9. வியாகரண பாஷ்யம் தன்னை விரிவாக எழுதினீர்
விளங்கவே கௌதம பாதரிடம் விமல ஞானம்
பெற்றீர் நீர் (எங்)

10. ஆர்த்தியெல்லாம் தீருமென்று கீர்த்திகேட்டு
இங்குற்றேன்
பார்த்து என்னைக் காப்பீர் என்றே பாதம்
பணிந்தேன் என்றார் (எங்)

## 91. விருத்தம்

பூர்வ சரித்திர மெல்லாம் புகன்றவன் யாரோ என்று
நேரினில் சென்று நேர்மையை அறிவோமென்று
சீருடன் நிஷ்டை தன்னை தியஜித்தவர் எழுந்து சென்று
யார் நீ உரைப்பாய் என்ன அன்புடன் விளம்பினரே

## 70. பாட்டு

தச ச்லோகியின் — என்ற மெட்டு.

1. பூதம் ஐந்தில்லை பொறிகளுமில்லை
புகலும் பிராணங்கள் தானில்லை
பேதமாகும் குணங்களும் இல்லை
போத அதீத சிவோஹமே (பூதம்)

2. வர்ணமுமில்லை ஆசிரமம் இல்லை
வர்ண ஆசிரம தர்மமில்லை
நிர்ணயமாக செய்ய ஒன்றில்லை
நிகழும் சாக்ஷி சிவோஹமே (பூதம்)

3. தந்தை தாயில்லை தானவர்க்கான
மந்திர யாகாதி கர்மம் இல்லை
மந்தமான ஸுஷுப்தி சூரியம்
அற்ற அதீத சிவோஹமே (பூதம்)

4. ஆறு மதங்களும் எனக்கில்லை
அவைகளில் அபிமானமில்லை
சீருடனே விசுத்தமாகவே
துலங்கும் அதீத சிவோஹமே (பூதம்)

5. பத்து திக்கிலும் நானில்லை
பக்கமோடு கீழ் எனக்கில்லை
திக்கு திசை யற எங்கும் வியாபித்து
திகழும் அதீத சிவோஹமே (பூதம்)

6. அஞ்சு வர்ணமும் எனக்கில்லை
ஆறு விகாரங்கள் தானில்லை
மிஞ்சும் ஜோதியாய் எஞ்சி நின்றதோர்
மிகுந்ததான சிவோஹமே (பூதம்)

7. சாஸ்திரம் சொல்லும் சத்குரு இல்லை
பாத்திரமான சிஷ்யன் இல்லை
தோத்த மாத்திரமான மாயா
துவந்துவ மற்ற சிவோஹமே (பூதம்)

8. மூன்று அவஸ்தையும் தானில்லை
தோன்றும் அபிமானிகளும் இல்லை
சாற்றும் அவித்தையினை கழுக்க கன்றதோர்
சாக்ஷியான சிவோஹமே (பூதம்)

9. வியாபகத்திற்கும் வியாபகமாகி
விளங்கும் வஸ்து தத்துவமாகி
துயர் மிகத்தரும் அநித்திய விஷயத்தில்
தோய் உராத சிவோஹமே (பூதம்)

10. ஒன்றும் இல்லை இரண்டும் இல்லை
ஓங்கும் ஒப்பற்ற பொருளெல்லாம்
நின்ற ஒளியல்லால் இருளும் தானல்லால்
திகழும் அதீத சிவோஹமே (பூதம்)

## 92. விருத்தம்

இல்லையே ஒன்று என்பது இங்கு உற்று நோக்கிடில் தன்னிடம்
தொல்லை மாயை தோன்றியே மறைந்த தென்பது எவ்விடம்
எல்லையற்று ஏதுவற்று எங்கும் தன்மயமானபின்
சொல்லும் வேத சாஸ்திரங்களும் ஏதுமோ எனக்கில்லையே

## 71. பாட்டு

திருப்புகழ்

வங்கார மார்பில் அணி — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : மனோலயம்

1. கோவிந்த பாதர் அவர் கூறிய மொழி அறிந்து
தாவியே எழுந்தவரும் சந்தோஷத்துடன் உகந்து
கூவியே அழைத்தவரை குறை தீர்க்கும் சங்கரர்
நீர் என்றாரே

2. ஞாலத்தவர்க்கு ஆத்ம ஞானமதை நவிலவென்றே
காலடியில் அவதரித்த கைலை பதி என்றறிந்தேன்
சீலமுடன் திருவடியை சங்கரனும் காணும்படி
செய்தாரே

3. சங்கரரும் கேட்டவுடன் சரணமென்று தாழ்பணிந்தார்
மங்களமாய் மலர்க்கரத்தால் மகிழ்ந்து அவரை
பூஜை செய்தார்
அங்கம் பூரித்தவரும் ஆத்ம உபதேசமதை
செய்தாரே

4. எல்லாம் அறிந்ததான ஏக வஸ்துவாய் இருந்தும்
தொல்லை தவிர்ப்பதற்கு ஸ்ரீகுருவின் பாதமல்லால்
இல்லை யென்பதை இந்த மானிலத்தோர் அறிய
நினைந்தாரே வென்றே

5. ஆசாரியர் பரம்பரையை அவனியுளோர் அறியும்படி
நேசமுடனே அவரும் நிகழ்த்தி நின்றார் பணி
விடைகள்
மாசற்ற பூஜைகண்டு மகத்குருவும் மனம் மிகவும்
மகிழ்ந்தாரே

6. பிரக்ஞானம் பிரம்மம் என்றும் பேரின்ப வடிவ
மென்றும்
யக்ஞாற்றும் விளங்குகின்ற எல்லையற்ற ஏகமென்றும்
அக்ஞான ரஹிதமான அகம் பிரம்ம அஸ்மி என்றும்
உரைத்தாரே

7. தத்பதத்தும் தொன்பதத்தும் சார்ந்து அத்தீதமாய்
விளங்கும்
தத்துவமஸி நீயே என்று ஸத்குருவும் உபதேசித்தார்
அத்வைத போதஸாக அயமாத்மா பிரம்மமென்றும்
உரைத்தாரே

8. வின்யாஸமாய் விளங்கும் வியாச சூத்திர பொருளும்
சந்நியாஸிகள் அறியும் சகலவித தத்துவங்களும்
தன்னால் கருணையுடன் சங்கரருக்கு சந்தோஷமாய்
உரைத்தாரே

9. சத்குரு உரைத்த மொழி சங்கரரும் கேட்டுகந்தார்
நித்திய நிராமயமாய் நிர்குணமாகச் சிறந்தார்
சத்திய ஞானானந்த சமரஸ சொரூபமதாய்
நிறைந்தாரே

## 93. விருத்தம்

ஆதி குரு நாரணன் அவர் புத்திரன் வேதனும்
அவர் மைந்தன் வசிஷ்டனும் அவர் புத்திரன் சக்தியாகும்
அவர் புத்திரர் பராசரர் ஜோதி முனி வியாசராம்
அவர் புத்திரர் சுக முனியாம் அவர் சிஷ்யர் கௌடபாதர்

சீதமணியணிந்த சிவ சம்புவே சங்கரராய்
நிகழுவே வந்துதித்த போதம் நிகழ்ந்திடவே
போதிக்க வந்த நம் கோவிந்தபாதர் பதம் பணிகுவோமே

## 72. பாட்டு

" இம்மாத்திரம் கருணையை " — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : ஆனந்தபைரவி

சங்கரர் ஆசிரமம் கொண்டார் சகலரும் கண்டார்
சந்தோஷமும் கொண்டார் சரி சரியென்று விண்டார்

அனுபல்லவி

அங்கமதில் காஷாய வஸ்திரம் அலங்கரிக்க
எங்கும் பிரகாசிக்க இமயம் போலே சிறக்க
பொங்கும் கருணையமுதம் எங்கும் அன்பர்
உள்ளத்தில் தங்கும்
அல்லல்கள் எல்லாம் நீங்கும் அருள் மயமாய் ஓங்கும்
(சங்கரர்)

சரணம்

1. சுருதிகள் எல்லாம் விளையாடி மகிழ்ந்திடவே
தூய ஞானியர் எல்லாம் மேலும் மதித்திடவே
பரிதிபோல் ஒளியெங்கும் வீச—
பாஷண்டர் கண்கள் கூச
பகர்வதற்கு லேச பரமன் புகழ் பேச (சங்கரர்)

2. பரமஹம்ஸர் ஆசிரமம் பெற்றார் யாவரும் போற்ற
பத்மநாபனுடனே பங்கஜாஸனனும் ஏற்ற
பவ பயங்கள் எல்லாம் நீற்ற பரதத்துவமே
பரமானந்தமே ஊற்று சாற்ற
பரம்ஹம்ஸர் போற்ற (சங்கரர்)

## 94. விருத்தம்

பிரம்மமாகிய பால்தன்னில் பிரபஞ்சமாம் தண்ணீர் சேர்ந்து
நீர்மதி மிகவும் கொண்டு நீர்தராய் இருப்போர் தன்னை
தர்ம மார்க்கத்தைக் காட்டி தன்மய மாக்கவென்றே
நிர்மல வடிவே இந்த நிகிலத்தில் எழுந்த தந்தோ

## 73. பாட்டு

ராகம் : பூபாளம்] [தாளம் : ஏகம்

1. கங்குல் அகற்றி கதிரவன் வருவது போல்
சங்கரர் உள்ளிருள் நீக்கி வரார்
மங்கள மாகவே மறையோர் மனம் மலர
எங்கெங்கும் ஆனந்தம் பொங்கிவர (கங்குல்)

2. கதிரவன் கண்ட கமலமது போலே
கதி பெற அன்பர்க்கு அருள் செய்தக்காலே
ததியறிந்து இந்த தாரணி வந்ததாலே
பதி இவர் என்று பணிந்தார் அவர் காலே (கங்கு)

3. பக்தர்கள் ஹிருதயத்தில் பாங்காக அமர்ந்துமே
சித்த விகல்பம் தவிர்த்து மே
முக்தி பதத்தை முதல்வன் அளித்துமே
முக்குண பேயை துலைத்துமே (கங்குல்)

4. சஞ்சல மென்னும் மேக கூட்டங்கள் சாய்ந்தது
ஸம்ஸார இருள் நன்றாய் மாய்ந்தது
அஞ்சல் என ஐய்யன் அபயம் கிடைத்தது
ஆனந்த வெள்ளம் நிறைந்தது (கங்குல்)

5. பொறி புலனையடக்கி போத மழை பொழிய
பூரணனந்தமாய் உய்ய
குறி குணம் அற்ற குருபரன் அருள் செய்ய
குவலயத்தோர் மனம் தோய (கங்குல்)

6. வாங்மன கோசர வஸ்து மயமாகி
போக்கு வரத்தையும் நீக்கி
தாக்கர நின்றதோர் தத்துவம் பதமாகி
நீக்கமற்ற ஆனந்தமாகி (கங்குல்)

7. அர்க்கன் முதலான ஐக்தொளிக்கும் ஒளியாய்
சொர்க்காதி போகத்திற்கும் வெளியாய்
ருக்காதி பேதங்களும் அறியாய் நிலையாய்
தர்க்காதி மதஸ்தரும் சார்ந்ததாம் பதியாய் (கங்)

8. நித்தியானந்தக்கடல் தன்னில் நீராடி
நிகிலமாகிய பனி இல்லாமலே ஓடி
மித்தியவாதிகள் மனமும் மிகவாடி
மிகுந்த பரமாத்மா சொரூபம் தன்னை நாடி (கங்)

## 95. விருத்தம்

### கார்காலம் வந்து ஆசாரியரின் சமாதியை கலைத்தது.

———:o:———

ஒப்பற்ற நிஷ்டைதன்னில் உகந்து அவர் இருக்கும்போது
எப்பற்றும் அற்ற ஏக வஸ்துவை எண்ணி நெஞ்சில்
அப்ரமேயரும் இருக்க அற்புதமாக அன்னாள்
செப்பவே கார் காலம் தான் திகழவே வந்தப்போ

## 74. பாட்டு

கருணைக்கடலே காந்தி மதியே — என்ற மெட்டு

கண்ணிகள்

1. இடியுடன் மின்னல் மேகங்களை ஏவினான் இந்திரன்
துடியில் யானை துதிக்கை போல் ஊந்து தினமும்
பொழியவே

2. நடுநடுங்கியே ஜனங்கள் மிகவும் நடுக்கங்
கொண்டார்கள்
திடு திடெனவே மரங்கள் விழவே திகைத்து
நின்றார்கள்

3. கங்கு கரைகள் இன்றி வெள்ளம் கரை புரளவே
அங்கம் பதறி அக்கிரகார ஜனங்கள் மயங்கவே

4. பயங்கர வெள்ள சப்தம் கேட்டு சங்கரர் உணர்ந்தார்
தயங்கி குரு ஸமாதியை எண்ணி தயாபரர் இருந்தார்

5. பிரணவ மந்திரம் ஜபித்து பிரபுவும் கமண்டலத்தை
வைத்தார்
நிர்ணயமுடன் நிக்காமல் ஜலம் நிமிஷத்தில் இழுத்தார்

6. ஆச்சரியத்தைக் கண்டு ஜனங்கள் அகம் மகிழ்ந்திட்டார்
ஆசாரியரான கோவிந்தபாதர் மிகவும் மகிழ்ந்திட்டார்

7. அன்பேவடிவாய் எழுந்த எனது அருமை சிஷ்யனே
இன்பமுடனே உகந்தோர் வசனம் இயம்புவேன்
தானே

8. அத்வைதத்தால் ஆத்ம தத்துவம் விளங்குவது போலே
சுத்தமான சரத்காலம் விளங்குவதாலே

9. நீர் வளத்தாலே நிலவளமும் வளர்ந்தது இக்காலே
நேர்மையான குருவின் உபதேசத்தினாலே

10. குருவின் உபதேசம் பெற்ற குணக்ஞனும் சிஷ்யன்
பருவமாய் சஞ்சாரம் செய்ய பாங்காய் ஏகுவான்

11. மாயையின் குணம் மாய்த்த மகான் மனமதுபோலே
தூய இந்துவும் துலங்கினன் ஆகாயம் தன்னிலே

12. மைத்ரியாதி குணங்கள் நிறைந்த மகான்கள்
உள்ளம் போல்
துய்ய ஒளியாய் நக்ஷத்திரங்கள் தோன்றின இவை
போல்

13. சிறந்த சரத்கால மகிமை செப்பிடத்தரமோ
நிரந்தர சுகமான நிலையை நிகழ்த்திடலாமோ

## 96. விருத்தம்

தூய மேகங்களாலே துலங்கிடும் ஆகாயந்தான்
ஆயதோர் சரத்காலத்தில் ஆதவன் அழகு மிக்க
நேயமாய் லக்ஷ்மி வாழும் நிமலர்தன் மார்போ என்ன
ஆயதிங்காதலாலே நம்மவர்க்கிசைந்த தென்றூர்

## 75. பாட்டு

எங்கிருக்கிறான் — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : ஸிந்து பைரவி

உற்றுக் கேட்டிடாய் சத்துவ குணம் நிறைந்த
உத்தமனே உரைப்பதை

சரணம்

1. இலங்கிடும் யோகியர்கள் ஹ்ருதய கமலம் போல்
துலங்கிடும் சூரியன் கண்ட பங்கஜம் போல்
அல கிலா ஆனந்தம் கொண்டு மெம்மேலும்வண்டுகள்
பல இடங்களும் செல்ல பாங்குடனே இக்காலே
(உற்றுக்)

2. விருக்ஷத்தின் அழகைப்பாராய் விளங்கும் சந்நியாசி
போலே
புஷ்பங்களே காவியாடைபோலே இருக்கையாலே
பட்சமுடனே வண்டுகள் ருத்ராக்ஷம் அதுபோலே
இலட்சணமாய் அரும்புகள் கமண்டலமாகையாலே

3. தாரணை தியானத்தினலும் சமாதி சிரவணத்தாலும்
காரணனை பூஜை செய்து கார்காலம் கழித்து
விட்டோம்.

தாரணி மானிடர் உய்ய சஞ்சாரம் செய்வோம் இனி
பூரணனந்தத்துடன் புகழ் பெற்றிருப்பார் ஞானிகள்
(உற்றுக்)

4. தாபத்திரயம் என்னும் காட்டுத்தீயில் தவிப்போர்களை
ஆபத்தையெல்லாம் அகற்றி அத்வைத ரசத்தை ஊட்டி
பாபகர்மங்களை நீக்கி பாமரர்க்கு இதம் சாற்றி
பாங்குடன் பரமசிவன் பதியாம் காசியைப் போற்றி
(உற்றுக்)

## 97. விருத்தம்

புத்திரனே கேட்பாய் முன்னம் புகழ்பெறும் வியாசர் சொன்ன
உத்தமமாம் மொழியை இப்போ இயம்புவேன் கேட்டு நீயும்
அத்திரிமா முனிவர் செய்த சத்திரயாகம் அதற்கு
மெத்தவுமே ரிஷிகள் தேவர் மேன்மையாய் வந்தார் அன்னாள்

## 98 விருத்தம்

அந்தமாசபையில் அப்போ அறமுனி வியாசர் வந்தார்
சுந்திர பாதம் தன்னை தொழுது நான் பூஜை செய்து
சிந்தையில் எழுந்ததான சிலசில சந்தேகங்கள்
சொந்தமாய் கேட்க யானும் சிறப்புடன் மகிழ்ந்துரைத்தார்

## 76. பாட்டு.

எத்தினை எடுத்துரைத்தும் — என்ற மெட்டு.

கண்ணிகள்

1. வேதமோடு சாஸ்திர புராண இதிஹாஸமும்
வேண்டியபடி அருளி செய்தீர் விளங்கவே உலகினில்

பூதலத்து மானிடர் புனிதராகி வாழ்கவே
பிரம்ம ஸூத்திரம் புகன்றி பூரணானந்தமாய்

2. பேதமதியாய் அவர்கள் பிதற்றியே மதியிலா
பேதமையால் மிக உழன்ருர் பித்தனாய் திரிந்தனர்
ஆதலால் அவர்க்கொரு அற்புதமாம் பாஷியத்தை
ஐயனே நீர் செய்யவேண்டும் என்று நான்
இறஞ்சவே

3. அன்பர்களுக்கு அணிமணியே அவருரைத்த
தறிகுவேன்
என் மொழியைக் கேட்டவரும் இணை இலா
ஆனந்தமாய்
முன்னமே அரன் சபையில் முழுதும் நாம் உரைத்
துள்ளோம்
என்னைப்போல் எல்லாம் உணர்ந்து எல்லையில்லா
மகிமையாய்

4. வேத வேதாந்தங்களுக்கு விரைவாய் பாஷியம்
எழுதுவான்
பேத மத வாதிகளை பேதித்து விரட்டுவான்
ஓதகிரணம் எனவே திகழும் கீர்த்தி திக்கெட்டும்
கேதம் தீர கமண்டலத்துள் கோர வெள்ளம்
புகுத்துவான்

5. என்றுமே உரைத்து முனி ஏகிவிட்டார் கைலையில்
அன்றவர் அரைந்தபடி அத்தனையும் உன்னிடம்
இன்று நான் இருக்கக் கண்டேன் என்னுளம்
மகிழ்ந்துளேன்
குன்று ஞானியர்கள் போற்றும் குணமணி நீரா
மென்ருர்

6. ஒப்புயர்வு அற்ற நீயே உயர்வாம் பாஷியம் இயற்று
வாய்
இப்புவியில் எங்கும் உன்னை ஏற்றியே புகழ்வாய்
தப்பறவே ஜீவர்களுக்கு தத்துவ ஞானம் போதிக்க
இபபவே நீர் ஈசன் வாழும் காசி க்ஷேத்திரம்
செல்லுவீர்

7. சந்திர சேகரன் மகிழ்ந்து தங்கும் ஸந்நிதானமும்
ஸௌந்தரியாம் தேவ கங்கை சூழ்ந்துமே சோபிக்கவும்
இந்திரரும் வந்து தினம் ஏற்றி பூஜை செய்குவார்
அந்த இடம் சென்றதும் அரன் அருள் புரிகுவார்

99. விருத்தம்

தேசிகன் பாதம் போற்றி தினம் கழித்திருப்பதோடும்
மாசிலா மனதினுள்ளே மகத்குரு தனை நியானித்தும்
கூசிடாதிருக்கும் அந்த சங்கரர் தன்னை நோக்கி
காசி நீ செல்வாய் என்று கருணை கூர்ந்தருள் புரிந்தார்

100. விருத்தம்

தாமரை பாதம் தன்னை சங்கரர் பணிந்து போற்றி
மாமறை பொருளுரைத்த மகிமை மனதில் எண்ணி
பூமகள் கடாக்ஷம் ஓங்கும் புனிதமாம் காசி க்ஷேத்திரம்
தாமத மன்றிக் காண சங்கரர் புறப்பட்டாரே

77. பாட்டு

சரவண பவா — என்ற மெட்டு.

தாளம்—ஆதி] பல்லவி [ராகம்—கல்யாணி

அருள் புரிகுவீர் குருபரனே நீர் — அருள் புரிகுவீர்

அனுபல்லவி

இருள் அகற்றியே எழும் இரவி போல் என்னுளம் புக்கியே
இருந்தாய் அருணன் போல்

சரணம்

1. திருவடி போற்றி செல்குவேன் காசி நான்
திருமொழி சாற்றி திகழ்வேன் தினம் தான்
ஹிருதயம் தன்னிலே எண்ணியே உம்மை நான்
இருப்பேன் உலகில் இரவு பகல் தான் (அருள்)

2. எங்கெங்கும் நிறைந்த ஏகமாம் சொரூபா
மங்களம் பொங்கிடும் மாமறை வடிவா
துங்க ஞானம் தரும் சுருதியின் முடிவா
பங்கஜ பாதமே பணிந்தேன் இறைவா (அருள்)

3. சத்குரு ரூபனே ஸமரஸ போதனே
நிற்குண மானதோர் நிமல பிரதாபனே
துற்குணம் அகற்றும் துரிய அதீதனே
ஸத்குரு நாதனே சரணம் நான் தானே (அருள்)

## 101. விருத்தம்

சத்குரு அருளைப் பெற்று சங்கரர் காசி சென்றார்
மெத்தவும் ஜொலிக்கும் யூபஸ்தம்பமும் அங்கு கண்டார்
சுத்தமாய் ஓடும் கங்கா நதிக்கரை தன்னைக் கண்டார்
கர்த்தனை பூஜைசெய்யும் கதம்பா வனமும் கண்டார்

## 78. பாட்டு

க்ரீடதி வனமாலி — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: ஸிந்துபைரவி

கங்கையைக் கண்டனரே சங்கரர் — தெய்வ

அனுபல்லவி

சங்கரர் சடை தன்னில் மங்களமாய் தங்கி
பொங்கியே புவிதன்னில் புகழுடனே ஏகிய

சரணம்

1. பயங்கரமான தவம் பகீரதன் செய்யவே
பயனை அளித்ததான பாகீரதி தன்னை (கங்கை)

2. பத்மநாபனின் திவ்விய பாத காந்தியினாலே
சுத்த ஸ்படிகம் போல் தோன்றி உலகில் வந்த (கங்)

3. வண்டுகள் சப்தத்தால் கானம் செய்வது போலும்
தண்டாமரை மலர்கள் நர்த்தனம் செய்ய மேலும் (கங்கை)

4. தூய்மையான நுரைகள் துலங்கும் புன் சிரிப்பென
தாயினைப் போல் அலைகள் தாவியணைப்பது என (கங்)

5. மங்கையர்கள் வந்து மகிழ்ந்து ஸ்நானம் செய்ய
கங்கையை சோபித்து பொங்கி மிகவும் உய்ய (கங்கை)

## 102. விருத்தம்.

சங்கரர் கண்டுகந்து தெய்வ கங்கையினில் நீராடி
முங்கியே வெளியில் வந்தார் முற்றிலும் நிறைந்த பூர்ணர்
திங்களோ என்ன யாரும் திகைத்திட காட்சி தந்தார்
அங்கங்கள் சோபை மிக்க ஆனந்தமாக நின்றார்

## 79. பாட்டு

நினைப்பதெப்போது நெஞ்சே — என்ற மெட்டு.

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: நாதநாமக்கிரியை

நாதனை பூஜை செய்தார் சங்கரர் — விச்வ

அனுபல்லவி

1. வேதங்கள் நாலும் காணாத அநிதனை
வேத வேதாந்த சொரூபனும் தாயனை — (நாதனை

2. முப்பத்தி முக்கோடி தேவர்கள் பூஜிக்கும்
ஒப்பில்லா வடிவான உமையாள் ஒரு பாகனை —
(நாதனை)

3. பக்தி பரவசனாய் பரிசுத்தனும் ஸ்திரமாய்
நித்தியானந்தனும் நிர்மல ஹிருதயமாய் — (நாதனை)

4. ஆர்த்திகளைத்தீர்க்கவே அன்று அன்பருக்காக
மூர்த்திகரித்த இந்த கீர்த்தியான க்ஷேத்திரத்தில் —
(நாதனை)

5. அத்தனை பூஜைசெய்து நித்தியம் உகந்திருக்க
மெத்தவும் சிறந்ததோர் உத்தம க்ஷேத்திரமென்று —
(நாதனை)

6. கங்கையில் ஸ்நானம் செய்து சங்கரரும் தியானித்து
மங்களமாய் சில நாட்களும் கழித்து வந்தார் (நாதனை)

துறவறத்தைக் கூறும்
ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

விருத்தம் — 11] [பாட்டு — 12.

---

# ஆறாவது அத்தியாயம்



## ஸனந்தநர் சங்கர பகவத் பாதருக்கு சிஷ்யனாய் அடைதல்



### 103. விருத்தம்

கருதியது அளிக்கும் வள்ளல் காசிமாநகர் தன்னில்
பரிதிபோல் பிரகாசம் மிக்க பாரெங்கும் கீர்த்தி ஓங்கும்

இருந்திடும் வேளை தன்னில் இவர் புகழ் கேட்டு அப்போ
அருள்பெற வேண்டி அங்கு அந்தணர் சிறுவன் வந்தான்

## 104. விருத்தம்

இல்லறத்தாசையற்று இரவிபோல் ஒளியைப் பெற்று
அல்லலாம் கடலைத்தாண்ட அருளெனும் தோணி வேண்டி
எல்லையில் கருணை கொண்ட ஈசன் சங்கரனே என்று
பல்லவ பாதம் தன்னில் பணிந்தவர் தொழுது நின்றார்

## 105. விருத்தம்

பாதமே பணிந்த அந்த பக்தனும் சிறுவன் தன்னை
கேதமே தீர்க்க வென்று கிருபையுடன் மனதில் எண்ணி
தீதெல்லாம் அகற்றுகின்ற திருக்கரத்தால் எடுத்து
ஏது நீ வேண்டி இங்கு வகினாய் என்று கேட்டார்

## 80. பாட்டு

"பாஹி ராமசந்திர ராகவ" — என்ற மெட்டு.

தாளம் : த்ருச்ரலகு] [ராகம் : எதுகுலகாம்போதி

கண்ணிகள்

1. எகினேனும் பாதம் காணவே ஐயா
தியாகியாய் ஆனந்தம் பூணவே
2. அந்தணச் சிறுவன் ஆகும் நான் ஐயா
சொந்த ஊர் சோழ மண்டலமே தான்
3. சத்துக்கள் தரிசனத்தினல் ஐயா
தத்துவப் பொருள் காண விருப்பினல்
4. எங்கும் தேடி இங்கு வந்தேன் நான் ஐயா
பங்கஜ பொற் பாதம் கண்டேன் நான்

5. பவக்கடலைக் கடத்தி யருளுவீர் ஐயா
தவப் பொருளை தயை புரிகுவீர்

6. சோகத்தால் நான் மிகவும் வாடினேன் ஐயா
தாகத்தாலும் சரணம் நாடினேன்

7. அடைக்கலம் என்றே அடைந்திட்டேன் ஐயா
கடைக்கண் பார்வைக்கே ஆவல் பட்டேன்

8. குற்றம் குணம் ஆக்கி அருளுவீர் ஐயா
சுற்றம் துணை நீரே ஆகுவீர்

9. மூவுலகம் போற்றும் குருவே ஐயா
எவ்வுயிருக்கும் அருளும் பிரபுவே

10. அத்வைத உபதேசம் பெற்று ஐயா
முக்தி மண்டபத்தை நாடுவேன்

11. உந்தன் வாக்கிய அமுதம் உண்டவர் ஐயா
எந்த போகமும் வேண்டாதவர்

12. தத்துவ ஞான சிரவணத்தால் உள்ளம் ஐயா
தித்திக்கும் பேரானந்த வெள்ளம்

13. திருவடிக்குத் தொண்டனாகியே ஐயா
இருப்பதற்கு எண்ண மாகியே

14. சரணம் சரணம் தேசிகப் பிரபோ சம்போ
மரண பயம் மாற்றுவீர் இப்போ

15. ஜன்ம வினை தீர்க்க என்று நீர்
அன்பாய் இந்நிலத்தில் வந்து தோன்றினீர்

## ஸனந்தனர் சிஷ்யராகுதல்

### 106. விருத்தம்

ஸனந்தனர் மொழியை அந்த சங்கரர் கேட்டுகந்து
தனதகம் மிக பூரித்து தகுந்த மாணாக்கனென்று
மனமதில் எண்ணி நன்றாய் மகிழ்ந்து ஸந்நியாஸம் ஈந்தார்
தினகரன் என்றே தேசி திக்கெட்டும் திகழ்ந்து நின்றார்

### 81. பாட்டு

"சரணம் சரணம் என்றானே" — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : கமாஸ்

ஸனந்தனர் துறவு பூண்டார் சந்தோஷமாக
தனதகம் பூரித்து நின்றார்

அனுபல்லவி

அனவரதமும் ஆசான் அடிமலர் தொண்டு செய்து
மனம் மகிழ்ந்து மகா வாக்கிய சிரவணம் செய்து

சரணம்

1. கருணை யென்னும் கப்பலினாலே ஸம்ஸார
ஸாகரம் கடத்துவதாலே
தருணம் அறிந்தன்பர்களுக்கு
தத்துவம் உரைப்பதாலே
அருள் பெறவே சித்சுகரும்
சிஷ்யராய் வந்தார் அக்காலே (ஸனந்தனர்)

2. சங்கரர் புகழ் விரிந்திட — காசிக்ஷேத்திரம்
மங்களமாக இருந்திட
சங்கையற்ற சிஷ்யரெல்லாம்

சரணம் என்று அடைந்திட
சங்கரரும் ஸகலர்க்கும்
சார்ந்து அருள் புரிந்திட (ஸனந்தனர்)

3. நட்சத்திர மண்டலம் தன்னில் — அழகாக
நிகழும் பூரண சந்திரனென்ன
அக்ஷயானந்தம் அளிக்கும்
ஐயனும் அநேக சிஷ்ய
வர்க்கங்கள் ஜொலித்திடவே
பட்சமுடனே இருந்தார் (ஸனந்தனர்)

## 107. விருத்தம்

ஆத்ம தத்துவம் போதித்து அநேக சிஷ்யர்கள் சூழ
சாத்வீக குணம் நிறைந்த சங்கர பகவத் பாதர்
மாத்யானிக ஸ்நானம் செய்ய மனதினில் எண்ணி அப்போ
ஸ்தோத்திரம் செய்து கங்கா ஸ்நானத்திற்கு ஏகினுரே

## 82. பாட்டு

நடனமாடினுர் — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: வஸந்தா

ஸ்நானம் செய்யச் சென்றுர் சங்கரர் மகிழ்ந்து
மங்களமாய் மாத்யானீக — ஸ்நானம்

அனுபல்லவி

ஆனந்த மாகவே அநேக மாணுக்கர் சூழ
அற்புதமாய் மணி கர்ணிகா கட்டத்திற்கு

சரணம்

1. சண்டாள வேஷமாய் சதுர் மறைகளை நாயாக்கி
கொண்டாடி சம்புவும் குளிக்க வரும் வழியை நோக்கி
நின்றதை சங்கரர் கண்டார் சற்று
நீங்கி நில் லென்று அவர் விண்டார்

சண்டாள வேஷம் கொண்ட விசுவேசுவரனும் அப்போ
சாற்றுவரர் ஒரு மொழி சங்கரரைப் பழித்து — (ஸ்நானம்)

2. அற்புதம் அற்புதமே அத்துவைத சாஸ்திரத்தை
மெத்தவும் கற்ருேர்
சொற்பமும் பேத மற்ற ஸ்வபிரகாச வஸ்துவில்
கற்பனை தானும் உண்டோ ஜாதி
அற்பமும் பேதமுண்டோ
பற்பல வர்ணங்கள் பராபர வஸ்துவில்
பார்த்திடில் உண்டோ பரம ஞானியே — பகர்ந்திடாய்
(ஸ்நானம்)

3. ஸந்நியாஸ வேஷமாய் தண்டு கமண்டலம் கையேந்தி
இன்னிலத்தவரை ஏமாற்றுவார் சில பிராந்தி
தன்னிலே உணராத தேஹேே முற்றும்
இன்னல் அகன்ற நிலே ஈதென்றுணராமல்
அன்னியர்க்கு உபதேசம் அறைகுராய் அவனியில்
தன்மயமாய் உணர்ந்து ஸமரஸ மாகாமல் (ஸ்நானம்)

## 108. விருத்தம்

அறிவினில் சிறந்தோய் நீவீர் அறைந்தது மிகவும் நன்றே
பொறி புலன் அமைந்த பூத உடலேயோ நீ செல்லென்ருய்
குறி குணம் கடந்ததான கூடஸ்த வஸ்துவோதான்
அறியவே உரைப்பாய் என்று அன்புடன் கேட்டு நின்ருர்

## 83. பாட்டு

வானத்தின் மீதில் மயிலாடக்கண்டேன் — என்ற மெட்டு

தாளம் : ஆதி] சரணங்கள் [ராகம் : பியாக்

1. அன்னமய கோசத்தை அவலம்பித்தோ என்னை
அகல நில் என்றுரைத்தாய்

உன்னிப் பார்த்திடில் உனதுடல் வேருே
எனதுடல் வேருனதோ (அன்னமய)

2. உத்தம ஞானியே உற்று உணர்ந்திடில்
வஸ்து வை என்ருலோ
அத்தனை உயிர்களும் அகண்ட வடிவமென்று
அகத்தினில் அறியாயோ (அன்னமய)

3. ஜாதி வர்ண பேத ஆசிரம தர்மங்கள்
சோதித்து ணர்ந்தாலுண்டோ
பாதித்திட ஒண்ணுத பிரத்யக் சைதன்யமாஞல்
ஜோதி அல்லால் இங்குண்டோ (அன்னமய)

4. தெய்வ கங்கையிலும் சேர் நிரை ஓடையிலும்
தெரியும் வான் ஒன்றன்ருே
ஐயம் அகன்ற நீர் அபிமானத்தால் என்னை
அகல நில் என்றல் நன்ருே (அன்னமய)

5. உள் வெளி ஒன்ருய் ஒளிர்ந்திடும் வஸ்துவில்
ஒன்றென உணராத தேன்
உள்ளத்தில் உடலின் மேல் உறுதிகொண்டு நீரும்
உலைவது சரிதானே (அன்னமய)

6. இந்திர ஜால மே இந்த உலகமென்று
சிந்தையில் அறியா யோ
பந்தம் தீர ஆத்ம ஞானமடைந்தபின்னும்
பேதமை தீரா தேனே (அன்னமய)

## 109. விருத்தம்

சங்கர பகவத் பாத தேசிகர் வியப்படைந்து
துங்க ஞானம் நிறைந்த சொல்லெலாம் கேட்டுகந்து
இங்கு வந்தவர் சண்டாளன் ஆவனே என்று எண்ணி
சங்கைகள் மிகவும் கொண்டு சாற்றுவார் அவனை நோக்கி

## 84. பாட்டு

'ஐந்து வயதினிலே' — என்ற கிளிக்கண்ணி மெட்டு.

கண்ணிகள்

1. சத்தியம் சத்தியமே சாற்றிய மொழி யெல்லாம்
தத்துவம் பொருள் உரைத்தீர் — சிவ சம்புவே
என்றறிந்தேன்

2. விப்ரன் பறையனென்ற விபரீத பிராந்தி யெல்லாம்
இப்பவே விட்டொழித்தேன் — நன்ருய்
இறைவன் நீர் என்றறிந்தேன் (சத்தியம்)

3. அநேக சாஸ்திரம் கற்றும் அநேக சிரவணம் கேட்டும்
அநேக ஜன்மங்களாலும் — பேதம்
அகல வில்லை இவ்வுலகில் (சத்தியம்)

4. தர்மபரிபாலனம் செய்தவற் கென்று நான்
தள்ளி நில் என்றுரைத்தேன் — வேருய்
நிர்மலரே நீர் நினைத்தீர் (சத்தியம்)

5. உந்தன் மொழியைக் கேட்டு எந்தன் பிரமயை
இந்த க்ஷேத்திரம் வாழும் — விச்வ [விட்டேன்
நாதன் என்றே அறிந்தேன் (சத்தியம்)

6. உள்வெளி ஒன்ருகி ஒளிரும் பொருள் உரைத்தோர்
உள்ளபடியே இங்கு — நன்ருய்
நான் வணங்கும் தெய்வம் என்ருர் (சத்தியம்)

7. அந்தணனுகிலும் அகன்ற புலையன் எனும்
சுந்திர ஞானம் பெற்ருல் — தினம்
எந்தன் குருவாகும் நன்ருய் (சத்தியம்)

8. வான் போல் எங்கும் நிறைந்த வஸ்து தத்துவம்
உணர்ந்தோன்
தானவன் நான் வணங்கும் — திவ்விய
ஸத் குரு என்றே அறிவீர் (சத்தியம்)

## 110. விருத்தம்

ஜாதியில் தணிந்த நீச சண்டாளன் ஆன போதும்
ஓதியே மறைகள் கற்ற உயர் விப்ர குலத்தோன் எனும்
ஜோதியாம் வஸ்து தன்னை சோதித்துணர்ந்தோன் யாவன்
போதிக்க வந்த ஞான ஸத்குருவாகும் என்றார்

## 85. பாட்டு

'நல்ல பெண்மணி' — என்ற மெட்டு.

தாளம் : ஆதி] பல்லவி

குல தெய்வம் அவனே நான் வணங்கும் குருபரன் அவனே

சரணங்கள்

1. பல கலையும் படித்த விப்ர குலத்த னானாலும்
பாவ புண்ணிய மறியா பஞ்சம ஜாதி யானாலும்
ஞால முழுதும் நிறைந்த சைதன்யம் நானென்றே
உணர்ந்தோன்
சீலமுடனே நான் தொழுதிடும் ஸ்ரீகுருவாவான்
சிவபிரானுவான்

2. ஜாக்ரம் முதல் அவஸ்தை மூன்றின் சாக்ஷிதான்
என்றும்
ஆக்கும் பிரம்மன் முதல் அணுவரை யாவும்
தானென்றும்
நீக்கி திரிச்ய வர்க்கங்களை நிக்ரகித்தெங்கும்
தாக்கறவே நிற்பவனே சத்குரு வாவான் ஸர்வக்ஞ
னுவான்

3. உடல் முதல் இப்பிரபஞ்சம் ஈராய் ஜடப்பொருள்
என்றே
திடமுறவே செழித்த சித் சொரூபம் தானென்றே

மடமை தீர மனதில் உறுதி அடைந்தவன் எவனோ
மகிமை யுடனே அவனே எனது மகத்குரு வாவான்
வள்ளலுமாவான்

4. சின்மயமாய் சாக்ஷியாக திகழ் பிரம்ம மென்றும்
திரிச்ய வஸ்துவல்ல வென்ற திருடமுடையோனாய்
தன்னிடத்தில் ஸகல உயிரும் கற்பித மென்று
தன்னில் இடம் கொண்ட என் சத்குருவாவான்
தயாபரனுவான்

5. சத்குருவின் சார்ந்த உபதேசம் தன்னாலே
சங்கையற தன் நிலையை அறிந்து கொண்டவன்
மித்தையான பிரபஞ்சம் என்று சஞ்சித கர்மம்
அத்தனையும் வெறுத்த வனே ஆரியனுவான்
ஆசாரியனுவான்

6. ஸகல ஜீவ சாக்ஷியாக இருப்பவ னென்றும்
ஸகல இந்திரியங்களை நடத்துவோன் என்றும்
அகல அகண்ட ஜோதியான பிரம்மம் தானென்றும்
சுக வடிவாய் நிற்பவனே என் குரு வாவான்
என் தெய்வமுமாவான்

7. எண்ணங்கள் ஏதும் எழாத ஏகமாகியே
விண்ணைப் போல் எங்கும் வியாபித்த விமலமாகியே
திண்ணமாய் திகழும் உளம் கொண்டவனெவனோ
பண்புடனே நான் பணியும் பரம் பொருள் ஆவான்
பரசிவமாவான்

## 111. விருத்தம்

சங்கர பகவத் பாதர் சாற்றவே இவ்வாருக
சங்கைகள் செய்த நீச சண்டாள வேஷம் நீக்கி
மங்கையோர் பாகன் தானும் மகிழ்ந்துமே விடைமேலேறி
அங்கையில் மழுமானேந்தி அரன் அங்கு காட்சி தந்தார்

## 86. பாட்டு

'ஆடும் சிதம்பரமோ' — என்ற மெட்டு.

தாளம் ; ஆதி ] பல்லவி [ ராகம் : பியாக்

கண்டார் கைலாசபதியை சங்கரரும்
கண்டார் கைலாச பதியை

அனுபல்லவி

பண்டையன் மால் தேடி கண்டிட ஒண்ணாத
தொண்டருள் வாசனை ஜோதி பிரகாசனை (கண்டார்)

சரணங்கள்

1. திங்களும் கங்கையும் சிரஸ்ஸினில் ஒளியிட
அங்கமதில் பாதி அம்பிகை ஜொலித்திட
சங்கரர் கண்டுமே அங்கம் பூரித்திட
மங்கள மொழியினால் மகிழ்ந்து ஸ்துதித்திட (கண்)

2. பால லோசனம் கொண்ட பரம சிவனே என்றும்
சீலமுடன் காசியில் திகழ் விசுவநாதன் என்றும்
ஆலகாலத்தை யுண்ட ஆதி முதலே என்றும்
காலனை உதைத்திட்ட காலாதீதனே என்றும் (கண்)

3. பண்டார் அடி தன்னிலே பரம குருவாய் நின்று
விண்டார் விமல போத தத்துவம் தன்னை அன்று
சண்டாளர் வேஷம் பூண்டு சதுர்மறை நாயாய் நின்று
கண்டவர் பிரமித்திட காட்சியளித்தார் இன்று (கண்)

## 112. விருத்தம்

உம்பர்களுக்கு இறையே போற்றி உரக பூஷணனே
போற்றி
அம்பர வடிவே போற்றி அகண்ட அத்புதனே போற்றி
எம்மனோர்க்கருள வந்த இறையே என் ஈசா போற்றி
அம்பிகா பதியே போற்றி அரஹரா போற்றி போற்றி

## 113. விருத்தம்

தேகம் நான் எனிலோ உந்தன் திருவடித் தொண்டனானேன்
சோகமாம் ஜீவன் என்னில் திகழும் நின் அம்சமானேன்
ஏகமாம் பிரம்மம் என்றால் யானும் நின் வடிவமானேன்
ஆக இவ்வடிவமாக இருந்தேன் யான் இவ்வாறாக

## 114. விருத்தம்

தன்னொளியாலே எங்கும் இருளறச் செய்வாய் போற்றி
தன்னடி பணிந்தோர்க் கெல்லாம் சார்விட மாவாய் போற்றி
பன்னிய மறைகளுக்கெல்லாம் பரம்பொருளானாய் போற்றி
உன்னிய அன்பர் உச்சி அணிமணி ஆவாய் போற்றி

## 115. விருத்தம்

சாஸ்திரம் கற்றதாலும் சதுர் மறை படித்ததாலும்
சூத்திரம் அறிந்த ஆசான் ஸூக்ஷ்ம தத்துவம் போதித்த
மாத்திர மல்லால் வஸ்து வளமுற ஒளிராதென்றார்
பாத்திரமாக்கி நன்றாய் பரம் பொருள் தன்னை போதித்து

## 116. விருத்தம்

குருவருள் அன்றி ஞானம் கூடுமோ உலகர்க்கந்தோ
வரும் மனோ விருத்தி நீக்கி வள்ளலின் அருளைத்தேக்கி
பொருள் நிறை புகட்டி எந்தன் புத்தி விருத்தியினில் தோன்றி
ஒருத்தனாய் வைத்தாய் உந்தன் ஒளிதிகழ் பாதம் போற்றி

## 87. பாட்டு

காமபீடத்தில் ஒரு காக ரூபியாய் — என்ற மெட்டு.

தாளம் : ஆதி] திருப்புகழ்

1. போற்றி பணிந்தவரை சங்கரரும்
ஆற்றி ஆனந்தக் கண்ணீர் சொரிந்து

சாற்றியே ஸகலர் சந்தேகம் இறந்து
சஞ்சரன் நிற்பதை விசுவநாதர் அறிந்து (போற்றி)

2. பறைய வேஷம் பூண்ட விசுவநாதரும் அப்போ
பகவத் பாதரைப் பாராட்டி பாங்காய் உரைப்பார்
நிறை மதியோய் நீவீர் உரை யாவும் அறிந்தேன்
நிம்மை சோதிக்கவே நீச வேஷம் தரித்தேன்
(போற்றி)

3. எந்தன் அருள் பெற்று விட்டீர் வியாசமுனிபோல்
எந்த மதமும் ஜயிப்பீர் இரவியைப் போல்
மந்த மதி கொண்டு சில மதவாதிகள்
வந்தபடி சூத்திர பாஷியம் செய்தினர் (போற்றி)

4. அந்த பாஷியம் மிகவும் அபத்த மாகையால்
சுந்திர மான பாஷியம் நீர் எழுதவேண்டும்
எந்தத்திக்கிலும் அதினுல் கீர்த்தி பொங்கிடும்
இந்திரன் முதல் தேவர்கள் ஏற்றி புகழும் (போற்றி)

5. பேத மத வாதியாம் பாஸ்கரர் மதமும்
போதிக்கும் சாக்த அபி குப்த மதமும்
ஓதிடும் மண்டன மிச்ரர் கர்ம காண்டமும்
பேதமாம் சைவ நீல கண்ட மதமும் (போற்றி)

6. அத்தனை மதங்களையும் அகலத் துரத்தி
அத்துவைத மதம் எங்கும் நிலை நிறுத்தி
மெத்தவும் அன்பர்கள் மனதை திருத்தி
நித்தியானந்தமாம் நிலையில் இருத்தி (போற்றி)

7. அக்ஞானம் என்னும் இருள் தன்னை அழித்து
மெக்ஞான சூரியன் ஆக செழித்து
விக்ஞானம் தன்னை விளங்க உரைத்து
சுக்ஞான வடிவாக நினைத்து (போற்றி)

8. அடைந்தவர் பவ பந்தம் அகற்றிவைத்து
அத்துவைத ஞானம் அகத்தில் போதித்து
தடையற எங்கும் தத்துவம் உரைத்து
சடுதியில் தன்னிடம் தன்னில் வருவீர் (போற்றி)

## 117. விருத்தம்

இவ்வாறாய் ஈசன் நன்றாய் இயம்பியே மறைந்து விட்டார்
ஒவ்வொன்றாய் கேட்டு மிக்க உவக்கையால் பகவத்பாதர்
அவ்வேளை மாணுக்கர்கள் அநேகம் பேர் சூழ நன்றாய்
செவ்வையாய் மகிழ்ந்து ஸ்நானம் செய்யவே கங்கை
சென்றார்

## 88. பாட்டு

" இந்து வதன சுந்தராங்கி " — என்ற மெட்டு.

தாளம் : ஏகம் ] கண்ணிகள் [ நோட்டு

1. மகிழ்ந்து சங்கரன் மாத்யானீக ஸ்நானம் செய்து
மகிழ்ந்தனர்
புகழ்ந்து புராரி புகன்றதை யெல்லாம் நினைத்து
உள்ளம் பூரித்தனர்
2. உலகர் உய்ய உகந்து பாஷியம் உரைத்து சங்கரர்
மகிழவே
பலகலை பொருள் அமைந்த பதினறு பாஷியம்திகழவே
3. விசுவநாதர் அருளைப் பெற்று அவ்விடம் விட்டு
புறப்பட்டார்
அச்சமற்று ஆனந்தமாகி அவனிமுழுதும் நிறைந்
திட்டார்
4. முக்தி க்ஷேத்திரமான காசி நகரை நீக்கிச்சென்றனர்
பக்தி நிறைந்த பல சிஷ்யரும் பிரிய மனம் நொந்தனர்

5. எல்லை இல்லா சிஷ்யர்க்குபதேசம் செய்து மகிழ்ந்தனர்
அல்லல் நீக்கி ஆத்மஞான அருள் மழையை
பொழிந்தனர்

———o———

## சங்கர பகவத்பாதர்
## பதரிகாச்ரம் செல்லுதல்.

### 118. விருத்தம்

அத்துவைத நூலுணர்ந்தோர்க்கரசனும் பகவத் பாதர்
இத்தரை தன்னில் அப்போ எழுந்தனர் என்று இந்து
அஸ்தமன கிரியை நன்றாய் அழகுறச் செய்து நின்றார்
திக்குக்களென்னும் மாதர் திகழும் சாமரங்கள் வீச

### 119. விருத்தம்

திக்கதாம் வடதிசையை திகழவே காணவென்று
பக்கத்தில் உள்ளதான பல பல மூர்த்தி தீர்த்தம்
மிக்கவே ஸ்நானம் செய்து முறைப்படி பூஜைசெய்து
பக்குவ மாக அப்போ பதரிசென்றிடவே நினைந்தார்

### 120. விருத்தம்

சில இடம் மூடருள்ள திண்மை போல் வெப்பமாகும்
சில இடம் சித்தம் மிக்க சிறக்கும் ஞானிகள் போலாகும்
சில இடம் கோணலாயும் சில இடம் நேர்மையாயும்
சில இடம் கடுமையாயும் சில இடம் நளினமாயும்

## 89. பாட்டு

சும்மா இருப்பதன்றே ஸுகம் — என்ற மெட்டு.

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : ஸ்ரீ

சங்கரரும் வழி நடந்தார் — சந்தோஷமாக
சங்கரரும் வழி நடந்தார்
பங்கஜ பாதம் நோக பதிரிகா சிரமம் தன்னை
மங்கள மாகவே மாதவத்தோன் காண (சங்கரரும்)

சரணம்

முத்தொழில் செய்வோனாய் இருந்தும் — முழுதும் உணரா
இத்தரையோரைபோல் நடித்தும் — இரவு பகல்
மெத்தக் களைத்தும் அவர் மேலும் மிக நடந்தும்
உத்தமமாம் கனி புஜித்தும் உகந்து மிக
பக்தி பரவசத்தால் பரந்தாமனை நினைந்தும்
நித்திரை செய்தும் அவர் நேர்மையாக விழித்தும் (சங்கர)

## 121. விருத்தம்

பலதூரம் நடக்க நன்றாய் பதரிகாசிரமத்தைக் கண்டார்
நிலவிடும் நீர்ப்பெருக்கின் நேர்மையும் அங்கு கண்டார்
திலகம் போல் விளங்கும் வியாசர் திகழும் ஆசிரமமும் கண்டார்
சில சில இடங்களெல்லாம் சிறந்திடும் குகையும் கண்டார்

## 90. பாட்டு

பாவனதீபரவெளியில் — என்ற 'கோழி' மெட்டு.

தாளம் : ஆதி] கண்ணிகள் [ராகம் : பூரிகல்யாணி

1. சங்கரர் கண்ட பதரிவனம்
சங்கடம் தீர்க்கும் பதரிவனம்
துங்க ஞானம் திகழ் பதரிவனம்
எங்கெங்கும் புகழும் பதரிவனம்

2. ஆறு விகாரம் மாற்றும் பதரிவனம்
ஆறு வைரியும் அற்ற பதரிவனம்
சீரும் சிறப்பும் தரும் பதரிவனம்
பேரும் புகழும் பெற்ற பதரிவனம்

3. தத்துவம் தொண்ணூற்றாறு கடந்த
தத்துவ ஞானிகள் வாழும் அந்த
உத்தம பதரிகாசிரம் தன்னில்
சித்தம் மகிழ்ந்து சங்கரர் இருந்தார்

4. பிரம்ம நிஷ்டர்களுடனே கூடி
நிர்மல உபநிஷத் அர்த்தம் தேடி
கர்ம மலங்கள் கழல வென்றே
தர்மாத்மாவும் பாஷியம் செய்யலுற்றார்

5. மங்களம் பொங்கும் பாஷியம் இதுவே
மதுர ரஸம் பொழிகின்ற பாஷியம் இதுவே
திங்களென திகழும் பாஷியம் இதுவே
திக்கெட்டும் திகழ்ந்திடும் பாஷியம் இதுவே

6. அத்துவைத பாஷியம் எழுதும் பொழுது
ஆனது வயது பன்னிரண்டு அப்போது
அத்தனும் பன்னிரண்டு பாஷியம் எழுதி
அநேக மதங்களையும் ஜயித்து நின்றார்

7. கையில் கனிபோலே காட்டும் பாஷியம்
நையவே தொய்திகளை ஓட்டும் பாஷியம்
உய்ய அத்துவைத அமுதம் ஊட்டும் பாஷியம்
உலகினில் யாரும் பாராட்டும் பாஷியம்

8. கணக்கற்ற பாஷியம் சஙகரர் இயற்றி
குணங்குறி கடந்த நிலையை சாற்றி
வணங்கவே யாரும் அவரைப் போற்றி
இணங்க மதவாதிகள் குணம் மாற்றி

9. ஆசாரியர் என்னும் அர்க்கன் உதித்திடவே
அழகு பாஷிய கிரணம் வீசிடவே
பேசாமல் மதவாதி யென்னும் மிருகங்கள்
போனது இடந்தெரியாமலதுவே

10. அநேக சிஷ்யர்களுக்கு பாஷியம் உரைத்தார்
அதிலும் மிக ஸனந்தனர் கற்றார்
மனதினில் அறிந்துமே மயக்கமற்றார்
மறை பொருள் எல்லாம் மகிழ்ந்து உரைத்தார்

11. திருவடி கமலமே தொண்டு செய்து
திகழும் ஸனந்தனர் தனைப் பார்த்து
குருமணியப்போ அவரைப் பார்த்து
கூறி விட்டார் தத்துவம் யாவும் விரித்து

## 122. விருத்தம்

மற்றவரிவரைக்கண்டு மனமிக பொறுமை கொண்டு
அற்றமில் அன்பு கொண்டார் ஆசானும் இவன்மேல் என்று
குற்றமே நிறைந்ததான குணங்களால் அவர் இருக்க
முற்றிலும் உணர்ந்துகொண்டார் முக்காலமும்
அறிந்த மூர்த்தி

## 91. பாட்டு

ஸ்ரீ குருபரனே — என்ற மெட்டு.

தாளம்: ஆதி ] பல்லவி [ ராகம்: உசேனி

மாசடைந்த மற்ற சிஷ்யர்கள் மனம் தன்னை
மகத்குரு அறிந்து கொண்டார் — மனமதில்
ஜெகத்குரு தெரிந்து கொண்டார்

அனுபல்லவி

கேசவனும் ஸனந்தனர் அக்கரை தனில் நன்றாய்
நேசமாய் நிற்பதை கண்டு ஆசான் உரைப்பார் அன்று

சரணம்

1. ஸனந்தனனே நீயும் சடுதியில் இக்கரைக்கு
தாண்டி வருவாய் என்றார் — ஸத்குரு
ஜனன கடல் தன்னை தாண்டியே வைக்கும் குரு
சரணமே கதியென ஸனந்தனர் இறங்கினர்

2. சங்கரர் மொழி கேட்டு சங்கையின்றியே அவர்
கங்கைதன்னில் இறங்கினர் — ஸந்தோஷமாய்
பங்கஜமலர் நன்றாய் பாதம் வைக்க ஒன்றாய்
பாங்காய் எழுந்ததுவே பார்த்தவர் பிரமிக்கவே

3. பக்தி நிறைந்த அந்த பரம சிஷ்யன் தன்னை
பாங்காய் அணைத்துக் கொண்டார் பரிவுடன்
பத்ம மலர் தன்னில் பாதம் வைத்து வந்ததால்
பத்ம பாதர் என்று பரமனும் நாமம் தந்தார்

## 123. விருத்தம்

தத்துவ ஞானம் தன்னை சகலருக்கும் உபதேசித்து
உத்தம சிஷ்யர் சூழ உகந்து சங்கரர் இருக்க
மெத்தவும் கெர்வம் மிக்க மேன்மையாம் ஞானிதன் பால்
பத்தியே துன்பம் செய்யும் பாசுபத மதஸ்தர் வந்தார்

## 124. விருத்தம்

விக்ஞான விருக்ஷத்திற்கு விளங்கவே வன்னியாலா
அக்ஞானம் கொண்டு மிக்க அறிவிழந்து அகமே
கொள்வார்
எக்ஞாற்றும் சென்று தங்கள் மதங்களை சாற்றுவார்கள்
மெய்ஞானவள்ளல்வாழும் மேன்மையாம் சபையில்வந்தார்.

## 92. பாட்டு

" ஸச்சிதானந்த ரூபம் " — என்ற மெட்டு.

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : சங்கராபரணம்

1. மகத்தத்துவம் முதலியது காரியம் ஆகும்
ஜகத்திற்கு பிரகிருதியே காரணமாகும்

2. சமாதி யோகம் முதல் சர்வ கர்மமும்
சமான மற்ற முக்தி சாதனமாகும்

3. குடத்துக்குக் காரணம் பிருதுவியாகும்
ஜகத்திற்குக் காரணம் பிரகிருதியாகும்

4. குயவனைப் போல் நிமித்த காரணமாக
சுயமாம் பரசிவமே காரணமாகும்

5. சகல சுருதிகளும் சதா சிவனையே
சகல காரணமாகும் என்றுரைக்கும்

6. சங்கரரும் கேட்டு மிக சங்கை தீரவே
மங்களமாம் மறை மொழி எடுத்துரைக்கவே

7. யாதொன்றைக் கேட்டால் சகலமும் ஆகுமோ
யாதொன்றை அறிந்தால் அறிந்த தாமோ

8. யாதொன்றை சிந்தித்தால் சிந்தித்த தாமோ
யாதொன்று உளதோ அதுவே காரணமாகும்

9. யாதொன்றை உணர்ந்தால் உணர்ந்ததாமோ
அதுவே பிரம்மமென்று சுருதி நிச்சயமாமோ

10. மண்ணை யன்றி மண்ணுமது கடமது ஒன்று உண்டோ
திண்ணமாய் நாவால் உரை நாமம் தான் உண்டோ

11. தானேசர்வம் ஆவோமென்று தன்னில் எண்ணவே
தானே சகல சராசரம் ஆகவே

12. பிரம்மமே உபாதான காரணம் என்று
நிர்மலமாம் சுருதி எல்லாம் அறைபுதேதின்று
13. அநேக வித யுக்தி தன்னை அவருக்குரைத்து
அநேக வேதமுள்ள பாசுபதரை மறுத்தார்
14. பசுக்கள் பதியை அடைந்தார் முக்தி என்கிறீர்
பாவனும் அதீத முக்தி ஆகுமோ சொல்வீர்
15. பரத்தில் கலப்பதே முக்தியாம் அல்லால்
கால பரிச்சேத வஸ்து முக்தி நல்குமா
16. இன்னும் அநேக வித யுக்திகளினால்
அன்புடன் அவர்கள் மதம் தன்னை விடுத்தார்
17. சங்கரர் வசனமென்னும் வஜ்ராயுதத்தால்
சங்கை கெட பாசுபதர் தளர்ந்து விட்டார்
18. பக்ஷிராஜனைக் கண்ட பன்னகம் போலே
அரக்ஷணமே அபயம் நீர் என்று பணிந்தார்

## 125. விருத்தம்

சுருதிகளனேகத்தாலும் சூக்ஷ்மமாம் யுக்தியாலும்
உறுதியாய் அவர்கள் உள்ளம் உணர்ந்திடும்படி
இருதய கமலத்திற்கு இரவிபோல் இலங்கும் ஆசான்
பெருகியே கீர்த்தி மிக்க பெருமையாய் வாழ்ந்து வந்தார்

## 126. விருத்தம்

அத்து வைதாரண்யம் தன்னில் ஆசாரியன் என்னும் சிம்மம்
யுக்தியாம் நகங்களாலும் உண்மையாம் பற்களாலும்
மத்தமாம் மதகரி போல் மதங்கொண்ட மதஸ்தர்களுக்கு
மெத்தவும் பயத்தை செய்து மேன்மையாக சுவலித்து
நின்றார்.

## 93. பாட்டு

"அன்னே பின்னே" — என்ற மெட்டு

கண்ணிகள்

1. துறவிகளுக்கு இறைவனாய் துலங்கும் சங்கரர் கீர்த்தி
பரவியே பிரகாசிக்க பார் முழுவதிலும்
திரமுடன் அங்குள்ள ஜனங்கள் எல்லாம் அறிந்து
பரம பிரேமையுடன் புகழலுற்றார்

2. பாசு பதர் முதலான பல பல மதஸ்தரும்
பார்த்து சங்கரரை மெத்த பிரமை யடைந்தார்
மாசு மறு அற்றதான வாக்கியங்களால் சங்கரர்
மழை யெனவே அப்போ பொழிந்து விட்டார்

3. வேதாந்த சாரீரக பிரம்ம சூத்திரத்திற்கு
விளங்கவே பாஷியம் எழுதுவாயென்று
போதாந்தமான பரமசிவன் புகன்றிடவே
பூரித்து சங்கரரும் புகழ்ந்துரைத்தார்

4. சுருதியென்னும் வயோதிக பசுவானது அக்ஞான
சேற்றில் அமிழ்ந்து மிகத்தத்தளித்தது
கருத்தில் அதை அறிந்து கருணையால் வியாசரும்
கரையில் எடுத்து விட்டார் கவலையுடன்

5. துங்க ஞானமான பாஷ்யா மிர்தத்தால் பசுவை
சங்கரரும் சந்தோஷமாய் அலம்பிவிட்டார்
மங்களம் பொங்கவே சுருதி மானிலத்தோர் மகிழ
எங்கெங்கிலும் ஒளி எழுந்ததுவே

6. ஆத்மா என்னும் பசுவை அதம் செய்ய வேண்டும்
தார்த்தநாம் பௌத்த மதஸ்தரும் வந்தார் [என்று
ஆத்மா தேகத்திற்கு விலக்ஷணம் ஆகுமென்று
சாற்றியே காணாத மதஸ்தர் தவிர்த்தார்

7. பட்டபாதர் மதத்தினல் பாதையொன்று கிடைக்கவே
திட்டமுடன் பசுவும் நடக்கலாயிற்று
சட்டமதாய் சாங்கியரும் தாமரை இலைத்தண்ணீர் [போல்
தத்தளிக்கும் பசுதன்னைக் காப்பாற்றினர்

8. பதஞ்சலி பகவானும் பிராணயாமங்களினல்
இதம் செய்து ஆத்மாவை ரக்ஷித்தார்கள்
இதம் அகம் என்பதற்று இலங்கும் பிரம்மம் ஒன்றென்று
பத பதார்த்த சோதனையால் பகுந்துரைத்தார்

9. அநேக மொழிகளாலும் அநேக விதங்களாலும்
அநேகர் உள்ளத்திற்கும் ஆனந்தம் அளித்தார்
அநேக மதஸ்தருக்கும் அழகாய் பிரமாணங்களால்
அநேக யுக்திகளாலும் ஜயித்து நின்ருர்

## 127. விருத்தம்.

இவர் புகழ் கேட்டு கங்கா தீரத்தில் உள்ளோர் எல்லாம்
அவருரை செய்கின்ற அமுதமாம் மொழியைக் கேட்க
புவியினில் இவரை யாவர் புகழ்ந்திட வல்லார் என்றே
அவரடி பணிந்து போற்றி அருள் புரிந்திடுவீர் என்ருர்

## 128. விருத்தம்

சங்கரர் என்னும் க்ஷீரஸாகரம் தன்னில் பாஷிய
திங்களும் தோன்ற நன்ருய் தேவர்களுக்கு அமுதம் ஊட்ட
மங்கள வாக்கியம் என்னும் மகத்தான கிரணம் வீச
பங்கமாம் மதங்களென்னும் பறந்ததோர் இருளும் நீங்க

## 94 பாட்டு

" சொல்லப்படாத சுகத்தை " — என்ற மெட்டு.

தாளம் : த்ருச்ரலகு] பல்லவி [ராகம் : சௌராஷ்டிரம்

சங்கரரும் சங்கைதீர பாஷ்ய அமுதம்
சகலருக்கும் அள்ளியே கொடுத்தார்

அநுபல்லவி

அங்கம் பூரிக்க அவர்கள் புஜித்து
அநுதி வாசனைகள் விடுத்தார் அப்போ
எங்கும் தன் மயமாய் செழித்தார்
எல்லை யற்ற சுக வாருதி யாகியே
ஏற்றி சங்கரரை போற்றியே புகழ்ந்தார் — சங்கர

சரணம்

1. பகவத் பாதர் செய்த பாஷ்ய பாஸ்கரனல்
பக்தர் மனம் மலர்ந்தது வே
அகலாத அக்ஞான ஆவரண இருள்
அகன்று அருள் பெற்றதுவே
அகமமதை கொண்ட அநேக மதஸ்தரும்
அழும் படிக்கு அடித்தோட்டி விட்டதுவே (சங்க)

2. மங்கள கங்கையே மாதவன் பாத
கமலத்திலிருந்தே எழுந்தாள்
துங்கமாம் பாஷ்யமோ சங்கரர் முக
பங்கஜத்தில் நின்றே பொழிந்தாள்
கங்கையோ சார்ந்தோரின் தாப பாபம் தீர்க்கும்
பாஷ்ய கங்கையோ பவ கடலைத் தாண்டிவைக்கும்
(சங்கர)

3. கவி சக்கரவர்த்தியாம் யதி சங்கரர் பாஷியத்தை
புவியினில் யாவரும் அணிந்தார்
தவ வடிவாகவே தாரணி வந்தோரின்
தாளடி தன்னில் பணிந்தார்
எவரும் இவருக்கு இணை இல்லை யென்றே
எல்லா மதஸ்தரை ஏகிடவே செய்தார் (சங்கர)

4. சேது முதல் ஹிமோத் பர்வதம் வரையிலும்
சிறந்தது அத்துவைத கொடிதான்
சாதுக்கள் எல்லாம் சமரஸானந்தமாய்
சாக்ஷாத்கார அனுபவமாய்
ஏதும் குறை நமக்கு இல்லையென்று எல்லோரும்
ஏற்றி புகழ்ந்துமே போற்றி பணிந்திட்டார்.

ஆத்ம வித்தையை நிலை நாட்டும்
ஆருவது அத்தியாயம் முற்றிற்று.

விருத்தம்—24] [பாட்டு—15.

---

# ஏழாவது அத்தியாயம்

## 129. விருத்தம்

காசிமா நகரந்தன்னில் காருண்யமூர்த்திதானும்
கூசிடா எவரும் காண கோமள கங்கை ஓரம்
வாச மாசமாய்க்கொண்டு வள்ளல் சூத்திர பாஷியம்
நேசமாய் தாஸர்க் கெல்லாம் நிகழ்த்தினர் நிர்ணயத்தை

## 130. விருத்தம்

கற்ற மாணுக்க ரோடும் களிப்புடன் எழுந்து செல்ல
உற்றனர் ஒருவர் அங்கு ஒப்பிலா வயது மிக்கோர்
பற்றியே நீவிர் இங்கு படித்தது யாதோ என்ருர்
பெற்ற பேர் யாதோ என்ன பகர்ந்திட வேண்டும் என்ருர்

## 95. பாட்டு

" குருநாதன் சிவனே " — என்ற மெட்டு.

தாளம் : திருபுடை] பல்லவி [ராகம் : மாயாமாளவகௌளை

எங்கள் ஆசாரியர் இவரே எங்கும்
உபநிஷத் பாஷியம் உரை செய்கின்றனரே

அனுபல்லவி

எங்கும் பிரகாசிக்க இரவிபோல் ஒளி மிக்க
எல்லையில்லா கீர்த்தி யுடையவர் ஆவாரே

சரணம்

பேதவாதம் ஒழித்து போகம் திகழ்பிரம்ம
சூத்திர பாஷியத்தை தொடுத்தார் சுதந்திரராய்
ஆதர வாகவே அடைந்தோர்க்கு உபதேசித்து
அத்துவைத மதை ஸ்தாபித்த ஆசாரியர் இவர் என்ருர்

## 131. விருத்தம்

செம்மையாய் பாஷியம் செய்த ஜகத்குரு நீர் என்றும்
நிம்மஹா சிஷ்யரெல்லாம் உரைக்கின்ருர் உணர்ச்சி மிக்க
அம்மஹா பெருமை கேட்டு ஆனந்தம் கொண்டோம் நிற்க
நம்மிடம் பாஷியமொன்று உளது இதன் பொருள்
உரைப்பாய்

## 96 பாட்டு

" உபய காவேரி வாசா " — என்ற மெட்டு.

தாளம்-ஆதி] பல்லவி [ராகம்-சுத்ததன்யாசி

ஷந்த வியாசரை வணங்கி சங்கரர் மிக்க
சந்தோஷத்தாலிணங்கி

அனுபல்லவி

1. இந்த பாஷியம் உரைத்தோம் என்ற எண்ணம் ஒன்றில்லை
சிந்தை மகிழ்ந்து அருள்வீர் வந்தனம் செய்தேன்

2. எந்தப் பொருள் கேட்கிலும் இசைந்து பதில் தருவோம்
எந்தை யே எடுத்துரைப்பீர் இன்பமுடனே

3. அந்த மொழியைக் கேட்டு வந்த பெரியோர் சொல்வார்
அந்தம் மிகுந்ததான அத்தியாயம் மூன்றின்
அர்த்தம் எடுத்துரைப்பாய்

4. இறக்கும் பொழுது ஜீவன் இலங்கும் சூக்ஷ்ம வடிவமாய்
சிறக்கவே வந்தடையும் பூதங்களிடம்

5. பிறக்கும் பின்னையோரிடம் இந்த சூக்ஷ்மார்த்தத்தை
இலங்கும் தாண்டி சுருதியில் சிந்தைதெளிய அறிந்தேன்

6. சிறப்புடனே கௌதமர் சாங்கியர்கள் கேள்வியால்
கவனமுடன் அறிந்தேன் கிலேசங்கள் தீர

7. சங்கரர் மொழி கேட்டு வந்த பெரியோர் அப்போ
சங்கைகள் மிகவும் செய்தார் சபைதன்னிலே

8. சற்றும் சளையாமலே சாற்றிய சங்கைக்கெல்லாம்
முற்றிலும் பதில் உரைத்தார் முழுதுணர்ந்து

9. பிரஹஸ்பதியும் பணி ராஜனும் சேர்ந்தது போல்
பிரமாதமாய் சங்கை செய்தார் பார்த்தோர் பிரமிக்க
10. துறந்தோர்களுக்கு இறைவனும் மறைகளுக்கு
இறைவனும்
சிறக்கவே வாதம் செய்தார் தினங்கள் எட்டு

11. அருகில் இருந்த பத்மபாதர் இதை அறிந்தார்
மருகியே மனம் மிகவும் பணிந்துரைப்பார் பெரி
யோர்கள் தனை நோக்கி
12. வேதம் உணர்ந்ததே வியாசர் நீர் ஆவீர்
போதம் திகழ்ந்த சங்கரர் புராரி யாவார்
13. வியாசமுனிவரே வணங்கும் நாரணன் ஆகும்
தியாகியாம் சங்கரரோ சம்பு ஆவார்
14. இவ்விதமாய் நீங்கள் இடைவிடாது சங்கித்தால்
எவ்விதம் நாங்கள் அறிவோம் என்று பணிந்தார்

## 132. விருத்தம்

பாங்குடன் பத்ம பாதர் பகர்ந்ததை அறிந்துகொண்டு
ஓங்கவே சூத்திரத்தை உரைத்த வியாசரை நாம்கண்டு
தீங்கிலா திருவடிக்கு தொண்டு செய்திடுவோம் என்று
அங்கு சங்கரரும் அப்போ அன்புடன் ஸ்துதிக்கின்றரே

## 133. விருத்தம்

மின்னலை ஒத்ததான மிளிர்ஜடை ஒளியதாகும்
மன்னிய மழை முகில் போல் மேனியின் நிறமதாகும்
உன்னித மாய் விளங்கும் ஒளிர் யக்ஞோபவீதமாகும்
இன்னலை அகற்றுகின்ற இலங்கும் மான் தோலும் ஆகும்

## 97. பாட்டு

"தரிசனம் செய்திடுவோம்" — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : கரகரபிரிய

தெரிசனம் தாரும் ஐயா வியாசமுனியே
உரியவன் என்று என்னை எண்ணி மனம் உகந்து

அனுபல்லவி

அரிய நின் மொழி கேட்டு அங்கம் மிக குளிர்ந்தேன்
ஆனாலும் நிஜரூபம் காண ஆவல் மிகுந்தேன்.

சரணம்

சூத்திரத்தின் பொருளும் பாஷியத்தின் பொருளும்
தோற்றவே தத்துவம் ஜொலித்திடுமே ஆகில்
பாத்திரன் ஆக்கி எந்தன் பிழைகளெல்லாம் தவிர்த்து
பாங்குடனே வந்து பார்த்திடுவீர் சிறந்து.

## 134. விருத்தம்

அத்துவைதம் என்னும் நல்ல அங்குசத்தாலே நன்றாய்
பித்தனாய் பிதற்று கின்ற பிறமதவாதியென்னும்
மத்தமாம் மதகரியின் மஸ்தகம் பிளப்பதற்கு
உத்தம சூத்திரத்தால் உரைத்திடும் யார்க்கும் உண்மை

## 135. விருத்தம்

சந்திரகுலம் தழைக்க தயை செய்த வியாசர் அப்போ
சுந்திர மாணாக்கர்கள் தோற்றவே காட்சிதந்தார்
அந்தமில் கருணை பொங்க அருள் ஒளி எங்கும் ஓங்க
சிந்தை பூரித்து அப்போ சங்கரர் வணங்கி நின்றார்.

## 98. பாட்டு

" அம்பா உனை நம்பினேன் " — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: பரசு

கண்டார் வியாசமுனியை கருத்துகந்து
கண்ணபிரானும் முன்னே கண்டார்வியாஸமுனியை

அனுபல்லவி

1. அண்ட சராசரமும் கொண்டாடியே பணியும்
தொண்டர் துயரகற்றும் தூய சொரூபமாயும்
2. தங்கள் வரவாலே என் அங்கம் பூரித்து நின்றேன்
மங்கள மாய் நிறைந்தேன் துங்கஞான மடைந்தேன்
3. சத்திய வதியாள் பெற்ற புத்திரராம் வியாசரின்
சித்தடியில் பணிந்து சிந்தை மிக உகந்து
4. தீனர்களைக் காக்கவே தீக்ஷை வகித்துக் கொண்டீர்
ஞான ஒளி திகழ நாடி அருள் புரிந்தீர்
5. பத்து எட்டு புராணத்தால் பக்தர்களுக்குபோதித்தீர்
உத்தம சூத்திரத்தை உத்தமர்களுக்கு உரைத்தீர்
6. முக்காலமும் உணர்ந்த மூல புருஷர் நீர்
எக்காலமும் உணர்ந்த ஏக வஸ்துவும் நீரே
7. க்ஷீர ஸாகரமென திகழும் உம்மிடம் தன்னில்
பாரதம் என்னும் பூரண சந்திரனை தரித்தீர்
8. இலங்கும் முனிவர்க்கெல்லாம் திலகமென விளங்கும்
அலகிலா ஆனந்தம் மிகும் அத்துவைத விருக்ஷமாகும்
9. சச்சிதானந்த பரபிரம்ம ஸ்வரூபம் நீரே
அச்சம் அகற்றி ஆளும் ஆதி நாரணன் நீரே

## 136. விருத்தம்

துதிபல செய்து தூய சங்கர பகவத் பாதர்
விதியுடன் வியாசர் பாதம் விளங்கவே பூஜைசெய்ய

தகி இது எனவே தக்க ஆசனம்தனை அளித்து
பதியினில் அமரச் செய்து பாத்திய அர்க்கியம் கொடுத்தார்

## 99. பாட்டு.

"யாருக்குத்தான் தெரியும் அவர் மகிமை" — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: ஆரபி

பூஜை செய்தார் சங்கரர் பூரணானந்தமாய்
போற்றி பணிந் தெழுந்து — பூஜை

அநுபல்லவி

வாசாம கோசர மகிமா விலாசரை
மறைகளின் பொருளெல்லாம் வழங்கிய வியாசரை—பூஜை

சரணம்

சங்கரரைக் கண்டு சந்தோஷம் கொண்டு வியாசர்
சங்கையறவே அப்போ சாற்றிடுவார் பிரகாசர்
எங்கள் நிலை தன்னை எளிதாய் அடைந்து விட்டாய்
துங்க சுகமுனிபோல் தோற்றம் அளித்து விட்டாய்
(பல்லவிபோல்)

வியாச முனியும் மகிழ்ந்தார்
சங்கரர் செய்த பாஷியத்தைப் புகழ்ந்தார்

சரணம்

1. மதி அணி சம்புவின் சபையிலிருந்தோர் சித்தர்
துதி செய்தார் நீ செய்த தூய பாஷியத்தை மெத்த
தகி இதுவே உன்னைக்காண ஆவல் சித்தம்
அதில் மிக அடைந்து அணுகினேன் இங்கு உத்தம்
(வியாச)

2. இந்தவிதமாய் வியாசர் இயம்பிய மொழி கேட்டு
சிந்தை மிக பூரித்து சங்கரர் பிரமை விட்டு
சுந்திர சுகமுனி போற்றும் கடவுக் கொரு
இந்து வாய்த் திகழுவீர் என்றவர் பாதம் தொட்டு
(பூஜை செய்தார் சங்கரர்)

3. குற்றங்களைப் பொறுத்து குணமணியாய் விளங்கும்
கற்ற பெரியோர்களும் கழல் பணிந்தே இலங்கும்
அற்றவோரும் சூத்திரத்தின் அர்த்தம் மிகவே
துலங்கும்
அரைமதியால் யானும் அரைந்தேன் பாஷியமாகும்
(பூஜை செய்தார் சங்கரர்)

4. இப்படி சங்கரர் இயம்ப வியாசரும் கேட்டு
அப்பவே பாஷியத்தை திருக்கரத்தினால் தொட்டு
ஒப்பு இதற்கு இல்லையே உரைக்கவே மனம்விட்டு
இப்புவி யெங்கிலும் ஓங்கும் ஒளிவிட்டு
வியாச முனியும் உரைத்தார்

5. பூர்வ பக்ஷமும் சித்தாந்தமும் நன்றாய்
ஆர்வத்துடன் யுக்தி யனுபவமும் ஒன்றாய்
பார்ப்பவர் மனதினைப் பரவசமாக்கி நன்றாய்
தீர்த்திடும் சந்தேக விபரீதமே இன்றாய்
வியாச முனியும் உரைத்தார்

6. பேத வாதங்கள் எல்லாம் பேதித்துமே நீரும்
போதம் திகழும் அனுபவம் உரைத்து எந்நேரம்
பூதலத்தோர்கள் புனித மானார் இந்நேரம்
தீதது அகன்றோய் நாமும் செல்கின்றோம் இந்நேரம்
வியாச முனியும் உரைத்தார்

## 137. விருத்தம்

இவ்விதமாய் உரை செய்த வியாசர்தன்னை சங்கரரும்
நோக்கி எவ்வாறும் உலகர் உய்ய உரைத்தோம் உம்
கருணையால்
நாம் வெவ்வேறு மதஸ்தர் எல்லாம் வீழ்த்தினோம்
இனி இங்கே நாம் எவ்வாறிருத்தல் வேண்டும்
இயம்புவீர் என்றாரே

## 138. விருத்தம்

புண்ணிய மூர்த்தே உம்மால் புனிதமாம் வாழ்வு பெற்றேன்
எண்ணிய கர்மமெல்லாம் எளிதினில் முடித்தேன் அந்தோ
மண்ணினில் உடலை யானும் மாய்த்திட எண்ணம்
கொண்டேன்
திண்ணமாய் அருளுவீர் என்று தேசிகர் பகர்ந்தினரே

## 139. விருத்தம்

இம்மொழி கேட்டு வியாசர் எடுத்துரை செய்குவார்நன்றாய்
செம்மையோ நீவீர் இப்போ செப்பிய மொழி ஈதென்றால்
எம்மதஸ்தரையும் நீர் ஜயித்திட வில்லை நன்றாய்
நிம்மதியாக வென்று நிறைமதியாக வாழ்வீர்

## 140. விருத்தம்

உன்னிதமாக நீரும் உகந்துமே செய்த பாஷியம்
தன்மையாய் உம்மையல்லால் சாற்றிட யாரே வல்லார்
அன்னியில் நீவீர் சென்றால் அருமையாம் பாஷியமெல்லாம்
அன்னையை இழந்த பாலன் ஆகும் அது அறிவீர் கண்டீர்

## 141. விருத்தம்

தோடங்கள் அற்ற தூய பாஷியம் கண்டேன் உள்ளம்
ஈடிலா ஆனந்தம் கொண்டேன் இலங்கவே நானுமிப்போ
நாடிய வயதோ எட்டாம் நற்றவத்தாலே எட்டாம்
கூடவே வயது ஈரெட்டு அளித்தோம் கொள்வீரே என்றார்

## 142. விருத்தம்

இரவி மதிவான் மண்ணும் இலங்கும் நாளும்
பரவி நின் பாஷியமும் பாரில் ஓங்கும்
துறவிகளுக்கு அணிகலனாய் துரியானந்தம் கொண்டு
நிறை மதியாக நித்திய மங்களமாய் வாழ்வீர்

## 100. பாட்டு

" பார்க்க பார்க்க விநோதமே " — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : கன்னட

மங்கள மொழி கேட்கவே சங்கரர் மகிழ்ந்து

அனுபல்லவி

உங்கள் அருள் ஒளியால் உலகமெங்கிலும் பாஷியம்
சங்கையரவே பொங்கிடும் தழைத்தோங்கிடும்

சரணம்

1. நேசமுடனே வியாசமுனிவர் அடி வணங்க
ஆசி கூறியே மறைந்தார் அப்பொழுது
2. வர மளித்தே முனி மறைந்திடவே மிக
வரம்பிலா துயர முற்றார் மனதினில்
3. தத்துவ ஞானியாம் உத்தமனைப் பிரிந்து
அத்தனும் சித்தம் தளர்ந்தார் அகமதினில்
4. உள்ளமதில் வியாசரின் உபயத் திருவடியை
வள்ளலும் கண்டே மகிழ்ந்தார் வகையுடனே
5. திட்டமுடனே வியாசர் இட்ட கட்டளை தன்னை
இஷ்டமுடனே செய்ய வே எண்ணித் துணிந்தார்
6. அஷ்டதிக்கிலும் சென்று துஷ்ட மதத்தை வென்று
சிஷ்டர்களைக் காக்க சிறப்புடனே



## சங்கர பகவத் பாதர் பிரயாகைக்கு ஏகுதல்.

—:o:—

## 143. விருத்தம்

அமரராம் முனிவர் எல்லாம் ஆதிசங்கரரும் அப்போ
குமரிலா பட்டர்தன்னை குறுகியே காணவென்று

தமது பாஷியமதற்குத் தகுந்ததோர் அர்த்த மாகும்
அமுதமாம் வார்த்திகத்தை அரைந்திட வேண்டும் என்றும்

## 101. பாட்டு

"பிரித்துப் பாரடா" — என்ற மெட்டு

தாளம் : ஏகம்] பல்லவி [ராகம் : உசேனி

புறப்பட்டார் ஐயன் புனிதமான தென் திசை நோக்கி

அனுபல்லவி

மறை சொல்லும் கர்ம காண்டத்தின் அர்த்தத்தை
உரை செய்த பட்ட பாதரைக் காண ,

சரணம்

1. கங்கை யமுனை சரஸ்வதியும் சேர்ந்து
மங்களமான பிரயாகை அதை ஓர்ந்து
சங்கரரும் சிஷ்ய வர்க்கங்கள் சூழ்ந்து
அங்கு வந்தார் அதை விரைவில் உகந்து (புறப்)

2. விதியுடன் தினம் ஸ்நானம் செய்பவர்க்கு
கதியாகும் மோக்ஷஸ்தலமிதுவேயாகும்
துதி செய்யும் சொர்க்க போகமும் அளிக்கும்
நதிகள் மூன்றும் கூடும் மடமாகும் (புறப்)

3. த்ரிகுணத்தின் வடிவாக விளங்கிடும்
த்ரிவேணி ஸங்கமமாகத் திகழ்ந்திடும்
த்ரிமூர்த்திகளும் தினமும் புகழ்ந்திடும்
த்ரிபுவனவாளனும் நீர் அன்றோ (புறப்)

4. முப்புரம் எரித்தோர் முழு ஜடை தன்னிலே
தப்பறவே தங்கி தாரணி முன்னிலே
ஒப்புமையற்ற ஞானிகளுக்கு அன்பாலே
இப்புவியில் வந்தாய் எங்கள் மேல் அன்பாலே

5. பக்தியாய் நித்தியம் ஸ்நானம் செய்பவருக்கு
சித்த சுத்தியுடன் முக்தியும் அளிப்பாய்
இத்தரையில் ஜென்மமில்லாமல் ஆக்குவாய்
நித்தியானந்த ஸுகம் தன்னை தேக்குவாய் (புறப்)

6. புகழ்ந்து சங்கரர் திரிவேணியை நன்றாய்
மகிழ்ந்து இறங்கி ஸ்நானம் செய்தார் ஒன்றாய்
அகத்தில் அன்னையை நினைந்துமே அவர்
சுகமுடனே ஸ்நானமும் செய்தார் (புறப்)

## 144. விருத்தம்

சித்தமே குளிர்ந்து கங்கா ஸ்நானமும் செய்து ஆசான்
நித்திய அனுஷ்டானங்கள் நேர்மையாய் நடத்தி மிக்க
உத்தமர் இருக்கும்போது உலகத்தோர் வதந்தி ஒன்று
மெத்தவும் கேட்டு ஐயன் மிக்கவே துயரம் கொண்டார்

## 102. பாட்டு

["கேளடி எந்தன் கிளி மொழியே"—என்ற மெட்டு
கும்மி

1. உலக வதந்தியைக் கேட்டதும் சங்கரர்
உள்ளம் உவந்து மிகவும் நொந்தார்
பலகலையும் உணர்ந்த பட்ட பாதரை
பார்க்கப் பரபரப்பாகச் சென்றார்

2. துஷ்ட மதத்தை துலைத்து விப்ரர்களுக்கு
கஷ்டம் தவிர்த்துக் கருணையுடன்
எட்டுதிக்கும் வேத மார்க்கத்தை ஸ்தாபித்தார்
பட்ட பாதர் தன்னைப் பார்த்து நின்றார்

3. பார்த்து பரிதாபம் கொண்டு கண்ணீர் மல்கி
எர்க்குமோ இப்படி செய்வதென்று

ஓர்க்கவொண்ணு துயர் கொண்டு மனதினில்
தீர்த்திடுவேன் நானிப்போது என்முர்

4. பிரபாகரர் முதல் பல சிஷ்யர் சூழவே
பட்ட பாதர் உமி காந்தல் தன்னில்
நிரம்பி உடல் முழுவதும் நெருப்பினுல்
நீராவி சூழ்ந்து நிறைந்தது அப்போ

5. பத்து திக்கும் பகைவர்களை வென்றுமே
எத்திக்கும் கீர்த்தி பரவச் செய்து
உத்தம வேத மார்க்கத்தை உரைத்தோர்க்கு
இத்தரையில் இவ்விதியோ என்முர்

6. பகவத் பாதர் தன்னைப் பார்த்து பட்டபாதர்
அகமதில் ஆனந்தம் கொண்டு மிக்க
உகந்து தன் சிஷ்யரால் ஒப்பு உவமையற்ற
ஜகத்குருவை பூஜை செய்து வைத்தார்

7. அன்புடன் செய்திட்ட பூஜையை சங்கரர்
இன்பமுடனே அவர் ஏற்று நின்முர்
பின்பு அவர் பிக்ஷையும் செய்துமே
தன்மையாம் பாஷ்யம் தனை காண்பித்தார்

## 145, விருத்தம்

பாஷியம் தன்னை வாங்கிப் பார்த்தப் பட்ட பாதர்
பூஷித்து புனிதர் எல்லாம் போற்றியே பூஜை செய்வார்
தூஷித்து தூர்த்தர் மிக்க துன்பமாய் மௌன மாவார்
ஈஷித்தும் இதற்கு எங்கும் இணைஇல்லை என்று உரைத்தார்

## 103. பாட்டு

"சங்கைதான் என்றுதான்" — என்ற மெட்டு

**கண்ணிகள்**

1. உத்தமமான உன் அற்புத பாஷியத்தை
மெத்தவும் கண்டு உகந்தேன்

சுத்தமாம் வார்த்திகம் செய்திட
மிகவும் உத்தமமானது இதுவே

2. இந்த நிலையில் இருப்பதால் வார்த்திகம்
இயற்றும் சக்தியும் அற்றேன்
முந்தியே உம்மை நான் கண்டிட ஆவலும்
முற்றுமே கொண்டு நின்றேன்

3. இத்தருணம் தன்னில் இங்கு நீர் ஏகிட
மெத்தவும் தன்னியன் ஆனேன்
இத்தரையில் உள்ளோர்
ஈடேறவந்த தோர்

4. அத்துவைத மூர்த்தியன்றோ
வைதீக நெறியை வையகத் தோர் உய்ய
வாஞ்சை யாக உரைத்தேன்
நையவே தார்க்கியர் செய்யும் யுக்திகளை

5. ஐயனே நானும் மறுத்தேன்
இந்த கர்மம் தன்னை இல்லாமல் செய்திட
இங்கு நான் சக்தி அற்றேன்
வந்த கர்மமதை வாஞ்சையாய்

6. வாங்கி புஜிப்பது என்று துணிந்தேன்
வேதமே பிரமாணம் என்று உலகெங்கும்
போதனை செய்து வந்தேன்
வேதனை தீர்க்க ஓர் ஈசனில்லை என்று

7. புத்த மதஸ்தர்கள் கொண்ட கொள்கைகள் தன்னை
மெத்தவும் மாற்ற வென்றே
உத்தம சிஷ்யன் போல் புத்தரை சேர்ந்துமே
அத்தனை வித்தை கற்றேன்

8. அத்தருணம் தன்னில் அங்குள்ள பௌத்தர்கள்
அத்தனை பேரும் சேர்ந்து

சுத்தமாய் வேதத்தை தூஷித்திட்டார் அப்போ
உற்றது கண்ணில் கண்ணீர்

9. கண்ணிலிருந்து விழுந்த நீரைக் கண்டு
கவலை மிகவும் கொண்டு
எண்ணினார் இவர் நம் இனத்தவன் இல்லையென்றுமே
எல்லோரும் ஐயம் கொண்டு

10. இப்படியாகவே இருக்கவே யாவரும்
தப்பித எண்ணம் கொண்டு
உப்பரிகையில் இருக்கும் என்னை அவர்
குப்புறத் தள்ளி நின்றார்

11. வேதம் பிரமாணமதாகுமேல் வேதனை
இன்றியே காக்கும் என்றே
சோதனை செய்து விழுந்ததால் தோன்றும் ஓர்
தோற்றம் மறைந்ததென்றே

12. காக்கும் வேதம் என்று கழன்றிடாததினால்
தாக்கியே கண்ணை ஒன்று
போக்கிடச் செய்தது புத்திக் குறைவினால்
ஏக்கம் மிகவும் கொண்டேன்

13. புத்தமதம் தன்னை புத்த குருவிடம்
கற்று ஜயித்ததாலே
குற்றமன்றோ குரு துரோகம் அன்றோ அது
உற்றேன் இத்தீக்ஷை இன்றே

14. பாவத்தைத் தீர்த்து பரிசுத்த மாகவே
ஆவலாய் கொண்டேன் விரதம்
தாகத்தைத் தீர்த்திடும் சத்குரோ நின் திரு
தாமரைப் பாதம் கொண்டேன்

15. விருத்தி யுரைச் செய்து விரைவுடன் பாஷ்யத்தை
உரைத்திட என்று நினைத்தேன்
கருத்தினில் கொண்ட என் எண்ணம் ஈடேருமல்
வியர்த்த மாய்ப் போன தின்றே

16. இவ்விதம் உரை செய்த பட்டபாதர் தன்னை
செவ் வையாய் நோக்கி உரைப்பார்
இவ்வுலகர் உய்ய காட்டிய நூல்வழி
எவ்விதம் குற்ற மாகும்

17. கர்ம காண்டமதை கழன்றிட வந்தநீர்
ஸ்கந்தன் என்றே அறிந்தேன்
தர்மதம் துலைத்த சுத்தனே உமக்கும்
சொல்ல ஓர் குற்றம் உண்டோ

18. கையில் இருக்கும் கமண்ட தீர்த்தத்தால்
கார்த்து விடுவேன் என்ருர்
ஐயங்கள் தீரவே அருமையாம் வார்த்திகம்
அறைகுவீர் என்று உரைத்தார்

19. சங்கைகள் தீரவே சங்கரர் சாற்றிய
மங்கள வாக்கியம் கேட்டு
அங்கம் குளிர்ந்தவர் ஆசாரியரைப் போற்றி
இங்கிதமாக உரைப்பார்

20. கொண்ட விருதம் தன்னைக் கொள்ளாமல் நான் விடில்
தொண்டர் மதித்திடுவாரோ
மண்டலத்தோர்க்கு இது மாசன்ருே ஐயனே
கண்டு நீர்க் கொள் வீர் இதனை

21. ஆக்கி அளிக்கும் ஆதி வஸ்து நீர் என
ஏக்கமறவே அறிந்தேன்

போக்கு வரவற்ற பூரண போதம் நீர்
ஆக்கு வீர் அன்பு மிகுந்தே

22. ஓர ஒண்ணாத ஓங்கார பொருள் தன்னை
சீராய் உபதேசிப்பீர்
தாரக மந்திரம் தன்னை ஜபித்து நான்
தன்னியனாய் சாந்தி பெறுவேன்

## பட்டபாதர் மண்டனரை ஜயிக்கும்படி உரைத்தல்.

### 146. விருத்தம்

திக்கெட்டும் கீர்த்தி மேவித் திகழும் மண்டனரைக் கண்டு
மிக்கவே வாதில் வென்று மேன்மையாய் வருவீராகில்
அக்கரையாக அன்னிய மதங்களும் ஜயித்தோர் ஆவீர்
தக்கதோர் சமயமிதே சடுதில் செல்லுவீர் என்றார்

### 147. விருத்தம்

கர்ம மார்க்கத்தை எங்கும் களிப்புற உரைத்து மிக்க
பிரம்மனால் விதித்த வேத வேள்விகள் செய்து ஓங்கும்
தர்ம மார்க்கம் தப்பாமல் சந்ததம் இல்லறத்தை
நிர்மலமாய் நடத்தும் இகபர ஜயஸ்வரூபனே

### 148. விருத்தம்

பிரவிருத்தி மார்க்கத்தை யாரும் பிரியமாய் செய்யவேண்டி
சிறப்புடன் உலகர்க்கெல்லாம் திறப்பட உரைத்தோனாகும்
திறமுடன் அங்கு சென்று சீர் பெறும் நிவிருத்தி மார்க்கம்
பரவிடச் செய்வதற்கு பாங்குடன் செல்வீர் என்றார்

## 104. பாட்டு

" ஸித்தாந்தமிதுவே " — என்ற மெட்டு.

தாளம்: ஆதி ] பல்லவி [ராகம்: பைரவி

மண்டனர் கிருஹம் செல்வீர் மனம் மகிழ்ந்து
மகிமையாய் வாதில் வெல்லுவீர் சிறப்பதாக

அனுபல்லவி

பண்டு தூர்வாஸரிடம் கொண்ட சாபத்தாலே
பாங்குடன் பாரில் பிறந்தாள் ஸரஸ்வதியும் (மண்ட)

சரணம்

1. தேவியுடனே அவர் திகழும் இல்லம் கார்ப்பார்
சிறக்க யாவரிலும் என் சிறந்த மாணுக்கனுவான்
மேவி நீர் அங்கு சென்று மேன்மையாய் வாதில் வென்று
விளங்கவே பாரதியை விமலனே சாக்ஷியாய்
கொண்டு விவாதம் செய்வீர் — ஆனந்தம்கொண்டு
(மண்ட)

2. வாதினில் வென்றவரை வசமாக்கியே கொள்வீர்
வார்த்திகம்செய்திட வாஞ்சையுடனே விள்வீர்
சோதித்துணர்ந்தவரை தொண்டனுக்கி மகிழ்வீர்
துறந்தோர்களுக்கிறைவே துரிய ஆசிரமம் ஈந்து
தூசகற்றியே ஆள்வீர் — துரிதமாகவே சென்று
(மண்டனர்)

3. அந்திம திசை தன்னில் வந்தீர் எந்தனைக் கார்க்க
உந்தனை யல்லால் கதியுண்டோ உலகில் சேர்க்க
சிந்தை குளிர உபதேசம் செய்வீர் கார்க்க
மந்திரந் தன்னையே மகத்குருவே உரைத்து
மனது சந்தோஷித்து — மறை பொருளை போதித்து
(மண்டனர்)

4. கருணைக்கடலே உம்மை கருத்தினில் தியானித்து
கவலைக் கடந்தோர் கைவல்லிய நிலையுற்று
இருளை யகற்றிடுவீர் இரவியே போலே சுற்றும்
இருந்திடுவேன் இனி இகபர சுகம் பெற்று
இரண்டறவே விளங்கும் — இலங்கும் பிரம்மத்தை
உற்று (மண்டனர்)

### 149. விருத்தம்

சங்கர உபதேசத்தால் தண்ணெனக் குளிர்ந்து உள்ளம்
சங்கைகள் யாவும் தீர்ந்து தத்துவப் பொருள் உணர்ந்து
துங்கமாம் நிலையதான சுத்தமாம் பதமே பெற்று
பங்கமில்லா பதவிதன்னை பட்டபாதரும் அடைந்தார்.

ஏழாவது அத்தியாயம் முற்றிற்று.

விருத்தம்—21] [பாட்டு—10

---

## எட்டாவது அத்தியாயம்.



## ஆசாரியர் மண்டன மிச்ரர் வாதம்



### 150. விருத்தம்

சங்கர பகவத் பாதர் சந்தோஷமாக அப்போ
மங்களம் நிறைந்ததான மாகிஷ்மதி பட்டினத்தை
பொங்கியேகாண ஆவல்கொண்டுமே ககனமார்க்கம்
சங்கையில்லாமல் சென்று சடுதியில் இறங்கினாரே

## 105. பாட்டு

''பூரய மம காமம்'' — என்ற மெட்டு.

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : பிலஹரி

பூரித்து மனம் மகிழ்ந்தார் பார்த்து மிக
புனிதமாம் மாகிஷ்மதி பட்டினம் தனைக்கண்டு

அநுபல்லவி

1. நீர்வளம் நிலவளம் நிறைந்த அக்கிரகாரத்தை
சீர் பெறும் திவ்விய நந்தாவனமதில்
நேர்மை யுடனே ரேவா நதிக் கரை ஓரத்தில்
ஆர்வத்துடன் சங்கரர் ஆயாசப் தீர்ந்து அகத்தில் (பூரி)

2. முறைப்படி ஆசாரியரும் அனுஷ்டானம் முடித்துமே
விரைவுடன் வையோனும் வந்தான் மத்தியில்தாமே
சிறப்புடன் மண்டனப் பண்டிதரைக் காணத்தாமே
புறப்படும் வழியினில் கண்டார் மாதர்வரவே (பூரி)

## 151. விருத்தம்

பாங்கிமார் சிலபேர் அங்கு பரிவுடன் தண்ணீர் கொண்டு
தாங்கியே போகும் போது சங்கர பகவத் பாதர்
ஓங்கியே கீர்த்தி மேவும் உத்தம மண்டனர்தம்
பாங்குள்ள கிருஹம் எதென்று பகலுவீர் என்று கேட்டார்

## 152. விருதத்ம்

அம்மொழி கேட்டு அந்த ஆரணங்கு எடுத்துரைப்பாள்
தம்முள் பிரமாணம் தன்னை சந்ததம் அறிந்துகொண்டு
நிம்மதியாகக் கூண்டில் நேர்மையில் கிளிகள் நின்று
சம்மதமாக வாழும் அம்மனைச் செல்வீர் என்றாள்

## 106. பாட்டு

காவடிச் சிந்து "கையில் வேலும் தரித்து"—என்ற மெட்டு

பல்லவி

1. ஸ்வபிரமாணமென்றும் அன்னிய பிரமாணமென்றும்
ஸதா விவாதம் செய்து கொண்டு அங்கு
ஸந்ததம் இருக்கும் கிளிகள்

2. அவரவர் செய்திடும் நல்வினை தீவினை
அளிக்கும் பயன்களளித்த தென்று பகர்ந்து நன்றாய்
பாங்குடனே இருக்கும் கிளிகள்

3. ஜீவர்கள் சேய்திடும் திகழும் கர்மங்களுக்கு
ஈசனே பயனளிப்பார் வினை அல்ல வென்று
ஆவலாய் உரைக்கும் கிளிகள்

4. நித்திய உலக மென்றும் அநித்திய உலக மென்றும்
அநேக விதமாகவே பெண் கிளிகள்
மெத்தவும் சங்கை செய்திடும்

5. அந்த அடையாளம் அறிந்து நீர் செல்வீரென்று
சுந்தரிகளும் உரைத்தார் அதையறிந்து

6. மண்டனர் கிருஹம் தன்னை மகிழ்ந்தவர் கண்டவுடன்
விண்டிடா ஆனந்தம் கொண்டார் விரைந்து செல்ல
வழி யறியாமலே நின்றார்

7. யோக மார்க்கத் தாலே ஏகிட ககனத்தில்
தியாகியும் இறங்கி விட்டார் இல்லத்தினுள்ளில்
ஏகியே புனிதர் நின்றார்

8. வெற்றிக் கொடி அசைய விண்ணோர்க் கிதையோ
என்று
முற்றிலும் திகழ்ந்திடவே முனிவர் கண்டு
சுற்றியே வந்து மகிழ்ந்தார்

9. சிரத்தை யுடனே சிரார்த்தம் செய்ய வென்றே
மண்டனர்

ஜயமுனி வியாசரையும் அழைத்து மிக
சிறப்பதாய் உபசரித்தார்.

## 153. விருத்தம்

ஆகாச மார்க்கமாக ஆசானும் அங்குமெல்ல
ஆகம வேதம் கற்ற மண்டனர் கிருஹத்தில் வந்தார்
தாகமாய் வந்த அந்த சங்கரர் தன்னை நோக்கி
வேகமாய் வியாசர் அப்போ ஜயமுனியுடனே கண்டார்

## 154. விருத்தம்

தத்துவ ஞானம் தன்னை தகுந்த தோர் சிகையதாக
எத்திக்கும் கொண்ட போதம் எழில் யக்ஞோபவீதமாக
உத்தம யதியுமாக உகந்துமே அங்கு வந்தார்
சித்தரைக் கண்டு மெத்த சினங்கொண்டார் மண்டனரும்

## 107. பாட்டு

நோட்டு மெட்டு

பல்லவி

1. எல்லை யில்லாக் கோபம் கொண்டு இதை யெடுத்து
ரைத்தனர்

இல்லறத்துக் கிறைவனான மண்டனப் பண்டிதர்

2. துறவறத்திற்கு ஈசனாகி துலங்கும் சங்கரரிடம்
விரைவுடன் எக்காரணத்தால் ஏகினீர் இவ்விடம்

3. எந்த மார்க்கத்தினாலே நீரும் இவ்விடம் வந்துளீர்
அந்த மார்க்கத்தையறிய விரும்பினேன் நானென்றார்

4. மார்க்க மேதுரைத் தாயென்று மனமறியச்
சொல்லுவீர்
தீர்க்கமாய் நின் தாய் விதவை என்று அவர்
உரைத்தனர்

5. மண்ட னரே நீர் என்னிடம் வழியை யன்றோ
வினவினீர்
அவ்வாறாகும் கண்டீர்

6. மெத்தவும் சினத்துடன் மது உண்டதுண்டோ
என்றார்
சித்தம் மகிழ்ந்து சங்கரர் செப்பிடுவாரே ஒன்றாய்

7. மஞ்சள் நிறமில்லை மது வெண்மை நிறமாகும் என்ன
மிஞ்சியே கோபம் கொண்டு மண்டனர் மீண்டும்
சொல்வார்

8. வெண்மை நிறமென்பதை அறிவீரோ நீவிர் என்றார்
உண்மையை உரைத்திடுவீர் என்றுமே அவர் நின்றார்

9. முகமலர்ச்சி யாகவே யதீசுவரர் இதுரை
செய்குவார்
அகமதில் நிறம் அறிவேன் அருந்தி நீர்சுவை என்றார்

10. தாறுமாறு மாகவே அநேகம் கேள்விகள் கேட்கவே
சீரும் சிறப்புமாய் சங்கரர் மகிழ்ந்து உரைக்கவே

## 155. விருத்தம்

அத்தவம் சுமப்பதர்கும் கஷ்டமாம் இந்தகந்தல் அந்தோ
மெத்தவும் பிரியமாக சுமக்கு றீர் அந்தோ
உத்தமமான யக்ஞோபவீதமும் சிகையுமிப்போ
மெத்தவும் கஷ்டமென்னதுறந்தது யாதோ சொல்வீர்

## 156. விருத்தம்

தீமதியுடையோய் நாமும் செப்பிடும் மொழியைக் கேட்டீர்
காமினி பின்னே சென்று கருத்தை அவள் பாலே விட்டு
காம போகம் புஜிக்கும் கர்த்தவ மன்றே ஜன்மம்
நேமமாய் நினது தந்தை கொண்டிடா அகந்தை
கொண்டேன்

## 157. விருத்தம்

சுருதியின் மொழியை நன்றாய் சோதித்துணர்ந்து ஒன்றாய்
கருதி இச்சந்நியாசத்தை களிப்புடன் கொண்டேன்கண்டீர்
உறுதியாய் நிராசை பெற்று உள்ளமே துறவு பூண்டால்
பரிதி போல் பாரில் நிர்க்க பகரவோர் தடையுமுண்டோ

## 108. பாட்டு

"குருபரம் திருமொழி" — என்ற மெட்டு.

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : கமாசு

1. துறவறம் பூண்டாலன்றி சொரூபஞானம் தோன்றாது
திறமுடன் பாரென்று பகர்ந்தார் சங்கரர் நின்று
2. மகத்குருவின் மொழியை மண்டனர் கேட்டுச்
சொல்வார்
ஜகத்தினில் மிகவும் நீர் தெளிந்தவர் தான் என்றார்
3. இல்லறம் நடத்திட வில்லாமலே நீரும்
எல்லையில் சிஷ்யருடன் ஏகுவீர் துறவறம்
4. குடும்ப பாரம் வகிக்கக் கூடாது என்று எண்ணி
கடுமையான சாஸ்திர சுமையை சுமந்து நண்ணீர்
5. பண்டிதர் மொழியதனை பகவத் பாதரும் கேட்டு
விண்டிடுவார் அப்போ விளங்குறையும் அப்போ

6. குருவிற்கு பணிவிடை செய்ய மனமின்றி நீர்
பருவ மங்கையைக் கொண்டு பணிவிடை செய்யப்
பெற்றீர்

7. தாங்காத கோபம் கொண்டு தானும்மண்டனரப்போ
பாங்காய் பாணிக்கிரஹணம் செய்தது மிக தப்போ

8. அன்னை உதரந்தன்னில் அன்பாய் இருந்து வந்தீர்
அன்னவரை நிந்திக்க அகமதினில் நினைந்தீர்

9. வந்த வழி உணர்ந்து பந்தம் தீராத தேனோ
அந்த இடத்தில் மோகம் அடைவது சரிதானோ

10. மூட புத்தியினாலே மாடுகள் போல் அலைந்து
வீட்டையும் மார்க்கத்தைத் தேடாமலே குலைந்து

11. சங்கரர் மொழி கேட்டு அங்கம் மிகத்துடித்து
மங்கள மறைகளின் வாக்கியமன்றோ விடுத்து

12. உத்தமியை மணந்து உகந்து வேள்வி புரிந்து
சித்தம் மகிழாதவன் சுத்தி செய்தவனன்றோ

13. அக்கினி காரியத்தை மிக்கவும் தியாகம் செய்தீர்
முக்கியமாய் நீரும் பாவம் செய்தவராவீர்

14. ஆத்ம ஞானமடைந்து ஆத்மாவை யறியாதோன்
ஆத்ம சுத்தி செய்யாத அதமனாகும் தீயோன்

15. ஆத்ம தத்துவம் தன்னை அறியென்று சுருதி எங்கும்
சாத்வீக பறை சாற்றி மிகவும் ஓங்கும்

16. வாயில் காப்பாளர் தன்னை வஞ்சனையாலே வென்று
தீய குணம் படைத்த திருடனைப் போலே வந்தீர்

17. ஆயுள் வேதங்கற்ற அதிதிகளுக்கு அன்ன மின்றி
நேயமாய் புஜித்திடும் நீயன்றோ கள்வன் அன்றோ

## 158. விருத்தம்

ஆரியர் இவ்வாறாக அரைந்ததைக் கேட்டு மிக்க
கூறிட அரியதப்போ குறுகியே நிந்தை செய்து
சீறிய கோபம் கொண்டு சிரக்க சங்கரரை நோக்கி
மீறிய கோபம் கொண்டு மிகவும் நீர் மூடனென்றார்

## 159. விருத்தம்

புத்தியில் சிறந்தோன் என்று புரிந்துகொண்டேன் நானிங்கு
உத்தம ஞானிதன் பால் உரைத்தது மிகவும் நன்று
மெத்தவும் அறிவு மிக்கோய் மேன்மையே உமது செய்கை
சித்தமே தெளிந்தோர் தன்னால் நியஜித்தவர் ஆகும்கண்டீர்

## 109. பாட்டு

"அம்பிகையென்று அநேகரும் சொல்ல" என்ற — மெட்டு.

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : செஞ்சுருட்டி

சங்கரா நீர்கொண்ட சந்நியாஸம் எங்கே
தத்துவ ஞானம் எங்கே
மங்களமான மதி எங்கே பார்த்திட பர பிரம்ம
ஞான மெங்கே
கங்குல் கலை ஒத்த கலியுகம் எங்கே கற்ற
பெரியோர் எங்கே
துங்க ஞானிகளின் தோற்றமெங்கே நீர் கொண்ட
தூய இவ்வேட மெங்கே

சங்கரர்

1. சொர்க்க மெங்கே தீய குண முளதோன் செய்திடும்
சுசியான வேள்வி எங்கே
கவர்ச்சியான கர்மமெங்கே கலியுகம்
எங்கே கதி பெறவே

2. அவரவருக்கான அணங்கையை மணந்துமே
ஆனந்தமாயிருக்க
எவரும் புகழுவே கர்ம யோகியென
ஏகியே வேடங்கொண்டாய்

3. அநேக விதமாக மண்டனரும் மிக சங்கைகள்
செய்திடவே
அநேக யுக்தியாலே சங்கரரும் அதை மறுத்து
மகிழ்ந்திடவே
தினகரன் போல் திகழும் தேஜஸுடன்
ஸ்ரீ குருவு மிருக்க
மனமகிழ்ந்து முனி வியாசர் ஜயமுனியும்
மண்டனரைப்பார்த்து உரைப்பார்

4. புத்ரனே நீயும் பூரண ஞானி இவரென்று உணராமல்
பித்தரைப் போலே பிதற்றுகின்றாய் இது மெத்தவும்
குற்றமாகும்
இத்தரையின் உத்தம ஞானியர் ஒப்புவாரோ மிகவும்
உத்தம துறவு கொண்ட தூயர் என சித்தந்தனில்
அறிவாய்

160. விருத்தம்

எதிர்ச்சியாய் கிடைத்த லாபம் என்று நீர் எண்ணி இப்போ
விதியுடன் விஷ்ணுவாக விரைவுடன் ஏற்று சிரார்த்தம்
திதியினை சிறப்பாய் செய்வீர் சிந்தையில் சினம் எழாது
ததி இது என்று வியாசர் தன்மையாய் எடுத்துரைத்தார்

110. பாட்டு.

"குருபரன் திருவருள் வேண்டும்" — என்ற மெட்டு.

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : சுருட்டி.

மண்டனப் பண்டிதர் அறிந்தார் வியாசர் மொழியை
மெத்தவும் கற்றுணர்ந்து மேன்மையாக விளங்கும்

அனுபல்லவி

பண்புடனே பகவத் பாதமலர் பூஜித்து
இன்பமாய் பிக்ஷை ஏற்றுகொள்வீர் என்று யாஜித்து

சரணம்

1. மண்டனர் மொழி கேட்டு மகத்குருவும் மகிழ்ந்து
கொண்டோம் வாத பிக்ஷை கொள்ளவே இங்குகந்து
தொண்டரில் சிறந்தோய் நீர் தூய மனம் அறிந்து
விண்டிடானந்தம் கொண்டோம் விவாதம்
செய்வோம் மிகுந்து (மண்ட)

2. அன்ன பிக்ஷையில் அபிலாஷை இல்லை யென்று
உன்னிதமாகவே உகந்து வாதிப்போம் நின்று
அன்புடன் அறிஞர்கள் ஆமோதிக்கவே நன்று
சின்மய ஞானத்தை சிறக்க உரைக்க வென்று (மண்)

3. வாதிக்க மனமின்றேல் வாதில் தோற்றேன்
நானென்று
வாஞ்சையுடன் எனக்கு சிஷ்யனாகுவீர் இன்று
சோதித்து தத்வத்தை சூக்ஷ்ம மதியால் வென்று
சோபித்திடுவாய் நன்றாய் தொல்லுலகில் என்று
(பல்லவிபோல்)
சங்கரரும் எடுத்துரைத்தார் (மண்ட)

## 161. விருத்தம்

யதிகளுக்கு இறைவனாக இலங்கிடும் பகவத்பாதர்
இயம்பிய மொழியைக்கேட்டு இசையுடன் விசுவரூபர்
புதியதோர் அவமதிப்பாய் இருப்பதாய் வியப்படைந்து
புதுமையே இதுவும் என்று புத்தியில் கண்டு மிக்க

## 162. விருத்தம்

எதிலும் நான் தோல்வி கண்டதில்லை என்று இறுமாம்புற்று
ஏற்பதும் உண்டோ வேத விகிதமாம் கர்மம் அன்றி
விதி தவறாமல் யானும் வியப்புடன் வாது செய்வேன்
விரைவுடன் இவரை இப்போ வெல்லுவேன் என
நினைத்தார்

## 163. விருத்தம்

விண்ணுலகத்தில் தேவர் விரும்பிடும் அமுதகும்பம்
மண்ணுலகத்தில் யாரும் மகிழ்ந்துமே புஜிப்பதற்கு
நண்ணியதாகில் யார்தான் நலமுற கொள்ளார் சொல்வீர்
பண்புடன் வாது செய்வோம் பாங்காக நாமும் என்றார்

## 111. பாட்டு

''ஸத்துவகுண போதன்'' — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : ஜோன்புரி

ஐயங் கொள்ள வேண்டாம் அறிவினில் சிறந்தோய்
அன்பாய் விவாதம் செய்வோம்

அனுபல்லவி

1. செய்யும் விவாதத்தின் ஜய அபஜயந்தன்னை
தீர்மானம் செய்திட சிறந்தோர் ஒருவர் வேண்டும்
2. வெற்றியை விரும்பியே வாது செய்திட வேண்டும்
மற்றவர் அதை நன்றாய் மறுத்து வாதிக்கவேண்டும்
3. அவரவர் மதங்களை அவரவர் உரைக்கவும்
எவரும் புகழவே இன்பமாய் சிறக்கவும்
4. பிரதிக்ஞைதான் ஏதென்றும் பிரமாணந்தான் எது
என்றும்
சிரக்கவே வாதம் பிரதிவாதம் தான் எது என்றும்

5. இல்லறங் கொண்டோன் யான் துறவற நீர் தூயோர்
நல்லவருய் ஒருவர் நவில வேண்டும் மத்தியஸ்தம்
6. சிந்தையில் சினமின்றி செய்வோம் விவாதம் நாம்.
பந்தயம் ஈதென்று பாங்காய் தீர்மானம் செய்வோம்
7. தன்யமானது கிருஹம் தன்ய மானது ஜன்மம்
தன்யனுனேன் இன்று தங்களை பூஜிக்க
8. நாளை விவாதம் செய்வோம் நல்லவரே சிராத்த
வேளை இன்று ஆகையால் வேதவிதியைச் செய்வோம்

## 164. விருத்தம்.

சங்கரர் புன்முறுவல் கொண்டு சரியென ஆமோதித்து
தங்களால் செய்யும் கர்மம் சரிவர நடத்தி நாளை
மங்கள மிக்க நாமும் மகிழ்வுடன் வாது செய்வோம்
அங்கமாம் முனிவர் தம்மை துலங்கவே சாக்ஷிவைப்போம்

## 112. பாட்டு

திருப்புகழ் "கருவினுருவாகி வந்து" — என்ற மெட்டு.

1. புத்தியில் மிகச்சிறந்த மண்டனர் மொழியை கேட்டு
உத்தம முனிவர்களும் உரைப்பாரே
2. மெத்தவும் கற்றுணர்ந்து மேன்மையுடன் விளங்கும்
உத்தமியை மத்யஸ்தையாய் வைப்பீரே
3. மாமுனிவர் மொழிந்த தனை மண்டனரும் கேட்டுகந்து
நேமமுடன் சிரார்த்தம் செய்ய நினைந்தாரே
4. அக்கினிகள் மூன்றுமின்று ஆவிர்பாவமான தென்று
மிக்கவும் மனம் மகிழ்ந்து உகந்தாரே
5. சிரத்தையுடன் சிரார்த்த கர்மம் சிறப்புடனே நடத்தி
இரவியின் உதயம் எண்ணி இருந்தாரே [பின்பு

6. அன்னம் உண்ட களைப்பு அகல அநேகம் சிஷ்யர்
அன்புடன் வெண்சாமரமும் வீச [அருகில் நின்று
7. அருமறையின் பொருளதனை ஆராய்ந்தறிந்தவர்கள்
பெருமையுடன் பேசி மிக மகிழ்ந்தாரே
8. ஆவலுடன் அநேக வித அர்த்தங்கள் ஆராய்ந்தவரும்
மூவர்களும் அவ்விடம் விட்டு நடந்தாரே
9. முனிவர்களில் இருவர்களும் மின்னொளி போல் [மறைந்திடவே
இனிமையுடன் சங்கரர் அங்கிருந்தாரே
10. ரேவாநதிக் கரையின் ஓரமதினில் சிறந்ததான
தேவாலயத்தில் அவர் அமர்ந்தாரே
11. உத்தம ஞானியர் அங்கு உகந்துரைத்த பொருளதனை
சித்தம் மகிழ்ந்து சிஷ்யருக்கு உரைத் தாரே

165. விருத்தம்

செங்கமலப் பூவிற்கு செழுங்கிளையாய் எழும் ரவியும்
அங்கு வர அநேக அநுஷ்டானங்கள் செய்து அன்புடனே
சங்கரரும் மனம் மகிழ்ந்து சங்கையிலா சிஷ்யருடன்
மங்களமாம் மண்டனரின் மனைக்குள் புகுந்துமகிழ்ந்தார்

---

## பாரதியை சாக்ஷியாய் வைத்து இருவரும் வாதித்தல்.

166. விருத்தம்

சங்கரர் விவாதம் செய்ய சார்ந்தங்கு வந்தபின்னர்
சங்கைகள் செய்து மிக்க சமாதானம் உரைப்ப தற்கு
துங்க நூல் மிகவும் கற்று துலங்கிடும் மனையாள் தன்னை
அங்கு மண்டனரும் கண்டு அன்புடன் உரைக்கின்றாரே

## 113. பாட்டு

"ஞான தேசிக" — என்ற மெட்டு

[தாளம் : ரூபகம்] பல்லவி [ராகம் : தோடி

சாக்ஷியாக அமர்ந்து கொள்வாய் சங்கருடன் நான்
செய்யும் வாதத்திற்கு — சாக்ஷியாக.

அனுபல்லவி

மாக்ஷிமை தங்கும் மகத் சபை தன்னிலே சூக்ஷித்து
தோல்வி ஜயம் இதென்று உரைக்க — சாக்ஷியாக

சரணம்

1. பூர்வ பக்ஷம் செய்து புகழ் பெறவே ஒருவர்
ஆர்வத்துடன் சித்தாந்திக்க ஒருவர்
சீருடன் சபையில் சிறக்கவே பலபேர்
பார்த்திட நீயும் பகர்ந்திட அறிவர் (சாக்ஷி)

2. பர்த்தாவின் மொழியை பாரதியும் கேட்டு
அற்புத மாகவே ஆனந்தத்துடன் பட்டு
நிர்பய மாய் அவர் பாதமலர் தொட்டு
சத்குணவதியும் ஸமரஸத்துள் பட்டு
சாக்ஷியாக அமர்ந்து கொண்டனள்
சகலகலைகள் கற்ற (உத்தமியும்) (சாக்ஷி)

## 167. விருத்தம்

சிந்தை மகிழ்ந்துமே சங்கரரும் பல சிஷ்யர்கள் புடை சூழ
அந்த சபை தன்னில் அமர்ந்தனர் மெத்தவும் ஆனந்தம் மிக ஓங்க
அந்த மண்டனரின் அகமதை யறிந்து அறிஞரில் சிறந்தோராம்
சுந்திர துறவியாய் துலங்கிடும் சங்கர ஸத்குரு ஈதுரைப்பார்

## 114. பாட்டு

" சக்தியும் ஸித்தியும் " — என்ற மெட்டு.

தாளம் ; ஏகம்] பல்லவி [ராகம் : கல்யாணி

ஸத்து சிதானந்த வஸ்துரூபம் ஆத்மா என்றறிவீர்

அனுபல்லவி

சுத்தியில் வெள்ளிபோல் தோன்றும் பிரபஞ்சமாய்
அத்தனையும் மித்தை என்றறிவீர்

சரணம்

1. அக்ஞானத்தாலே ஆவரண மூடி அநேகவிதமாக
தோன்றும் ஜகம்
விக்ஞானத்தாலே விசாரித்திடில் அப்போ
சுக்ஞான மோக்ஷ சுகமாகும் பாரென்றார் (ஸத்து)

2. மண்டனரே நானும் செப்பியது மிக
மாசில்லா சுருதி வாக்கிய மென்றார்
விண்டிடும் வாக்கியத்தில் நான் ஜயித்தேனாகில்
கொண்டிட வேண்டும் சந்நியாசம் என்றார் (ஸத்து)

3. இல்லையே நானாகில் தோல்வி யடைந்திடில்
இல்லறந் தன்னையே ஏற்றிடுவேன்
நல்லவரே நீர் செய்யும் விவாதத்தில்
சொல்லுவாள் பாரதி வெற்றி தோல்வி (ஸத்)

4. சங்கரர் மிகவும் சங்கை யில்லாமலே
அங்கவர் கம்பீரமாய் உரைக்க
அங்கம் பூரித்துமே மண்டனரும் மிக
மங்களமாக மகிழ்ந்துரைப்பார் (ஸத்)

## 168. விருத்தம்

ஒன்றிலும் கலவாததாகி ஒளிபெற விளங்கும் வஸ்து
ஒன்றதே பிரம்ம மென்றீர் ஒப்புவதில்லை நானும்

ஒன்றை ஆசிரயித்து அன்றோ உலகினில் விவகாரங்கள்
நன்றதாய் நடக்குகின்றதையனே என்றுரைத்தார்

## 115 பாட்டு

"என்னுடன்நீர் பேசலாகாது காண்" — என்ற மெட்டு.

[ராகம்: கமாசு
தாளம்: ஏகம்] கோட்டு

1. சச்சிதானந்த வஸ்துவை வேதாந்த சாஸ்திரம்
காட்டிடுமா
உத்தம கர்மம் யாம் செய்யாவிடில் பலன் உகந்தளித்
திடுமா

2. கர்மம் செய்யில் முக்தி கையினில் கனிபோல்
கிடைத்திடும் ஐயமில்லை.

3. நிர்மல மனதாய் நித்திய கர்மம் செய்தால்
நிலத்தில் இல்லை தொல்லை

4. இந்த வாதத்தில் யான் சந்தேகமற
ஜயிப் பேன் ஐயமில்லை

5. சிந்தை தளர்ந்து நான் தோற்றிடில் துறவு
கொள்வேன் சந்தேகமில்லை

6. எந்தன் மனைவி இருவருக்கும் சாக்ஷி
ஆக அமர்ந்து கொள்வாள்

7. எந்த விதத்திலும் எல்லாம் அறிந்தவள்
வெற்றி தோல்வி அறிவாள்

8. பிரம்ம ஸ்வரூபம் அடைய பிரம்ம ஞானமே
முக்கியமென்றார்
கர்மமே முக்தியாம் கைவல்ய முக்திக்கு என்று
மண்டனர் விண்டார்

9. அந்த மொழிதன்னைக் கேட்டுமே பாரதி
சிந்தையிலொன்று கொண்டாள்
மந்த ஹாஸத்துடன் மகிழ்ந்திருவருக்கும்
மாலை அணிய வைத்தாள்

10. இந்த மாலையில் நான் வெற்றி தோல்வி
தன்னை யறிந்திடுவேனென்றாள்
சுந்தரி யாளும் சிந்தை மகிழ்ந்து சிறக்கப்
பின்னு முரைப்பாள்

11. யார் கழுத்து மாலை வாடுமோ அவர்
தோல்வியடைவார் என்றாள்
சீர் பெற மாலை வாடாதோர் வெற்றியில்
சிறந்தோரென்றறைந்தாள்

12. இந்த விதமாகப் பந்தயம் வைத்துமே
சிந்தை மகிழ்ந்து கொண்டாள்
விந்தையுடன் தன் ம[illegible]யில் விவகாரம் நன்றாக
செய்து வந்தாள்

13. பண்புடன் இவர்கள் செய்யும் விவாதத்தைப்
பாங்குடன் கேட்டிடவே
மண்ணுலகத்தோரும் விண்ணுலகத்தோரும்
அங்கு நிறைந்திடவே

14. மங்கள மொழிகள் கூறியே யாவரும் அங்கம்
பூரித்திருந்தார்
துங்க நல் சுருதியை பிரமாணங்களாக அவர்
கொண்டுகந்தார்

15. சங்கரரும் மண்டனப் பண்டிதரும் சந்தோஷம்
கொண்டு மிக
எங்கும் புகழ் ஓங்க ஏகமனதராய்
இருவரும் வாது செய்தார்

16. இப்படி யாகவே வாதம் நடத்திட ஒப்பில்லா
பாரதியாள்
தப்பித மற தன் பர்த்தாவை வைசுதேவர்
திக்கென்றழைப்பாள்

17. ஸ்வப்ரகாசமாய் த்துலங்கும் சங்கரரை பிக்ஷைக்கு
என்றே அழைப்பாள்
அப்ரமேய சொரூபனை சங்கரர் ஆனந்தமாய்
பிக்ஷை செய்வார்

## 169. விருத்தம்

ஐந்து ஆறு நாள்கள் செல்ல அனைவரும் ஆமோதிக்க
ஐயமில் மனதராகி ஆசனத்தமர்ந்து கொண்டு
உய்யும் மார்க்கம் ஈதென்று உறுதியாய் நிலையுரைக்க
மெய்யன்பு கொண்டு யாரும் மேன்மையாய் பார்த்திருக்க

## 116. பாட்டு.

"மன்னனும் பர நிலையில்" — என்ற மெட்டு.

கண்ணிகள்

1. மந்தஹாஸ முகத்துடனே மனமகிழ்ந்து
இருவர்களும் உகந்து
சுந்திரமாம் சபை தன்னிலே சந்திரன்
போல் சோபை மிக மிகுந்து

2. தம்மகத்தில் இருவர்களும் சங்கையற உரைக்க
வென்று துணிந்து
கம்பீரமாக அவிர் தம் மதம் ஸ்தாபிக்க நினைந்து

3. யதிகளுக்கு அரசனாய் இலங்கும் சங்கர
பகவத் பாதர் அப்போ
அதி கடினமான அநேகம் சுருதிகளையும் அங்கு
உரைத்தார்

4. அத்தனையும் கேட்டு மிக ஆக்ஷேபற மனம் மகிழ்ந்து
உத்தமமான சுருதியால் உகந்து அவரும் வாது
செய்து ஜெயித்து

5. மண்டனரின் திறமை கண்டு மகத்குருவும்
மனது மிக மகிழ்ந்தார்
பண்புடன் அவர் மதத்தை மறுத்து அவர்தம் மதத்தை
அங்கு ஸ்தாபித்தார்

6. துறவிகளுக்கிறைவனுகி துலங்கிடும் சங்கரரே நீர்கேளீர்
பரவியதோர் பரமாத்மா ஜீவாத்மா பேதம் உண்டோ
சொல்வீர்

7. உத்தாலகர் யாக்ஞவல்கியர் உத்தமமாம் தங்கள்
சிஷ்யர் மகிழ
தத்துவமஸி வாக்கியத்தை சங்கையறவே
போதித்தார் புகழ

8. சுவேத கேதுவே நீ அந்த பிரம்ம வஸ்துவாக
இருக்கின்றாய்
பேதமற சாந்தோக்கிய சுருதியே பிரமாணமாகும்
இங்கென்றார்

9. தந்தை யுரைக் கேட்டவுடன் சங்கையற
தன்னுளத்தில் தெளிந்து
அந்த பிரம்ம வஸ்துவே நான் ஆகுமென்று
அன்புடனே உகந்து

10. சாந்தோக்கிய சுருதியே இங்கு சார்ந்த தோர்
பிரமாணமாகு மென்றார்
சந்தேகம் கொள்ள வேண்டாம் மண்டனப்
பண்டிதரே நீர் என்றார்

11. யோகியரில் சிறந்ததோர் ஆன உத்தமரே
உரைத்ததெல்லாம் அறிந்தேன்
ஆகம வேதங்களில் அரையும் பொருள் வேறதாக
எல்லாம்

12. முறையுடனே ஜபங்கள் செய்தால் முழுதும் பாப
கர்மங்களெல்லாம் விலகும்
விரைவுடன் அதுபோல் ஜீவன் பாபகர்மாவெல்லாம்
விலகும்

13. பாபகர்மம் விலகும் அன்றி அபேதம் ஒருக்காலும்
இல்லை என்றார்
தாபம் கொள்ள வேண்டாம் இப்போ சாற்றியது
உண்மையென்று தெளிவீர்

14. புத்தியில் சிறந்ததான பண்டிதரே உரைத்ததெல்லாம்
உண்மை
மெத்தவும் நீர் அறிந்திடவே யுக்தியொன்று
உரைத்திடுவேன் திண்மை

15. உம்பட்டென்ற வாக்கியத்திற்கு உரை செய்ய ஓர்
பொருளும் இலாததாலே
உரைத்தனர் அறிஞர் அன்று உற்ற பலன்
பாப சுத்தி என்றே

16. தத்துவ மஸி வாக்கியம் என்றாய் ஜீவ பராள்
ஐக்கியமதைக் குறிக்கும்
சித்தம் தெளிய உரைக்கும் மந்திரமென்று
எப்படி அதை உரைக்கும்

170. விருத்தம்

துறவிகளுக்கிறைவனே நீர் துலங்கிடவே உரைத்த
வாக்கியம்
பரவியதோர் தத்துவமஸி பரமாத்ம ஜீவாத்ம உபாதி நீக்கி
திரவிய அபேதம் என்றீர் நிர்மலமாம் வேள்விதனில் ஆகும்
திறப்படவே செய்கின்ற தீவிரமாம் அங்கம் ஆகும்
தெரிந்து கொள்வீர்

## 117. பாட்டு

" காலையில் கண்ணன் " — என்ற மெட்டு

கண்ணிகள்

1. மண்டனப் பண்டிதர் உரைத்திடவே மகத்குருவும் அதைக் கேட்டிடவே
எண்டிசையும் புகழ இவரும் கேட்டு மகிழ
இசைவுடன் பதில் எடுத்துரைக்கின்றாரே

2. வேள்விக்கு அங்கமாய் வித விதமான கிரியை விதித்துளது கர்மகாண்டமிது
கேள்வியில் சிறந்திடும் தத்துவமஸி வாக்கியம்
கேடற்ற ஞான காண்டமதாகும்

3. பூச்சிய பாதரே நீர் புகன்றது சரியே
பூவுலகத்தில் பிரம்மம் பல பல வடிவில்
பூசித்து புகழ்பெற விதித்தது போலவே
பூரிக்கும் தத்துவமஸி வாக்கிய மென்றார்

4. திண்மையாம் பக்திபுடையவரே
திகழ்ந்திடும் மண்டனப் பண்டிதரே
பண்புடன் பலபல விதமாக உரைக்கும்
பதம் பொருளும் பகர் விதியாகும்

5. விதிவிலக்கற்றதோர் பொருள் தன்னை
விளக்கி வைக்கும் தத்துவமஸி வாக்கியம்
துதிபெறும் வாக்கியம் அது தன்னை நீர்
விதி வாக்கியமென்பது பொருத்தமே தான்

6. துறவிகளுக்கு அரசரானவரே
துரிய ஆசிரம வாஸகரே
இராத்திரியில் சத்திர யாகம் செய்திடில்
கீர்த்தியான பலன் கிடைக்கு மென்றே

7. விதித்துள விதி தன்னை யறியீரோ
விளங்கவே அதன் பொருள் தெரியீரோ
பதி தன்னில் பிரம்மத்தை யறிந்தவன்
பிரம்ம மாகுவான் என்றது விதியன்றோ

8. அப்படியாகில் முக்தியும் கர்மத்தினால்
அடைந்திடலாம் என்றுரைகின்றீர்
எப்படிக் கூடும் மனதின் செயலன்றோ
எல்லாம் இறுதியில் அழியுமன்றோ

9. மிக்கவும் அறிவில் சிறந்தவரே
மேன்மையாய் யுக்தி உரைப்பவரே
தக்க தோர் உபாசனை தத்துவமஸி வாக்கியம்
சத்குணரே உரைக்கா விடினும்

10. ஜீவாத்மாவை சிறப்புடனே
பரமாத்மாவுக்கு ஒப்பாக
பாவா பாவம் கடந்தவரே
பகர்ந்திடில் என்ன பழுதாமோ

11. பண்டிதரே நீர் பகர்ந்த தெல்லாம்
பாங்குடன் சிந்தையில் அறிந்து கொண்டேன்
விண்டிடவே நீரும் விரைவில் அறியும்படி
விளங்கவே சந்தேகம் ஒழித்திடுவீர்

12. சேதன தன்மையால் ஒப்புவதா
திகழும் குணத்தால் ஒப்புவதா
எதனால் ஒப்புமை உரைப்பது என்று
எந்தனுக்கிப்போ உரைத்திடுவீர்

13. சைதன்யத் தன்மை சாற்றிடவே
சகலரும் அறிந்தோர் தன்மையதாம்
தூய்ய குணங்களை உரைக்கிலோ அப்போ
தூயரே உம் கொள்கை எதிராகும்

14. முனிகளுக்கெல்லாம் முனியானவரே
இனிமையான மொழி உடயவரே
அநிசமும் அறிவும் ஆனந்தமும் மிக
தனிமையான பரமாத் மாவிலிருக்கும்

15. ஜீவனின் ஆனந்த குணங்களை இங்கு
திகழ வொட்டாமல் அவித்யை மறைத்து
பாவ பதார்த்தில் பற்றுளோன் ஆனாலும்
பரமாத்ம பாவத்தில் பேதமுண்டோ

16. அறிஞரில் மிக்க சிறந்தவரே
அன்புள்ள மண்டனப் பண்டிதரே
பரிவுடன் ஜீவாத்மா பரமாத்மா ஒன்றென
பகவர்வது உமது வாக்கியமே

17. எப்படி யென்றால் எடுத்துரைப்பேன்
ஒப்பிட வேண்டும் உளம் உகந்தேன்
செப்பிய நீரே ஜீவன் உபாதையால்
திகழவில்லை ஸர்வக்ஞன் ஒன்றே

18 ஸகல ஜகத்திற்கும் காரணமாய்
சைதன்யமாம் பரமாத்மா ஆகையினால்
அகமதில் ஜீவனை சைதன்யத்துடன் ஒப்பாய்
அறிந்து கொள்வது என் கருத்து என்றார்

19. ஆகா ! மெத்தவும் அற்புதமே
அறிந்த தெல்லாம் மிக விற்பனமே
தாகம் தணித்திடும் தத்துவமஸி என்றும்
சார்ந்த பதங்களும் மூன்றாகும்

20. தத்பத பொருள் ஜகத் காரணமாம்
(த்வம்) தொம்பதப் பொருள் காரியமாம்
மெத்தவும் அஸி என்னும் பதம் இருவரையும்
மேன்மையாய் ஐக்கியம் செய்வதாகும்

21. ஐயனே உலக விஷயமெல்லாம்
பேத ஞானத்தை உணர்த்து மன்றோ
மெய்யனே வேதம் அபேதத்தைக் கூறுதல்
மெத்தவும் பொருத்த பொருளன்றோ

22. வேதத்தை நன்றாய் அத்தியயனம் செய்யென்று
விதித்துளது வேத வாக்கியமும்
போதனே தத்துவமஸி வாக்கியமதுபோல்
பிரேமையாய் ஜபம் செய்யப்படுமன்றோ

23. இந்த விதமாக மண்டனர் உரைக்க
சிந்தையில் சத்குரு அறிந்து கொண்டு
இந்திரியத்திற்கு அபேதம் தோன்றுமெனில்
வந்த அபேத சுருதி வீண் அன்றோ

24 தோன்றிடும் வேதத்தில் இந்திரிய சம்மந்தம்
தோன்றுமலே இங்கு இருப்பதினால்
சான்றதோர் அபேதத்தை இந்திரிய உணர்விற்கு
தோன்றாது எண்ணமென்றோ

25. புத்தியில் சிறந்த புண்ணியரே
சத்துக்களில் அக்ர கண்ணியரே
மெத்தவும் நான் ஈசனில் வேறே எனவே
தோன்றவே ஜீவனின் விசேஷமதாம்

## 171. விருத்தம்

ஜீவனின் பேதம் நன்றாய் தெரிந்திடா விடினும் இங்கு
ஜீவனின் விவகாரத்தால் நிகழ்ந்திடும் அனுபவத்தால்
ஜீவனின் அந்த ஞானம் நிகழ்ந்திடும் அபேதந்தன்னை
ஜீவனின் உபாதியாலே பாதிப்பதாகும் கண்டீர்

## 118. பாட்டு

" முக்தி யென்றறியாத " — என்ற மெட்டு

1. பிரத்யக்ஷாதி பிரமாண மெல்லாம்
பேத ஞானத்தை போதித்திடும்
பிரத்யக் ஆத்மாவும் இந்திரியங்களுடன்
பந்தப் படுவதில்லை அப்படி போல்

2. பேத பாவமாய் தோன்றுகின்ற
பிரத்யக்ஷாதி பிரமாணத்தால்
போதனை செய்திடப் படுமோ தான்
பேரறிவோரே உரைத்திடுவீர்

3. அறிவில் சிறந்த பெரியோரே
ஆகம பிரமாணங்கள் அறிந்தோரே
பரிவுடன் நான் ஈசனில் வேறெனவே
பாங்குடன் ஞானம் விளக்குவதால்

4. பேதம் நன்ருய் தெரியா விடினும்
பேதமாய் விவகாரம் அனுபவமாம்
போதனே அந்த பேத ஞானத்தினுலே
அபேத சுருதியை போதிப்பதாகும்

5. பொரிர்களில் சம்மந்தமானவுடன்
பிரத்யக்ஷ பிரமாணம் காட்டு பேதத்தை
குறிகுணமற்றதோர் ஆத்மாவை
குறிக்க வொண்ணுது இந்திரியத்தால்

6. பேத விஷயத்திற்கு ஆசிரயமாய்
பேணியே ஆத்மா இருப்பதனுல்
நாதனே இந்திரிய சம்மந்தம்
இல்லையென நவில்வது சரியன்று

7. ஆத்மா விபுவாய் நிறைந்தவரா
அல்லது அணுவாய் அமர்ந்தவரா
ஆத்மா எங்கும் நிறைந்தவராகில்
அடைவதில்லை ஒரு சம்மந்தமும்

8. மனதை இந்திரியம் என்றுரைப்பார்
மனதோ ஆத்மாவிற்கு அன்னியம் என்பார்
மனமோ இந்திரியம் ஆவதன்று
மனதால் நன்றாய் அறிந்து கொள்வீர்

9. யோகியே உரைப்பதை கேட்டிடுவீர்
உண்மையறிந்து பாராட்டிடுவீர்
ஆகிய மனம் இந்திரியம் இல்லாவிடினும்
அதுவேஸாக்ஷியாய் இருப்பதன்றோ

10. அந்த சாக்ஷியே பேதமதை
அறிய உணர்ந்திடில் குற்றம் ஏனோ
எந்தையே அபேதத்தைச் சுருதி உகந்து
எடுத்துரைப்பது எவ்வாறாகும்

11. மனதில் தோன்றிய சாக்ஷி ஞானம்
மன்னிய அவித்தைக்கு ஜீவனாகும்
உன்னியே பேதத்தை உண்டுபண்ணும்
அன்னிய நிலையதை யாக்கிவைக்கும்

12. அங்கையில் நெல்லிபோல் அபேத மென்றும்
இங்கு உபதேசம் செய்யும் உபநிடதம்
பிரத்யக்ஷ பிரமாணங்களுமிங்கு
மறையோரே மற்றோர் விரோதமில்லை

13. யதி சக்ரவர்த்தியே உணர்ந்து கொண்டேன்
மதியினால் நன்றாய் தெரிந்து கொண்டேன்
மதித்திட ஞானம் மற்ற கட படங்களும்
பதார்த்தத்தில் ஒற்றுமை இருப்பது போல்

14. கிஞ்சிகன் ஆன ஜீவாத்மாவுக்கும்
ஸர்வக்ஞனை பரமாத்மாவுக்கும்
மிஞ்சிய யுக்தியால் அனுமான பிரமாணத்தால்
அபேத சுருதிக்கு விரோதமாகும்

15. வித்வான்களில் மிகச் சிறந்தவரே
மெத்தவும் சுருதி யுக்தி அறிந்தவரே
உத்ததோர் ஜீவாத்மா பரமாத்மாவுக்கு
உரைத்திடும் பேதம் சத்தியமா

16. மேவிய கற்பனை என்றுரைத்தால்
மேன்மையாம் திருஷ்டாந்தம் விளம்பிடுவீர்
அறிந்தோரே காரிய காரணம் யாவையும்
வஸ்துக் கன்னிய மானதென்று

17. கற்பனை என்பது சம்மதமே
அற்புதனே அதை ஒப்புகிறோம்
நிர்பய மாகவே அதற் கொருத்ருஷ்டாந்தம்
பற்பல பிரமாணங்கள் தேவையில்லை

18. பத பதார்த்தத்தின் பேதமதை
பாங்குடன் புத்தியே விளக்குவதால்
இதமுடன் ஆத்ம ஞானத்தால் புத்தியும்
இருப்பதென்பது சரியன்று

19. சுக துக்கம் ஜீவனைக் குறிப்பதுவா
திகழ் பரமாத்மாவைக் குறிப்பதுவா
சுகதுக்கங்களில் சுழலுகின்ற ஜீவனுக்கு
ஜகமதில் பேதம் நீங்குவதில்லை

20. நிர்குண வஸ்துவில் பேதமில்லை
சத்குணனே சந்தேகமில்லை
அற்புதமாம் அனுமான பிரமாணத்தால்
சத்குண பேதம் இங்கு கூடாது

## 172. விருத்தம்

யோகிகளுக்கிறையே இங்கு உரைத்திடும்
பதார்த்தங்களுக்கு
ஆகிய காரணங்கள் அனுதியாம் என்பதே போல்
பாகிய விருத்தியுள்ள ஜீவனும் பரமாத்மாவும்
ஏகிய காரணங்கள் எவ்விதம் இலங்கும் கண்டீர்

## 173. விருத்தம்

அவித்தையின் உபாதியாலே ஆனது கடபடாதி
பவித்தது பரமாத்மாவில் ஜடபொருள் வேறதாக
அவித்தையுள் பட்ட ஜீவன் சேதனன் ஆகையாலே
புவிதன்னில் பரமாத்மாவில் பேதங்கள் கண்டுகொள்வீர்

## 119. பாட்டு

"கல்லார்க்கும் கற்றவர்க்கும்" — என்ற மெட்டு

1. ம:- எந்தனுட கொள்கை ஈதென்று
எடுத்துரைப்பேன் ஐயா
தன்னுடைய ஞானத்தினுல் சார்ந்த ஜீவபேதம்
உன்னியே நான் பார்க்கும் போது உற்ற
பிரம்மம் வேருய்
தன்னியனே தோற்றுவதால் சாற்றினேன் என்
கருத்தினை

2. உண்மையான அறிவு உதிக்கில் உள்ளபெந்தம்விலகி
திண்மையான ஜீவன் அந்த பிரம்மமாவான்
என்று உமது
பண்புடைய கொள்கை என்று பாங்குடன்
நான் அறிந்தேன்
கண்ணியனே ஜீவாத்மாவில் பேதம் தீர்வதில்லை
என்றும்

3. அந்த ஆத்மா ஞானத்தினுல் அடைந்த ஜீவபேதம்
எந்த வித பேதங்களும் போகவில்லை என்பதுவே
எந்தனுட சிந்தை தன்னில் சிறந்ததான கொள்கை
எந்தையே ஏகிடச் செய்வதுந்தனுட செய்கை
என்ருர்

4. ச:- பரமாத்மாவைத்தவிர பார்க்கில் பேதம் உண்டோ
பரவிய விஷயங்களுக்கும் ஜீவனுக்கும் பேதம் நாமும்
திறப்பட ஞானத்தால் தீருவதில்லை பந்தம்
உரபட நீர் உரைத்ததிங்கு எமக்கு சம்மதம் மாகும்

5. ஆத்ம ஞானத்தில் வஸ்து சகுணமா நிர்குணமா
நிர்குண மென்ருல் நமக்கு மெத்தவும் சம்மதமே
சத்குணனே சகுண ஞானம் பேதம் போகா
தென்றும்

நிர்விசேஷ வஸ்துவை நிகழ்த்தும் சுருதியை அறிவீர்

6. ம:- தேகமாம் விருக்ஷமதினிலே ஜீவாத்மா பரமாத்மா
ஏகபோகமாக அங்கு இருக்கிருர் இவர்களும்
போகத்தை ஜீவன் புஜித்து புலன் வழியே
செல்வான்

போக மற்று முற்றும் சுகம் பெற்று பரமாத்மா
நிற்பான்

7. பேதமாய் இருக்கையில் அபேதம் எங்கு கூடும்
வேத சுருதி கூறுவதை பேணிட வேண்டுமே நீரும்

ச:- போதனே சுகதுக்கத்தை ஜீவன் புஜிக்கின்ருன்
வேதனை தீர பரன் உதாசீனனுய் இருக்கின்ருன்

8. சகலமும் அறிந்தோரான மண்டனரே நீரும்
சாற்றிய தெல்லாம் அறிந்தேன் சந்தேகமின்றி
தெளிந்தேன்

மிகவும் சம்மதம் உமக்கு பிரத்தியக்ஷ பிரமாணம்
மேன்மையாம் சுருதியை நீரும் பிரமாணமென்றே
அறிந்தோர்

9. பிரத்யக்ஷ பிரமாணத்தால் பிரதி கண்டு விஷயம்
பரிவுடன் அர்த்தமதை போதனை செய்யும் வேதமும்
திரப்படவே ஜயமுனியின் கொள்கை கண்டுவேருய்
திரபட நீர் சிந்தை தன்னில் சங்கை கொள்வது
முறையோ

10. சுருதிகளின் பொருள் தன்னை உணர்ந்து வேத
வசனம்
சொந்தமுடன் பிரமாண மென்றே ஒத்துக்
கொள்கின்ருேம் அதுபோல்
கருதிய பிரத்யக்ஷ பிரமாணத்திஞல் நாலே விஷயம்
கருதும் என்று வேதவசனமும் பிரமாணமே ஆகும்

11. வேதங்கள் கற்றுணர்ந்ததான விர்பனராம் முனிவர்
போதிக்கவே செய்த சுருதி யென்றறிவீர்
மண்டனரே
வேதங்களை மூல பிரமாண மென்று எண்ணல்
சரியே
பேதபுத்தியுள்ளவரே பிரத்யக்ஷ விஷயங்கொள்வார்

12. பிரத்யக்ஷ விஷயங்களைப் பேசிடுமே வேதம்
போதித்திடும் பதத்தின் அர்த்தம் வேறென்பதும்
உறுதி
புரத்தில் இங்கு ஜீவாத்மா பரமாத்மா தன்னை
உரைத்த சுருதியின் அர்த்தத்தை ஒளித்தே
போதித்ததன்று

13. கர்ம பயன்களை நன்ருய் கருதி புத்தியடையும்
நிர்மல ஆத்மாவில் கர்ம பந்தமில்லை யென்றே சுருதி

அற்புதமாய் போதிப்பதை அறிந்து கொள்வீர்
நன்ருய்
கற்பனை யெல்லாம் மறந்தே கவலையற்றே இருப்பீர்

**14.** ம:- போற்றியே புஜிக்கத்தக்கோய் சாற்றிய
பர ஜீவரேன்
அன்றி புத்தி வேருனதாக சாற்றிய புத்தி ஜடமாம்
பலனை புத்தி அனுபவிப்பான் என்பது எவ்வாறு
சரியாம்
விர்பனரே வீணுய் இங்கு ஆக்ஷேபித்தல் தான்
முறையோ

**15.** ச:- உத்தமமாம் உபநிடங்கள் உரைத்தே முறையாம்
புத்தியே வினைப்பயனை அனுபவிப்பது என்றுமே
நித்திய பிரம்மமே சாக்ஷி ஆகவே இருக்கும் என்றும்
சத்துவ மென்னும் பதம் தான் ஜீவாத்மாவைக்
குறிக்கும்

**16.** க்ஷேத்திரயக்ஞன் என்று சொல்வதும்
பரமாத்மாவையே குறிக்கும்
பாத்திரமாம் மூன்றவஸ்தைகளில்
நேத்திரமாய் விளங்கும் பரன்

**17.** ச:- மெத்தவும் கற்றுணர்ந்த மேன்மையாம் பண்டிதரே
உத்தமோர் கனவுதனை காண்பதுவே சித்தமாகும்
மித்தையாம்தேகத்தில் அபிமான முள்ளவன் ஜீவன்
உத்தமனே க்ஷேத்ரக்ஞன் நாம் என்றே சுருதியும்
உரைக்கும்

**18.** ம:- ஒப்பு உவமை அற்றவரே உரைத்த வேதவாக்கியம்
சொப்பனத்தைக் கண்ட ஜீவன் எவ்வாறு
சாற்றிகிர்க்கும்

தப்பறவே க்ஷேத்திரயக்ஞன் என்பதனால் இங்கு
சர்வக்ஞன் ஆன பரமாத்மா வென்றே சாற்றி
நிற்கும்

## 174. விருத்தம்

தேகத்தை அபிமானித்துத் திகழ் விசேஷணங்கள் உற்று
மோகத்தை உற்ற ஜீவன் முற்றிலும் ஈசனுகான்
ஏகமாய் எங்கும் நின்று இலங்கிடும் ஆகாயம் போல்
பாகமாய் பரவி நிற்போன் பகர்வதோர் ஈசனுகும்

## 120. பாட்டு

" வஞ்சகமாம் இவ்வுடலை " — என்ற மெட்டு
தெம்பாங்கு கண்ணிகள்

1. புத்தியோ ஜடமதாகும் புரிந்த கர்ம வினையதனை
மெத்தவும் புஜிக்கு மென்றே ஐயனே
ஒத்துக் கொள்வதெப்படியோ மெய்யனே (புத்தி)

2. தத்தாய பிண்டமென திகழும் புத்தி விருத்தி மிக
சித்தின் சம்பந்தத்தினால் புத்தியும்
உத்தமனே அனுபவிக்கும் மெத்தவும் (புத்தி)

3. இருளும் ஒளியும் ஒன்றாய் இருப்பதுண்டோ சமமாக
மருவும் கர்ம பலமே புஜிக்கும் வனும்
பரமாத்மாவும் வேறாகும் ஐயனே (புத்தி)

4. காடக சுருதி இங்கு கருதிய அபேதந்தன்னை
கூடகமாக உரைத்தே இருப்பதை
போதனே நன்றாய் அறிவீர் (புத்தி)

5. தத்துவமஸி வாக்கியத்தால் சார்ந்த பேதம் நீங்கி இனி
உத்தம பொருள் உரைக்கும் அத்வைத
வஸ்து மயமாகி இருப்பீர் இனிமேல் (புத்தி)

6. இப்படி இருவர்களும் இணையின்றி வாது செய்து
தப்பற இருக்கும் போது மண்டனர்
மாலை வாடக்கண்டனர் சபையோர் (புத்தி)

7. இந்தவிதம் வாதுசெய்ய இருவர்களுக்கும் சாக்ஷியாக
சிந்தை மகிழ்ந்தே இருந்தாள் ஸரஸ்வதியும்
செய்யும் வாதத்தைக் கண்டு ஸரஸ்வதியும் (புத்தி)

8. யதி சக்ரவர்த்தியாக இருக்கும் சங்கரர் மொழியை
மதித்து ஆமோதித்து விட்டார் சபையோர்
மண்டனரும் கண்டு கொண்டார் கருத்தில்
மாலை வாடியதனை (புத்தி)

9. கண்டு ஸரஸ்வதியும் களிப்புடனே இருவர்களை
பண்புடனே பிக்ஷை செய்ய வருவீர் என்று
பகர்ந்து நின்றார் தேவியும் (புத்தி)

10. பிக்ஷை செய்து இருவர்களும் பிரியமுடனே இருக்க
அக்ஷணம் ஸரஸ்வதியும் பணிந்து
பக்ஷமாய் ஒரு வார்த்தை சொல்ல சங்கரரிடம் (புத்)

11. துர்வாஸர் சாபத்தினால் நான் தோன்றினேன்
தொல்லுலகில்
ஸர்வக்ஞரே உம் ஜயத்தால் எந்தனைச் சார்ந்த
சாபம் போனதென்றாள் (புத்தி)

12. சத்குணத்தில் சிறந்தவரே சத்குருவாய் எழுந்தவரே
உத்த என் சொந்த இடத்திற்கேகியே
உத்தமா செல்கிறேன் என்று சொல்லவே (புத்தி)

13. அம்மொழியைக் கேட்டவுடன் அன்புடன்
சங்கரரும் அப்போ
நிம்மதியாய் இவளை ஜயிக்க ஆனந்தமாய்
நினைத்தார் அகமதினில் சங்கரர் (புத்தி)

14. வன துர்க்கா மந்திரத்தால் வளமுடன் பந்தித்தவர்
தனது மத கல்விக்கும் அதிஷ்டான
தேவியாய் இருப்பதற்கே நண்ணியே (புத்தி)

15. இவ்விதமாய் சங்கரரும் இயம்பிய மொழியைக்கேட்டு
ஒவ்வ ஒண்ணு ஆனந்தம்கொண்டு
சாரதா தேவியும் மதித்து நின்றாள் (புத்தி)



சங்கரருக்கும் மண்டனருக்கும் சம்பாஷணை
என்ற எட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

விருத்தம்—24] [பாட்டு—15.



# ஒன்பதாவது அத்தியாயம்



### 175. விருத்தம்

மண்டனர் உடனே நன்றாய் மகிழ்ந்துமே வாது செய்து
மண்டலம் புகழ எங்கும் மாசற்ற சர்வக்ஞ தத்துவம்
கொண்டிட வேண்டுமென்றும் குறை எல்லாம் தீர்ந்த தென்றும்
எண்டிசையும் கொண்டாட இலங்கினர் யதீசர் அப்போ

### 176. விருத்தம்

சங்கர குருவின் யுக்தி சார்ந்த வேதத்தின் சாரம்
சங்கைகள் தீர நன்றாய் சாற்றியே நின்ற போதம்
தாங்கியே கர்மமார்க்கம் தழுவும் பண்டிதர் தமக்குள்
சங்கைகள் தீர்ந்திடாமல் சந்தேகம் கொண்டு உரைப்பார்

## 121. பாட்டு

" பரிஹாஸம் ஏனோ மாயா " — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : ஸிந்துபைரவி

1. யதிராஜனே நீர் கேளும் என்னாளும் என்னை ஆளும்
புதிதான தோல்வி யெனினும் புனிதா வருந்தேன்
நானும்

2. ஜயமோங்கும் ஜயமுனியின் திகழ்ந்தோங்கும்
வாக்கியமது தான்
பயனற்றதாகுமோ தான் பரிதாப மாகுதய்யா

3. முக்கலங்கண்ட முனிவர் மூதறிந்தோரில் முதல்வர்
எக்காலும் நன்மை புரிந்தே எல்லார்க்கும் உரைக்கும்
பெரியோர்

4. அர்த்தங்கள் அற்ற அநேகம் அழகான சூத்திரமெழுதி
அற்புதமாக அன்பர்க்கரைவாரோ ஐயா உரைப்பீர்

5. புத்தியில் மெத்த சிறந்த பண்டிதரே நானுரைப்பேன்
முக்கியமாக முனிவர் உரைத்த கருத்து வேறும்

6. அறிஞர்களாலும் அறியா அற்புதமாம் உள் கருத்தை
அறியும்படிக்கு உரைப்பேன் ஐயா சந்தேகம்தவிர்ப்பீர்

7. கண்டதே காட்சியென்றும் சிலர் கொண்டதே
கோலமென்றும்
உண்டதே மோக்ஷமென்றும் உலகர்க்கு
உண்டானதே என்றும்

8. அவர்களைக்கண்டு இரங்கி அரைந்தார் சத்கர்மமதனை
எவராகிலும் இங்கு உண்மை எளிதாய் அறிவார்
அதனை

9. வேதத்தை நன்றாய் அறிந்தும் விதியாக யக்ஞம் புரிந்தும்
சாதகமாகும் தான தர்மம் தவங்கள் செய்தும்
10. பண்டிதரே நீர் கேளும் பாங்காய் உரைப்பேன்நானும்
மண்டலமெங்கும் புகழும் மகத்தான மார்க்கமாகும்
11. கர்மம் புரிந்த ஜீவன் நிர்மலமாகி உள்ளம்
பிரம்மத்தை யறிவான் என்றே ஜயமுனியும் உரைத்தார் அன்றே
12. சாஸ்திரார்த்தம் வேறதாகும் வேதார்த்தம் வேறதாகும்
பார்த்தே உரைத்து வேதக்கொள்கை மறுத்தார்முனியும்
13. அத்துவைத வஸ்து வதனை அழகாகவே தாம் உரைத்தும்
நித்திய கர்மம் புரிந்தால் நிகழும் அவற்றின் பலனும்
14. என்றே வேதங்கள் உரைக்கும் அதனை அறிவீர் நின்றும்
அறியும் படிக்கு உமக்கே அரைவோம் திருஷ்டாந்த முடனே
15. சரியாய் அறிந்து சிந்தை தெளிந்து இருப்பீர்தானே
கங்கையில் சென்று ஸ்நானம் செய்தே மகிழ என்றே
16. தாங்கியே மார்க்கமதிலே ஸ்நானங்கள் செய்து வருவர்
சித்தத்தில் கொண்ட எண்ணம் சீரான காசியன்றோ
மெத்த ஸ்தலங்கள் செல்லினும் சித்தம் கங்கையில் அன்றோ

## 177. விருத்தம்

உய்யவே வேதம் நன்றாய் உரைத்ததோர் அகண்டாத் மாவை
மெய்யனே கூறுகின்ற தென்பது சரியாம் எனில்

கையில் கனியதென்ன கர்மமே பலனளிக்கும்
தெய்வம் வேறில்லை யென்று செப்பியதேன் முனியும்

## 122. பாட்டு

" ஆரியனுய் வந்தய்யம் அகற்றிய " — என்ற மெட்டு.

கண்ணிகள்

1. கற்ற பெரியோரே முற்றும் உணர்ந்த நீர் கழல்வது
சரியோ
கர்த்தன் அன்னியில் கர்மபலன் கிட்டுமோ
கருத்தில் அறியாத தேனே

2. கர்த்தாவாம் ஈசனை வேதங்களிலும் அனுவாதம்
செய்கின்றது
அர்த்தமறியாமல் ஐயங்கொண்டால் நீரும்,
எப்படி உய்கிறது

3. உத்தமமாகும் உபநிஷதுரைக்கும் ஜயமுனி
மொழிக்கும்
சற்றும் பிசகில்லை என்பதை யறிந்து சங்கை
யெல்லாம் ஒழிக்கும்

4. இந்த ரகஸியம் அறியாமல் கற்றோரும் மெத்த
ஏமாந்தார்கள்
சிந்தை தெளிந்தோர் சிறப்புடன் அறிந்து சிலாகித்து
ரைத்தனர்கள்

5. தத்துவ ஞானியாம் ஜயமுனி உத்த கருத்தை
யறியாமல்
பித்தரைப் போலவே பிதற்றுகின்றார் சிலர்
பேணிடுவாரோ அதை

6. கோட்டான் சமூகங்கள் கூட்டமாய் கூடியே
கதிரவன் ஒளியை
நாட்டமுடன் நாம் மறைத்து விட்டோமென்றால்
மறைத்திடுமோ ஒளியை

7. சங்கரர் மொழியைக்கேடு சபையோர்கள்
சங்கையெல்லாம் விடுத்தார்
பங்கஜாஸனியும் பண்டிதரும் மிகப் பார்த்து
மனமகிழ்ந்தார்

8. மண்டனரும் தன் குருவாம் ஜயமுனியை மனதில்
தியானம் செய்தார்
பண்புடன் பண்டிதர் பக்கத்தில் மாமுனி
பாங்குடன் வந்து நின்றார்

9. கண்டவுடனவர் புண்டரீக பாதம் போற்றி
பணிந்துகொண்டார்
கொண்ட சந்தேகத்தைக் கோதரச் செய்திடவேண்டும்
என்றவர் விண்டார்

10. புத்தியில் சிறந்த உத்தமனே நான் உரைப்பதைக்
கேட்டிடுவாய்
மெத்தவும் பெரிய சூத்திர பாஷியம் எழுதிய
கர்த்தனிவர்

11. மெத்தவும் சத்தியமாகும் இவர் மொழி என்று
அறிந்துகொள்வாய்
சித்தத்தில் கொண்ட என் அபிப்பிராயமும் சிஷ்யனே
இதுவே என்றார்

12. சர்வ மதங்களும் சதுர் வேதங்களும் சகல
சாஸ்திரங்களும்
நிலத்தில் இவர்போலே அறிந்தோர் இல்லையென்றே
அறிவீர்

13. எந்தன் குருவாகும் வேத வியாசமுனி விளம்பிய
சூத்திரமோ
பந்த மகற்றிடும் பிரம்ம சொரூபத்தை பேணி
உரைத்திடுமே

14. அந்தக் கருத்தை அறிந்துகொண்ட யான்
அந்நியமாக இங்கு
சொந்தமாய் சூத்திரம் சொல்லுவேனே நீர் தெரிந்து
கொள்ளாததேனே

15. எத்திக்கும் கீர்த்தி பெற்றவரே நான் இயம்புவதை
அறிவாய்
இத்தரை தன்னில் முக்தி யளிக்கவே வந்தோரென்றே
அறிவாய்

16. சம்ஸார ஸாகரம் தன்னில் அமர்ந்துமே தத்தளிக்கும்
ஜீவரை
நிம்மதியளித்து நிர்மலஞ்ஞானம் தரும் நிர்குண
மூர்த்தி இவர்

17. சந்தேகம் வேண்டாம் சமரஸ பாவமாய் சரண
மென்றே பணிவீர்
சிந்தை தெளிந்து சீக்கிரமே நீரும் சிந்தை நன்றாய்
தெளிவீர்

18. கிருத யுகந்தன்னில் கபில முனியாகத் தோன்றியவர்
இவரே
சுருதிகள் அளித்த தத்தாத்திரேயராக திரேதா
யுகத்தில் உதித்தார்

19. வேதார்த்தம் போதிக்க வேதவியாஸராக த்வாபர
யுகத்தில் உதித்தார்
பேதம் அகற்றிட சங்கரராக கலியுகத்தில் உதித்தார்

## 178. விருத்தம்

இவ்வாறாய் மண்டனருக்கு மதிமிக உரைத்து மிக்க
உவ்வா தானந்தம் கொண்டு உள்ளம் பூரித்து உகந்து
அவ்விடம் விட்டு அந்தர் தியானமதாகினின்றாய்
செவ்வையாய் சென்று விட்டார் ஜயமுனி ஜெயமது ஓங்க

## 123. பாட்டு.

" மானே பல்லாங்குழியாடவா " — என்ற மெட்டு

தாளம் : திருச்ரம்] பல்லவி [ராகம் : செஞ்சுருட்டி

ஜயமுனி உரைத்ததை அறிந்தாரே மெத்த
சிந்தை தெளிந்தவரும் மகிழ்ந்தாரே

சரணம்

1. ஐயமெல்லாம் அகற்றி ஆத்ம ஞானம் போதித்து
கையில் ஆமலகம் போல் கருத்தை யெடுத்துரைத்து
உய்யும் வழி ஈதென்று உள்ளமதைக் கரைத்து
மெய்யனே மேதினியில் மேன்மையாக உதித்து
மெய்யன்பு கொண்டு இங்கு வந்தீரே எனக்கு
ஐயனே அபயம் தந்தீரே (ஜயமுனி)

2. ஒப்புவமை அற்றவரே இப்புவிக்குக் காரணரே
செப்ப வொண்ணாததான தேசிகனாய் வந்தவரே
ஸ்வபிரகாசமாய் விளங்கும் ஜோதிர்மய மானவரே
இப்பார் முழுதும் ஜயமோங்கும் பரமேசுவரரே
அப்ரமேயானந்த போதகரே கடக்க
உமது பாதம் தேசிகரே (ஜயமுனி)

3. அக்ஞான இருளகற்றும் ஆத்ம பிரகாசகரே
மெக்ஞானத்தாலே மதவாதியை ஜயிப்பவரே
விக்ஞானமான மகா வாக்கிய உபதேசகரே
சுக் ஞானத்தால் பாரென்று சூக்ஷ்மம் உரைத்தவரே
பிரக்ஞானம் பிரம்மமென்று உரைப்பவரே அருள்
ஞானத்தால் என்னை யாட்கொண்டவரே (ஜயமுனி)

4. வெவ்வேறு உலகம் சென்று வேணபடி போகம் உண்டு
செவ்வையாய் புஜிப்பதுவே சிறந்த முக்தியென்றுசிலர்

அவ்விதமாக இங்கு அகமிகக் கொண்டார்கள்
எவ்விதத்தில் கொள்வார்கள் உத்தமமாம் சுருதியை
கவ்விய மாயையைக் கடந்தோர்கள் [இதை
கருத்தில் அறிந்தே மகிழ்வார்கள் (ஜயமுனி)

5. பேதவாதிகளுக்கு இங்கு பேசிட முக்தி தன்னை
சோதித்தறிந்து உந்தன் போதம் திகழ் மொழியாம்
வேதாந்த வாக்கிய மதை விமலாத்ம முக்தி தரும்
போதானந்த பிரவாகம் எங்கும் பெருகி வரும்
வேதனையற்ற முக்தி அதுவாகும் [என்று
சோதனை செய்து அறிந்ததாகும் (ஜயமுனி)

6. அவித்தையாம் அரக்கி தன்னை அதமாகச் செய்து மன்பு
அன்பர்களுக்கு அன்புடன் ஆத்மஞானம் போதிக்க
பவித்தீர் உலகமதில் பரமகுருவாய் இங்கு
பரமாத்ம தத்துவத்தை பாங்காய் பகர்ந்தவருக்கு
கவி சக்ரவர்த்தியாக திகழும் உம்மை [நன்றாய்
கர்த்தனே புகழுவது மிக அருமை (ஜயமுனி)

7. ஏது மறியாது சுத்த பேத மதியினாலே
ஏதோபிதற்றினேன் என்பிழையை பொறுத்தருளுவீர்
ஸாதுவே உம் மகிமை சாற்ற எளிதோ என்னால்
ஸகல ஜீவர்க்கும் இதம் சாற்றவே வந்தீர் முன்னால்
போதனை செய்த பொருள் அறிந்து கொண்டேன்
வேதனை யாவும் துறந்து நின்றேன் (ஜயமுனி)

8. திங்களை ஒத்தமுகம் மண்டலத்தில் இருந்து
மங்கள வாக்கியமெனும் மதுரசமாம் கிரணம்
எங்கும் பொழிந்திடவே இடையறவே இருந்து
துங்க ஞானம் நிறைந்து தொந்தரவெல்லாம் இழந்து
கங்குல் பகலரவே இருக்கையினால் [இனி
காணுமோ காணாத கபில மதங்கள் (ஜயமுனி)

### 179. விருத்தம்.

போன ஜன்மங்கள் தன்னில் புரிந்த ஸத்கர்மமெல்லாம்
ஆனதிவ் வடிவமாக ஐயனே அருள் மிகுந்து
ஞானமாம் விசாரத்தாலே நான் மதிபெற்றேற இன்று
இனமெல்லாம் தவிர்த்தேன் ஈசன் நீராகுமென்றூர்

### 180. விருத்தம்

ஐயனின் சங்கத்தாலே சாந்தமாம் மூளையுண்டாகி
ஐயனின் சங்கத்தாலே தமமென்னும் துளிர் துளிர்த்து
ஐயனின் சங்கத்தாலே வைராக்கிய அரும்புமாகி
ஐயனின் சங்கத்தாலே பொறுமையாம் கொடியும் வீச

### 181. விருத்தம்

ஐயனின் சங்கத்தாலே அருள் எனும் மலர் மலர்ந்து
ஐயனின் சங்கத்தாலே சமாதான மதுவையுண்டு
ஐயனின் சங்கத்தாலே சிரத்தையாம் பழமும் கண்டேன்
ஐயனின் இக்குணங்களெல்லாம் அணிகலம் நீரேயாவீர்

### 124. பாட்டு

" நீ ஜாக்கிர நிலே " — என்ற மெட்டு

தாளம் : திருபுடை] பல்லவி [ராகம் : கல்யாணி

கருணை கடாக்ஷ பிரவாகத்தில் மூழ்கினோர்
பாக்கியமே பாக்கிய மய்யா

அனுபல்லவி

அருளுவீர் அன்புடன் அமரர்க்கும் புருஷார்த்தம்
அனிர்த ஜடத்துக்கும் ஸம்ஸார பெந்தம் நீக்கும் (கருணை)

சரணம்

1. மண்ணையும் பொன்னையும் பெண்ணையும் பேணினோர்
மாயா பந்தத்தில் விழுவார்
புண்ணியசாலிகள் புனித வாக்கிய
மதுவைப் பருகி மகிழ்வார்
திண்மையாம் ஞானத்தால் தீய ஞானத்தை
துலைத்தே புகழ்வார் பெறுவார்
கண்ணியனே உமதிடம் கேட்ட அர்த்தங்களை
கம்பீரகமாய் முத்து மாலையாய் அணிவார் (கருணை)

2. உங்கள் உபதேசத்தால் உலகினில் மானிடர்
உள்ளத்தில் உறுதி கொள்வார்
மங்கள மாகவே மகத்துக்கள் மனமிப்போ
மகிழ்ந்து பூரித்துக் கொள்வார்
தங்குமா இனி தூய துஷ்ட மதங்களெல்லாம்
தானே ஒளித்து கொள்வார்
எங்கள் வாக்கியத்தினுல் இங்கு எழுந்த நீ சங்கரர்
சத்குரோ சரணம் கொண்டோர் மகிழ்ந்தோர் (கரு)

3. சங்கர சத்குரோ உம்மை சந்ததம் நினைப்பதே
சார்ந்த கற்பக விருக்ஷமாம்
சங்கர சத்குரோ தாளினைப் பணிவதே
சார்ந்த நந்தவனமாம்
சங்கர்பத்துடன் உம்மை சந்ததம் பூஜிப்பதே
சந்தோஷ கற்பகக் கொடியாம்
மங்கள குணங்களை மண்ணில் உரைப்பதுவே
மாசகற்றிடும் தெய்வ கற்பகத் தருவாம் (கருணை)

4. புத்திரனுடன் மனை புகழ் செல்வம் பத்தினி
அத்தனையும் துறந்தேன்
உத்தமனே உந்தன் உபய திருவடியே

உகந்து நான் தினம் பணிந்தேன்
அத்தனே அடியேனை யாளும் கருணை கூர்ந்து
அன்புடன் தயை மிகுந்து
இத்தரையில் நீரே உற்ற துணை எனக்கு
இனி ஒன்றும் நான் வேண்டேன் ஏகப்பொருள் நீரே
(கருணை)

## 182 விருத்தம்

இந்தவாருக அப்போ இணங்கி மண்டனர் உரைக்க
அந்தமா வாக்கியங் கேட்டு அனுக்கிரகம் செய்ய வென்று
சுந்தர குணம் நிறைந்த தூய சத்குருவும் நன்ருய்
சிந்தையை அறி அன்னை ஸரஸ்வதி தன்னைப் பார்த்தார்

## 125. பாட்டு

" இனிமொழியே மயிலென்னயே " — என்ற மெட்டு.
கண்ணிகள்.

யதிகளில் சிறந்தவரே எங்கள் குல நாயகரே
துதிபெறும் உம் உள்ளமதை அறிவேன் தயாபரரே
எதிர்கால வாழ்க்கை யெல்லாம் இன்னபடியென்று எனக்கு
பதிதனிலே ஏகி முன்னுள் பகர்ந்தார் தபோதனர்கள்

முடுக்கு

கேட்டபடி உம்மிடத்தில் கிலேசமறவே உரைப்பேன்
நாட்டமுடன் கேட்டு நீரும் நன்மையுடன் அனுக்கிரகிப்பீர்
(பல்லவிபோல்)

1. வாட்டமுடன் விளையாடி இருக்கும் போது
கூட்டமாக கூடி அங்கு வந்தார் மகான் மிக
2. மின்னல் ஒளிபோல் ஜடையும் விபூதிருத்திராக்ஷங்களும்
இன்னிலந்தன்னில் இரண்டாம் இரவியோ எனவே
வந்தார்

3. அன்புடன் உபசரித்து அர்க்கிய பாத்தியம் கொடுத்து
அன்னையும் அடிபணிந்து அன்புடனே கேட்கலுற்ருள்

4. புத்திரியின் எதிர்காலத்தை விஸ்தாரமாயெடுத்து
அத்தனையும் விளங்கும்படி அரைந்திடுவீர் என
உரைத்தாள்
உத்தமியும் கேட்டிடவே உகந்து முனிவரெல்லாம்
மெத்தவும் தியானத்தமர்ந்து சித்தம் மகிழ்ந்தே
உரைப்பார்

5 வருங்கால வளமையெல்லாம் வகையுடனவர்
உரைத்தார்
பெருமையுடன் பின்னுமொரு ரகசியத்தைக்
கூறலுற்ருர்
அருமறைக் கதிபதியாம் அயர்ந்தானே அவனிதன்னில்
மறையவர் குலந்தன்னிலே மண்டனபேர்
தரித்திருக்கார்

6. புத்தியில் சிறந்ததான உத்தமரே உமது புத்திரி
சித்தம் மகிழ்ந்தே யடைந்து சிறப்புடனே
வாழ்ந்திடுவாள்
புத்திர பாக்கியத்துடனே புகழும் செல்வத்துடனும்
இத்தரையில் இல்லறத்தை இன்பமாய் நடத்திடுவாள்

7. சிலகாலம் சென்று விடவே தீய மதஸ்தர்கள் எல்லாம்
பலவகையாய் பேசி மிக பாஷண்டராய் திரிவார்
உலகின் இயல்பை யறிந்து உமாபதியும் மனமிரங்கி
அலகிலா தேஜஸ்ஸுடனே அவதரிப்பார் மானிடராய்

8. வேதாந்த சாஸ்திரத்தை விஸ்தாரமாய் உரைக்க
பாதசாரியாய் அவரும் பார்முழுதும் யாத்திரை
செய்வார்
பூதலத்தை புனிதமாக்க புண்ணியரும் நினைந்து
கொண்டு
பேதமதவாதிகளை வாதினில் ஜயித்திடுவார்

9. உமது மருமகனும் மண்டனரும் அவருடனே
தமதகத்தில் கர்வத்துடன் சார்ந்தவரும் வாது
செய்வார்
அமர்ந்த சபையோர்கள் காண ஆசிரயம் என்று
உரைக்க
அப்பொழுது ஜயித்திடாமல் ஆரியரை சரண்புகுவார்

10. வாதினில் ஜயிக்கொணுமல் மனைவி மனையைத்துறந்து
பாது காக்க வேண்டுமென்று பரமனடி பணித்து
நிற்பார்
சாதுக்கள் இவ்வாறு உரைத்து சந்தோஷத்தால்
சிறந்து
நீதறவே சென்றனர்கள் சிறப்புடன் அனுக்கிரகித்து

11. சத்துக்கள் மொழிபொய்யாமோ சங்கரரே
உரைத்திடுவீர்
உத்தமர்கள் வாக்கிய மெல்லாம் உண்மை அதன்றி
இருந்திடுமோ
சித்தம் மகிழ்ந்தே இவரும் சிஷ்யனுய் அமர்ந்து
கொண்டார்
அத்தனே உமதிடத்தில் அரைந்திடுவேன் நானு
மென்ருள்

## 183. விருத்தம்

கீர்த்தியில் மிக்கோர் ஆன இவரை நாம் ஜயித்தோமென்றும்
தீர்ந்தது இனிமேல் வாது சிறந்தநோர் ஸந்யாஸத்தை
ஆர்த்திகள் தீர இப்போது அளிப்போமென்றும் எண்ண
வேண்டாம்
பூர்த்தியாய் ஜயிக்கவில்லை புனிதனே என்றுரைத்தாள்

## 126. பாட்டு

"தாயே யசோதா" — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : தோடி

என்னையும் ஜயித்திவரை ஏற்றுக்கொள்ளுவீர் சிஷ்யராக
அன்னவரின் அர்த்த சரீரமல்லவோ சுவாமி

அனுபல்லவி

என்னிலங்களுக்கும் மூலகாரணமானவர் நீரே
என்னினும் உம்மிடம் வாதம் செய்ய ஆவல்
கொண்டேன் ஐயா (என்)

சரணம்

1. மெத்தவும் விநயத்துடன் உத்தமி உரைத்த மொழி
அத்தனையும் கேட்டு அகம் மகிழ்ந்து சங்கரர்
சித்தமதில் சந்தோஷம் கொண்டு சிறப்புடனே
செப்பிடுவார் தேவியிடம் சிறக்க நின்று
இத்தரையில் பெண்மணியே உன்னுடனே யான்
வாது செய்தால்
சத்துக்கள் ஒப்பிடுவாரோ சரியாகுமோ உரைப்பாய்
(என்னை)

(பல்லவிபோல்)

2. வாது செய்ய நீயும் கொண்ட ஆவலது வீணதே
ஸாதுக்கள் இம்மொழியைச் சார்ந்து கேட்க
வொண்ணதே
சகல மதங்களையும் ஜயித்து தன் மதம் தன்னை
நிகிலத்தில் நிலை நாட்ட எண்ணங் கொண்ட நீர்
அகமதில் சந்தேகம் ஏனோ ஐயனே
ஆண் என்றும் பெண் என்றும் வேற்றுமை ஏனோ

அக மகிழ்ந்து யாக்ஞ வல்க்கர் அன்று கீர்த்தியுடன்
நன்றாய்

அரசர் சபையில் வாதுசெய்தாள் அவள்
பெண்ணல்லவோ (என்)

3. இந்த விதம் யுக்தியுடன் சுந்தரியாளும் உரைக்க
அந்த மொழி கேட்டு ஆனந்தங்கொண்டு சிறக்க
மந்தகாசத்துடன் சங்கரர் மறைக்கதிஷ்டானமாம்
தேவி தன்னுடனே

அந்த சபையிலமர்ந்து அறிஞரும் யாரும் பேண
அன்புடன் இருவர்களும் வாதித்திட எண்ணம் பூண
(என்னை)

## 184. விருத்தம்

ஒருவருக் கொருவர் தம்முள் ஓங்கியே ஜயிக்கவென்றே
உறுதி தம்முள்ளம்கொண்டு உணர்வுடன் வாது செய்தார்
இருவர் தன் வாக்கில் நின்றே எழும்பிய அமுத தாரை
விரும்பியே சபையோர் உண்டார் விருந்து நம் செவிக்கு
என்றே

## 127. பாட்டு

"கேசவா கேசவா" — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: மோகனம்

இவர்களுக்கு இணையாக எவ்வுலகங்களிலும்
இல்லையென்றே உரைத்தார் சபையோர் எல்லாம்
இன்பத்தினுல் பூரித்தார்

அனுபல்லவி

அவர்களுடைய வாதம் அழகாய் பதினேழுநாள்
எவரும் மெச்சிட நன்றாய் இருந்ததுவே அன்னுள்
(இவர்)

சரணம்

1. வேதங்களாலும் வேத அங்கத்திறைலும் நன்ருய்
வெற்றிகொள்ள வொண்ணுது என்று அறிந்து மாது
தீதகன்ற சந்நியாசி ஆகையினுல் இப்போது
திகைக்கும்படி காம சாஸ்திரத்தால் ஜயிப்போம்
அப்போது (இவர்)

2. சாரதையும் இப்படி தன்னுள் தீர்மானம்
கொண்டாள்
சீருடன் சங்கரரை ஜயிக்க ஆவலும் கொண்டாள்
மாரனுடைய கலை எவ்வளவு என்று விண்டாள்
தீர அவைகளின் சொரூபம் ஏதென்று கேட்டாள்
(இவர்)

3. சுக்ல பக்ஷத்திலும் கிருஷ்ண பக்ஷத்திலும்
அக்கரையுடன் ஸ்திரீகள் புமான்களிடத்திலும்
மிக்கப் பெரியவரே மிகவும் அவனிருக்கும்
தக்க இடம் தன்னை சாற்றிடுவீர் மேலும் (இவர்)

## 185. விருத்தம்

நாமகள் மொழியைக் கேட்டு நாதனும் சங்கைகொண்டு
காமசாஸ்திரத்தை யன்றே கழறுகின்ருள் இவள் இங்கு
நேமமாய் சந்நியாஸத்தில் நின்று ஆனந்தம் கொண்ட
நாமிதை நவில்வது எவ்வாறு என்றுமே திகைத்து நின்ருர்

## 128. பாட்டு.

" பண்டித மோதிலால் " — என்ற மெட்டு

தாளம் : ஏகம்] பல்லவி [ராகம் : செஞ்சுருட்டி

சங்கரரும் தம்மகத்தில் சஞ்சலங்கொண்டார்
ஒன்றும் தோன்ருமல் நின்ருர்

அனுபல்லவி

இங்கு நாம் இவளுக்கு பதில் இயம்பிடாதிருப்போ
மானல்
பங்கமல்லவோ சபையோர் பழிப்பாரே நேரில்
யாரும் சிரிப்பாரே பாரில் (சங்கரரும்)

தொகையரு

இதற்கு நாம் பதில் உரைத்திடில் இலங்கிடும்
ஆசிரம தர்மத்திற்கிது இழுக்கன்றோ அன்றோ
எதற்கும் நாம் நன்றாய் யோசித்து
செய்வது நன்மைதான் அன்றோ அன்றோ
பதர்க்கு நிகராகும் இக்காம நூல்தன்னை நாம்
பாமரர்கள் போலவே பகர்வது பிசகன்றோ
அன்றோ
இதற்கு ஒரு மாதம் நீ ஈந்திடுவாய் தவனை
தானென்றூர் என்றூர் (சங்க)

அனுபல்லவி

சங்கரர் உரைத்த மொழி ஸரஸ்வதியும் கேட்டு மிக
சங்கை தீர சரி ஈதென்று சாற்றியே நின்றாள்
நின்றாள்
சந்தோஷமும் கொண்டாள் கொண்டாள் (சங்கர)

தொகையரு

சரியென உரைத்தபோது சங்கரரும் சந்தோஷித்து
பரிவுடன்சிஷ்யரெல்லாம் பார்த்துமே இருக்கும்போது
இருக்கும்போது
பரமனும் அவ்விடம் விட்டு ஏகிடவே வேண்டுமென்று
பாங்குடன் எண்ணம் கொண்டார் — கொண்டார்
உரிய யோகத்தினலே உடலத்தை அங்குவிட்டு

உத்தமனும் உயர்ந்து சென்றார் — சென்றார்
பெரிய ஆகாயம் தன்னில் பிரேமையாய்
பிரபுவும் சஞ்சரித்தார் (சங்கர)

அனுபல்லவி

இப்படி வரும்பொழுது இலங்கிடும் ஓர் கானகத்தில்
ஒப்பில்லா மாதர் அழும் குரலது கேட்டார் —
அழுகுரலது கேட்டார்

தொகையரு

மந்திரிகள் புடைசூழ மன்னனும் மண்ணில் உயிர் துறந்து
மண்மீது கிடப்பதை மகத்குருவும் கண்டார் — கண்டார்
விருத்திரனைப் போன்ற இவன் இராத்திரியில் வேட்டையாடி
இளைப்பினால் இறந்தனன் இங்கு என்றார் — என்றார்
சுந்திரப் பேர் அமருகனும் சுகமுடன் மங்கையர்கள்
மனமகிழ
சுதந்திரமாய் வாழ்ந்து வந்தான் என்றார் — என்றார்
இந்திரியங்களை அடக்கி இலங்கிடும் சங்கரரும்
இவ்விதம் கண்டதை சனந்தனரிடம் சாற்றி நின்றார் (சங்)

அனுபல்லவி

யோக ஸித்தியினால் அரசன் தேகத்தில் புகுந்து நானும்
போகத்தை புசித்து இங்கு ஏகுவேன் கண்டாய் —
ஏகுவேன் கண்டாய்
வாது செய்குவேன் நன்றாய் (சங்கர)

தொகையரு

சங்கரரின் மொழியதனை ஸனந்தனரும் கேட்டு நன்றாய்
சர்வக்ஞரே நீரும் சார்ந்தறியாதது உண்டோ, உண்டோ
உங்கள் மேல் அன்பினால் உரைத்திடும் மொழியதை
உத்தமனே உற்று நீர் கேட்க வேண்டும் — வேண்டும்
துங்கமா முனியதாகும் மச்சேந்திரர் என்ற யோகி

சென்றனர் சிஷ்யர் தன்பால் தேகத்தை ஈந்து —
முன்னாள் முன்னாள்
சிங்காதனத்தில் சிறப்புடன் அமர்ந்து சிற்றின்ப போகம்
புஜித்து
தேகத்தை மறந்தனர் அந்தோ, அந்தோ, அந்தோ (சங்கர)

அனுபல்லவி

குற்றம் மிக நிறைந்த அந்த சிற்றின்ப போகந்தன்னை
கற்ற பெரியோரே நீரும் கருதுதல் நன்றோ
கருதிடல் நன்றோ
குருநாதனே இன்றோ (சங்கர)

## 186 விருத்தம்

பக்தியில் சிறந்த பத்ம பாதரும் இவ்வாறாக மெத்தவும்
கொண்டு மொழிந்ததை அறிந்து நன்றாய் [பிரேமை
உத்தம குருவும் மிக்க உகந்து பூரித்து உள்ளம்
புத்திசாலியே நீ இங்கு புகன்றது உண்மை என்றார்

## 187. விருத்தம்

ஆயர் பாடியினில் கண்ணன் அநேகம் கோபியர் சூழ
நேயமாய் லீலை செய்தான் நீ அறியாததுண்டோ
தூய நல் யோகம் பெற்று தூசரும் நிலையுற்றோர்கள்
மாயையில் மயங்கி வீணாய் மதியிழப்பாரோ சொல்லாய்

## 129. பாட்டு.

" கண்ட உடன் என் உள்ளம் " — என்ற மெட்டு

தாளம் : த்ருபுடை] பல்லவி [ராகம்: ஸகானா

திருச்ய விஷயங்களை ஜயித்து இருப்பவரை
சிற்றின்பம் வசம் செய்குமா பத்மபாதா

அனுபல்லவி

திருக் வடிவமாகி சிறந்த யோகத்தை மேவி
திகழ்ந்திடுவேன் நான் தாவி திகைக்க வேண்டாம்
வீணுகி (திருச்ய)

சரணம்

1. சங்கர்ப்பமே சர்வ காமனையும் உண்டாக்கும்
சங்கர்ப்ப மற்ற எனக்கெங்கே துன்பத்தை காட்டும்
சங்கர்ப்பமே ஸம்ஸாரம் என்றறிந்த பேருக்கும்
சங்கடமில்லை யென்ருல் சந்தேகமேன் உமக்கும் (திரு)

2. உண்மை உணராமல் உடலை நானென்று எண்ணி
உலக விஷயமதில் உழலுவார் மிகவும் நண்ணி
திண்மையான ஆத்ம ஞானமில்லாமல் மண்ணில்
திகழும் விதி விலக்கும் திகைக்கச் செய்திடும் பண்ணி
(திருச்ய)

3. ஜாதி வர்ணுசிரம தர்மம் கடந்த அந்த
ஜோதி சொரூபமாக ஜ்வலிக்கும் நிலையை சொந்த
நீதிலா சின்மய சித் ஸொரூபமாய் அந்த எந்த
போதிலும் இருப்போர்க்கு பொருந்துவதில்லை பந்தம்
(திருச்ய)

4. புண்ணிய பாவங்கள் பற்ருது ஞானியை
புத்தியில் சிறந்த நீ புரிந்து கொள்வாய் இவ்வேளை
கண்ணியமுடன் இவ்வுடல் இங்கு விடில் வேளை
கேடற காம சாஸ்திரம் கற்று வருவேன் நானே (திருச்)

## 188. விருத்தம்

பரமஹம்ஸரும் இவ்வாருய் பலவிதமாய் உரைத்து
சிறப்பதாம் கிரியை கண்டு சிகரத்தில் ஏறி நின்ருர்
பரிவுடன் சிஷ்யர் தன்னை பக்கத்தில் அழைத்துரைப்பார்
உரியதோர் இடமிதாகும் உற்று நீவிர் இருக்க

## 130. பாட்டு

" திமிக்கிட திமிக்கிட " — என்ற மெட்டு

தாளம் : ஆதி] [ராகம் : கனடா

கண்ணிகள்

1. உத்தம சிஷ்யர்களே ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம்
உகந்து நீங்கள் வசிக்கத்தகுந்த இடமிதாகும்

2. இந்த உடலை இங்கு ஈந்து செல்குவேன் இன்று
சொந்தமுடன் பாதுகாத்திருப்பீர் நின்று

3. தாமத மன்றியிலே காம கலையைக்கற்று
நேமமுடன் வருவேன் நீங்கள் இங்கே இருப்பீர்

4. யோக சக்தியினலே ஸ்தூல தேகத்தை இங்கு
வேகமுடன் விடுத்து ஏகிவிட்டார் அங்கு

5. லிங்க சரீரத்துடன் நிமிஷத்தில் அமருகன்
அங்கத்தினுள் புகுந்தனர் சங்கரரும் தம்முள்

6. உயிர் இழந்த அரசன் உடல் மார்பிடம் தன்னில்
அயர்வில்லாமல் சலனம் அடைந்ததை அங்குகண்டார்

7. சிறிது நேரத்திற் கெல்லாம் சிறக்கக் கண் விழித்தனர்
அரசனும் அற்புதமாய் அன்புடன் எழுந்தனர்

8. முகத்தில் காந்தி நிலவ மூச்சுக் காற்றுப் பரவ
ஜகத்தில் யாவரும் போற்ற திவ்விய சக்தி திரவ

9. பகலவனைக்கண்ட பங்கஜம் போலவே
அகம் மகிழ்ந்து அவர்கள் அங்கு துன்பம் போகவே

10. மன்னனைக் கண்டவுடன் மங்கையர்கள் மகிழ்ந்து
இன்னலெல்லாமகன்று இருந்தார் மனம் உகந்து

189. விருத்தம்

மன்னன் உயிர் பெற்று எழுந்தான் மண்ணினில் என்று
உன்னிதமாக வாத்திய கோஷம் ஒலித்து நின்று
முன்னிலும் அதிகமாய் முகவிலாசத்தைப் பார்த்து
அன்னவர் அழகைக் கண்டு அமைச்சரும் அகம் மகிழ்ந்தா

ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

விருத்தம்—21] [பாட்டு -10

# பத்தாவது அத்தியாயம்.

## சங்கரர் அமருக ராஜன் உடல் புகுந்து உயிர் பெற்று எழுதல்

190. விருத்தம்

விப்ரர்களும் மந்திரிகளும் மேன்மையாய் மன்னருக்கு
விளங்க சத்கர்மப் செய்து
இப்புவியோர் கொண்டாட யாவரும் புடை சூழ
இலங்கும் யானையின் மீதேறி
ஒப்புவமை இல்லாமல் ஒலிக்க வத்தியங்கள் ஊர்
எங்கும் கீர்த்தி மேவ
எப்பொழுதும் போலவே இறைவனும் நகர் சுற்றி
ஏகினன் அரண்மனைக்கே

## 131. பாட்டு

" பொன்மானுக்கு ஆசைப்பட்டு " — என்ற மெட்டு

காவடிச்சிந்து

1. பட்டினத்துக்குள் பிரவேசிக்கவே
பந்து வர்க்கங்கள் கண்டுகந்தார்
மட்டற்ற ஆனந்தம் கொண்டு மிக
மற்றுள்ள மன்னர்களும் மகிழ்ந்தார்

2. இந்திரன் போலே இருந்து அரசாட்சி
சந்தோஷமாகவே செய்தார்
மந்திரிமார்களும் மகிமையைக் கண்டு
சிந்தை மகிழ்ச்சி கொண்டார்

3. கவிச்சக்ர வர்த்தியும் புவிசக்கரவர்த்தியாம்
காட்சி யளித்து நின்றார்
புவியில் இது மெத்த புதுமை என்றெல்லோரும்
போற்றி புகழ்ந்து நின்றார்

4. மன்னன் செயல்எல்லாம் முன்போல்இல்லையென்று
மந்திரிமார்கள் அறிந்தார்
அன்னவரின் அருமை குணங்கள் கண்டு
யாவருமே புகழ்ந்தார்

5. ஏராளமான பொருளை யயாதி
மகாராஜனைப் போல் கொடுத்தார்
தாராளமாக சகலரிடத்திலும்
தயை மிகக் கொண்டிருந்தார்

6. சகலர் கருத்தும் அறிந்துரைப்பதில்
பிரஹஸ்பதி போலிருந்தார்
அகமதில் துஷ்டரை வெல்வதிலே மிக்க
அர்ச்சுனன் போல் சிறந்தார்

7. சம்புவோ என சகலரும் கண்டு
சந்தோஷம் மிகக் கொண்டார்
இப்புவியோர்கள் இயற்றிய பாக்கியம்
எல்லோரும் புகழ்ந்தார்

8. மாதமும் மாறி பொழிந்திடவே மரம்
மலர்கள் நிறைந்திடவே
மாதாவாம் பூமியும் மெத்தவும் பலன்களை
மகிழ்ந்து கொடுத்தாளே

9. அசுபங்களற்று அங்கு குடிகளும்
ஆனந்தமாய் இருந்தார்
பசுக்களும் பால்களை ஏராளமாகவே
பாங்காய் பொழிந்திடவே

10. காலம் கலியுகமாக இருந்தும்
கலியும் வலிமையற்றான்
சீலம் நிறைந்த திரேதாயுகம் போலவே
சிறக்க யாவரும் பெற்றார்

11. மன்னன் மகிமைகளைக் கண்டு மந்திரிகள்
தன்னுள் ஒன்று நினைத்தார்
இன்னவர் சிறந்த யோகியர்யென்று
உன்னி நன்றாய் அறிந்தார்

## 191. விருத்தம்

மந்திரிமார் ஒன்று சேர்ந்து மந்திராலோசனை செய்து
தந்திரமாக இந்த உடலத்தில் தங்கி நிற்கும்
சுந்திர யோகியற்கு துலங்கும் மற்றுடலதுண்டு
அந்த மாவுடலைச் சென்று அணுகாமல் காக்கவேண்டும்

## 192. விருத்தம்

ரகஸியமாக சுற்றி இசைய அங்குள்ள பேரை
விரைவுடன் சென்று நீங்கள் யோஜனை சிறிதும் இன்றி
இறந்தோர் உடலைக் கண்டால் எரித்திட வேண்டுமென்று
பலத்த கட்டளையிட்டு போகவே விடையளித்தார்

## 132. பாட்டு

ராகம்: நீலாம்பரி] கண்ணிகள்.

1. அரசாங்க வேலைகளை அமைச்சரிடம் அமைத்து
அரசனும் அந்தப்புர அணங்குகளிடம் சென்றார்
2. மங்கையருடன் கூடி அங்கம் பூரித்திடவே
மங்களமாக போகம் புஜித்தார்
3. வாத்ஸியாய முனிவர் வரைந்த நூலை அறிந்து
ஆத்மானந்தம் அடைந்த ஆதிகுரு விரைந்து
4. மன்னன் வேஷத்தில் நின்ற மகத்குருவாம் சங்கரர்
உன்னிதமான ஒரு உகந்த நூலையும் செய்தார்
5. யதி சக்ரவர்த்தியும் இன்பமாய் பெண்களுடன்
துதி செய்ய அங்கிருந்தார் சுகமாக
6. சிஷ்யர்களுக்குக் கொடுத்த காலமும் மீறிடவே
சிஷ்யர்கள் மனம் நொந்தே ஈதுரைப்பார்
7. மாதம் ஒன்றானதே நாதன் வரவில்லையே
கேதம் மிகுந்ததே அதிகம் நாள் ஐந்தும் ஆச்சே
8. மாதம் ஒன்றில் வருவேன் மயங்கவேண்டாம் என்ற
நாதன் மொழியும் மீறிப்போனதின்றே
9. அதிகம் ஐந்தாறு நாள் ஆச்சுதே என்ன செய்வோம்
கதிஏது புவியினில் கிலேசம் எப்படித் தீர்வோம்

10. சொந்த உடலைப் பெற்று உகந்து முன்போலவே
வந்தருள் தருவாரோ வள்ளல் கருணையாலே.
11. என்ன செய்குவோம் இனி எங்கு தேடுவோம் சென்று
அன்னவரை அறிந்து அன்பாய் சொல்பவர் யாரே.
12. கருணைக் கடலாம் குரு கைவிடுவாரேயானால்
தருணம் அறிந்தருள தரணியில் யாரே உளர்.
13. துறவிக்கரசை நாமும் தொழுது பணிவோமாகில்
அருவிபோல் கருணை வந்து எய்தும் பாரில்.
14. திருவடி மலர்தன்னை தியானித்திருப்போமாகில்
மறுபடி பிறவோம் நாம் மண்ணில் என்றார்.
15. தொல்லை எல்லாம் தொலைத்து துன்பம் எல்லாம் துடைத்து
எல்லையில்லா இன்பம் அவர் தியானம் என்றார்
16. தக்க மருந்து அவர் தியானமல்லால் வேறில்லை
மிக்க யாவரும் சேர்ந்து துதிப்போம் என்றார்.

## 193. விருத்தம்

அனைவரும் ஒன்று சேர்ந்து அவரவர் மனதிலுள்ள
அனைத்தையும் உரைத்து மிக்க ஆயாசம் கொண்டு நிற்க
இனியும் நாம் துன்பம் கொள்ள வேண்டுமென்பதில்லை ஆசான்
நினைவினை மனதில் எண்ணி நீர் நிலம் எங்கும் செல்வோம்.

## 133. பாட்டு

"மாயையின் லீலையிலே" — என்ற மெட்டு

கண்ணிகள்.

1. பத்மபாதர் அறிந்தார் அங்கு பக்தர்கள்
மிக்கப்படும் துயரமதை பத்ம பாதர் அறிந்தார்

2. தோழர்களே கேளுங்கள் வீணாய் பாழான
துன்பத்துள் பட்டுழல வேண்டாம்

3. பஜித்திடுவோம் குருவை இனி தியஜித்திடுவோம்
மன துன்பங்கள் யாவையும் (தோழர்)

4. மாறு வேஷத்துடனே இந்த மானிலமெங்கிலும்
சீருடன் தேடுவோம் (தோழர்

5. ஸ்வர்க்க மத்திய பாதாளம் எங்கிலும்
மிக்க விரைந்து செல்வோம் இனி (தோழர்)

6. முயற்சி பலனளிக்கும் நாமும் முயன்று செல்வோம்
பயனடைவோம் சத்தியமே (தோழர்)

7. ஐயன் வசிக்குமிடம் மாதம் பெய்யும் மும்மாரி
முக்காலம் செழிக்கவே (தோழர்)

8. அவர் வசிக்குமிடத்தில் ஆதி வியாதிகள் ஒன்றும்
அணுகாத அடையாளம் (தோழர்)

9. அந்தணர்கள் வேதத்தை அனுதினம் சந்தோஷமாய்
கானம் செய்வார் மிக்க (தோழர்)

10. சாஸ்திர விசாரத்தினால் மிக்க ஸாதுக்கள்
சந்தோஷமாக வசிப்பார்கள் (தோழர்)

11. சம்சார சாகரத்தைத் தாண்ட சத்குருவின்
பாததூளி அணையாகும் (தோழர்)

12. காலம் வீணாக்கிடாமல் நாமும் கருதியே
செல்வோம் கர்த்தனைக் கண்டிட (தோழர்)

## 194. விருத்தம்

இவ்வாறு பத்மபாதர் இயம்பிய மொழியைக்கேட்டு
அவ்வாறு செய்வோமென்று அனைவரும் ஒன்றுசேர்ந்து

செவ்வையாய் உடலைக்காக்க சிலரை அங்கிருத்தி விட்டு
ஒவ்வொரு ஆனந்தம் கொண்டு உத்ஸாகத்துடனே
செல்வார்.

## 134. பாட்டு.

"கேட்டான் க்ஷேமாங்கதன் வாட்டம்" — என்ற மெட்டு

1. காடுமலைகளும் வனங்கள் வனாந்திரம்
தேடி அலைந்து வந்தார் — மனம்மிக
வாடி மெலிந்து நின்றார்

2. தேசாதி தேசங்கள் சென்று அலைந்தும் தம்
தேசிகனைக் காணாமல் — மிக்கவும்
மாசடைந்தே நொந்தனர்

3. மாட மாளிகையும் கூட கோபுரமும்
கொண்ட ஓர் தேசம் கண்டார் — அவர்கள்
நாடி அதற்குள் சென்றார்

4. அமராபுரியோ அளகேசன் வாழும்
இடமோ என்றச்சம் கொண்டார் — அமருக
அரசன் பதியைக் கண்டார்

5. அங்குள்ள யாவரும் அரசன் குணங்களை
அற்புதமாய்ப் புகழ்ந்தார் — கேட்டு
அங்கம் பூரித்துகந்தார்

6. கேட்டார் மொழிகளை கிலேசமெல்லாம் விட்டார்
நாட்டம் மனதில் கொண்டார் — குருநாதனைக்
காண தேட்டமும் கொண்டார்

7. ஆசிரியர் வாழுமிடம் இதுதான் என்று
அகத்தில் தைரியமும் கொண்டார் — அன்பாய்
கூசாமல் அங்கு சென்றார்

8 கானம் கேட்பதில் மிகப்பிரியம் என்பதைக்
கருத்தில் அறிந்து கொண்டார் — களிப்புடன்
கானம் செய்யவே சென்றார்

9. தாரா கணங்கள் சூழ்ந்த சந்திரன் போலே
சீராய் மங்கையர் சூழ — அரசனும்
ஆனந்தத்தால் மகிழ

10. சப்த ஸ்வரத்துடன் தாளம் தப்பாமலே
சந்தோஷமாய் மங்கையர் — கானம்
செய்ய மன்னனும் நின்றார்

11. ரத்தின கிரீடமும் முக்தாபரணமும்
மெத்தவும் சோபையுடன் — உற்ற வெண்
கொற்ற குடை விளங்க

12. கண்டார்கள் சிஷ்யர்கள் காருண்ய மூர்த்தியை
கொண்டார் ஆனந்தம் தம்முள் — அவர்கள்
கொண்டாடியே நின்றனர்

13. முண்டனம் கொண்ட சிரஸ்ஸினில் ரத்தினகிரீடம்
இலங்கக் கண்டார் — அவர்கள்
கொண்டாடி மகிழ்ந்து கொண்டார்

14. விபூதி அணிந்த லலாடத்தில் கஸ்தூரி
திலகமணியக் கண்டார் — மெத்தவும்
விபுவை ஸ்துதித்து நின்றார்

15, ருத்ராக்ஷம் பூண்ட கழுத்தினில் உத்தம
முத்துவடத்தைக் கண்டார் — மிகவும்
உத்து நோக்கி மகிழ்ந்தார்

16. தண்டு கமண்டலம் கொண்ட கரத்தினில்
செங்கோலியங்கக் கண்டார் — ஜொலிக்க
தொண்டர்கள் கண்டுகந்தார்

17. காவியாடை அணிந்த இடையில் ஸ்வர்ண
பீதாம்பரமும் கண்டார் — மனமும்
மேவி பூரித்துக் கொண்டார்

18. பாதுகை கொண்ட பாத பத்மத்தில் வீர
கண்டாமணியும் கண்டார் — ஸாதுக்கள்
சந்தோஷம் மிகவும் கொண்டார்

19. காமனை வென்றதோர் காருண்ணிய மூர்த்தியும்
காமன் வசத்தில் நின்றார் — கலங்கி
சிஷ்யர் பிரமித்து நின்றார்

20. யதி சக்ரவர்த்தியும் புவி சக்ரவர்த்தியாய்
எதிரில்லா காட்சி தந்தார் — யாவரும்
துதித்து எதிரில் நின்றார்

21. அனங்கனே இங்கு அவதரித்தான் என்று
யாரும் பிரமித்திடவே — அணங்குகள்
மனமும் களித்திடவே

22. காயகர் போலவே ஆடை அணிந்தவர்
அரசன் சபையில் வந்தார் — சிஷ்யர்கள்
ஆயாசமற்று நின்றார்

23. அரசனும் ஜாடையால் அளித்த ஆசனத்தில்
அன்பாய் அமர்ந்து கொண்டார் — ஆச்சரியம்
அவர்கள் மனதில் கொண்டார்

24. யாரும் பிரமித்திட அற்புதமாய் கானம் செய்ய
அவர் நினைந்தார் — சபையோர்
ஆமோதித்து மகிழ்ந்தார்

## 195. விருத்தம்

அரசனின் ஆக்ஞையாலே அமர்ந்தனர் ஆசனத்தில்
பரிசு பெற்றிடவே வந்த பாடகர்போல் எல்லோரும்
வரிசையாய் அமர்ந்து கொண்டார் வகையுடன்
யாரும் காண
துரிதமாய் பாடலுற்றார் அகமுடன் வண்டை நோக்கி

## 135. பாட்டு.

" ப்ரோச்சேவா எவ்வரு" — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம்: கமாசு

வண்டே என் மொழி கேள் — வண்டே,
வண்டே, வண்டே

அநுபல்லவி

பண்டு பழகிய நின் தொண்டர்களைப் பிரிந்து
பாலைவனம் தன்னிலே பறந்திடுவது ஏனோ (வண்டே

சரணம்

1. இனத்தவரைப் பிரிந்து வனத்தையும் நீ துறந்து
கனத்த துயரம் தந்து கலங்க வைத்தது ஏனோ
(வண்டே)

2. அடர்ந்த வனம் தனிலே வளர்ந்த மரமதிலே
மலர்ந்த மலரிலுள்ள மதுவை புஜித்திடாமல்
(வண்டே)

3. உந்தன் வரவை எதிர்பார்த்து — பார்த்து மிகவும்
நொந்து சிந்தை அயர்ந்தோம் — வந்தோம்
உந்தனைக் காண (வண்டே)

4. பஞ்ச பாணன் கலையை பாங்குடன் கற்பதற்கு
தஞ்சமென்றோரை விட்டு சஞ்சாரம் செய்குறாய் நீ
(வண்டே)

5. அன்ன பானங்களற்று அரன் திரு பூஜையற்று
துன்பக் கடலையுற்று சுழல்கிறோம் கதியற்று(வண்டே)

6. தத்துவம் இருபத்தினாலும் கடந்ததான
தத்துவமே எங்களை உத்து எங்களை காப்பாய்(வண்டே

7 நிறைமதி போன்ற முகம் விரைவினில் நாங்கள் காண
வருகுவீர் முன் கொண்ட மாசற்ற உடலை மேவி
(வண்டே)

8. காமனை எரித்த நீர் காமன் வசப்பட்டு
சேமமெல்லாம் இழந்த நெறி என்ன சொல்லுவீர்
(வண்டே)

## 196. விருத்தம்

கல்யாணி :

முந்திய தேகம் தன்னை முற்றிலும் மறந்ததேனு
இந்த தேகத்தில் நீரும் இருப்பது சரியதாமோ
உந்தனை அன்றி எங்கள் குறையிடம் சிறிதும் உண்டோ
எந்தையே ஏழை சொல்லை எண்ணி நீர் பார்ப்பதாமே

## 197. விருத்தம்

காம்போதி :

உருவமன்று ரூபமன்று ஒளிபெறும் பொருளுமன்று
பருவமாய் பகருகின்ற பலகலை நூலுமன்று
நிருபமான வேதம் நிகழ்ந்திடும் நேதி செய்து
ஸ்வரூபமாய் விளங்கும் நத்தும் பொருளாகும் தாங்கள்
என்றூர்

## 198. விருத்தம்

ஆனந்த பைரவி :

உன்னியே உமியை நன்றாய் உலக்கையால் குத்தும்போது
மன்னிய அரிசி தன்னை மாசற அடைவதேபோல்
அன்னமயாதி கோசம் அடங்கலும் பிரித்தபோது
தன்னிலே தோன்றுகின்ற தத்துவம் தாங்களாகும்

## 199. விருத்தம்

அடாணு :

பெறிகளும் பரிகள் தன்னை போகத்துள் செல்லொட்டாமல்
அறிவுடன் கடிவாளத்தை அன்புடன் இழுத்துச்செல்வோன்

அறிவுற்ற தீரனாக ஐயன் புலன்களை அடக்கி
திறமுடன் நிற்கும் அந்த தத்துவம் தாங்கள் ராஜன்

200. விருத்தம்

நாதநாமக்கிரியை :

மூன்றவஸ்தையும் கடந்து முற்றிலும் உபாதி நீக்கி
சான்ற எப்பொருளும் தாண்டி சாக்ஷி மாத்திரமாய் எஞ்சி
ஊன்ற ஓர் இடமும் இன்றி உள்வெளி சுற்றிலங்கும்
ஆன்ற தத்துவம் அறிஞர் அறிந்தது தாங்களாகும்

201. விருத்தம்

தன்யாசி :

பொன்னை அல்லாமல் வேறு பூண்டிடும் பணிகள் உண்டோ
இன்பமய வடிவை அன்றி திகழ்ந்திடும் பொருள்
வேறுண்டோ
மன்னனே பரமாத்மாவை மகிழ்வுடன் அறிந்து கொண்டால்
தன்மயமாய் நிறைந்த தத்துவம் தாங்கள் ராஜன்

202. விருத்தம்

பைரவி :

அண்டத்தில் கண்ட யாவும் பிண்டத்தில் உள்ளதென்று
கண்டவன் ஞானி ஆவான் கசடெல்லாம் தவிர்த்-
தோன் ஆகி
விண்டதோர் வேதம் கற்ற விற்பனரான விப்ரர்
கொண்டதோர் பொருளதான தத்துவம் தாங்கள் ராஜன்

203. விருத்தம்

கமாசு :

நித்திய கர்மம் வேள்வி நியமமாய் செய்து வேத
தத்துவம் தனை உணர்ந்து தான தர்மங்கள் செய்து

சித்தமே சுத்தி பெற்று திகழும் அந்தணர்கள் அல்லால்
உத்த தத்துவம்தேதோ அது தாங்கள் ஆகும் ராஜன்

## 204. விருத்தம்

மத்தியமாவதி :

சமதம குணம் நிறைந்த ஸத்குண ஞான தீரன்
அமர் தரும் சம்சாரத்தை அகற்றியே அகத்தில் நன்ருய்
தமர் மனை சுற்றம் விட்டு ஸச்சிதானந்தமாகி
தாமென அறிந்து கொண்ட தத்துவம் தாங்கள் ராஜன்

## 205. விருத்தம்.

சுருட்டி :

தன்னுடைய விருத்தாந்தத்தை சாற்றவே அறிந்து வேந்தன்
மன்னனும் அவர்களுக்கு மகிழ்வுடன் விடை அளித்து
தன்னிருப்பிடத்தில் சென்று சகலமும் அறிந்து கொண்டார்.
முன்னமே உரைத்த சொல்லை முற்றிலும் நினைத்து நின்ருர்

## 136. பாட்டு

" கோபம் வராதோ " — என்ற மெட்டு.

தாளம் : ருபகம்] [ராகம் : மாயாமாளவகௌளை

பல்லவி

ராஜ உடலைத் துறந்தார் — சங்கரர் யதி
ராஜ உடலை விரைந்தார்

அனுபல்லவி

பூஜிய பாதரும் தான் முன்னிருந்த குகையினுள்
யாஜிக்க சிஷ்யரெல்லாம் அடைந்தார் தன் தேகத்தை

சரணம்

1. அமைச்சன் ஆள்களால் இட்ட அக்கினியால் உடலம்
அழிவதைக் கண்டு அதில் ஆசாரியரும் புகுந்தார்

2. அக்கினியால் வியாபித்த அந்த உடலை பார்த்தார்
அக்கரையுடன் லக்ஷ்மீ நரஸிம்மரை பஜித்தார்

206. விருத்தம்

க்ஷீர ஸாகரத்தை நன்ருய் சிறந்ததோர் இடமாய்க்
கொண்டாய்
பாரதை தாங்கும் சேஷன் தன்னையே பாயாய்க்
கொண்டாய்
நாரதர் முதலாம் திவ்விய யோகியர் சூழ நின்ருய்
பாரளந்தோனே பத்மநாபனே வந்து காவாய்

207. விருத்தம்

பிரம்மனும் இந்திரனும் ருத்திரரும் பிரதி தினம்
போற்றியே பணியும் போதா
தர்ம பரிபாலனம் செய்திடும் பாதத்தில் சதகோடி
கிரீடம் மின்ன
கர்ம பரிபாகமாய் கழல் பணிந்தவர் தன்னை காத்திடும்
கமலநாதா
நிர்மல நிராமய நிமிடத்தில் வந்தருள் ஸ்ரீ லக்ஷ்மீ
நரஸிம்மனே

137. பாட்டு

" பூரண ஞானியவனே " — என்ற மெட்டு

தாளம் : ஆதி] [ராகம் : ஸிம்மேந்திர மத்திமம்

பல்லவி

லக்ஷ்மீ நரஸிம்மரே வாருமையா — நன்ருய்
பக்ஷமுடனே கை தாருமைய்யா

அனுபல்லவி

அக்ஷயானந்தம் தரும் நாதா அல்லல் அகற்றும் போதா
கஷ்டம் தவிர்க்கும் நாதா கமல பாதா

சரணம்

1. கோர ஸம்ஸார அரணியத்தில் அலைந்துமே
தீரா துயரத்தால் திக்கறியாமல் நின்றேன்
சீறும் மதங்களென்னும் தீய மிருகத்தால் நொந்தேன்
தீரா துன்பம் தீர்ப்பீர் ஸ்ரீ ஹரே முராரே

2. இருள் அடைந்த ஸம்ஸார கிணற்றினுள்
இடறி விழுந்தேன் அதில் இருக்கும் ஆழம் அறியேன்
மருளும் விஷயம் என்னும் விஷம் கொண்ட அரவம்
தீண்ட
கருகி தவிக்கின்றேன் மாதவா தீன பந்தோ

3. ஸம்ஸாரமாம் பெரும் ஸாகரத்தில் விழுந்து
தத்தளிக்கின்றேன் கரை காணவில்லை பிரபோ
இம்சை செய்யும் ராகாதி முதலைகள் விழுங்கிட
ஈடிலா துன்பம் கொண்டேன் இந்திரை ரமணனே

4. கோடிக்கணக்கான கர்மவினைகள் வேருய்
கோடிக்கிளைகளாய் காரணங்களே கிளையாய்
கோடிக்களிக்கும் காம போகமே புஷ்பமாகும்
கொடுப்பது துன்பப்பலன் கொடிய ஸம்ஸார விருக்ஷம்

5. கோரப் பற்களுடன் சீறிவரும் ஸம்ஸார
ஸர்ப்பத்தைக் கண்டு நான் தாமோதரனே நொந்தேன்
ஆரவாரத்துடனே அரிவாகனத்திலேறி
அமிர்த ஸாகர வாஸா அதிசீக்கிரம் வருவீர்

6. காட்டுத்தீயாம் ஸம்ஸார காட்டில் அகப்பட்டு
கஷ்டம் மிக அடைந்தேன் கம்ஸாரியே கண்பாராய்
வாட்டம் தவிர்க்கும் பாத தீர்த்தத்தில் ஸ்நானம்
செய்து
வணங்கி இருந்திடவே வரம் தருவீர் ஹரே

7. வலை எனவே விரிந்த ஸம்ஸாரத்துள் விழுந்தேன்
அலையும் இந்திரியத்தால் அகப்பட்டேன் விஷயத்துள்
துலைந்தேன் தூண்டினில் பட்டுத் துடிக்கும் மீனது
போலும்
கலைகள் தேடியும் காணக் கண்ணனே காருமையா

8. பயங்கரமாம் ஸம்ஸார யானை விரட்டவே
பாரெங்கும் ஓடினேன் பற்றும் இடம் இன்றியே
அயர்ந்து விட்டேன் இனி யாரும் துணை அறியேன்
யானைக்கு அருள் புரிந்த அச்சுதா அமரேசா

9. இந்திரியமாம் திருடர் இன்னகத்தில் புகுந்து
எடுத்துச் சென்றார் விவேக ஞான ரத்தினம் துணிந்து
தந்திர மோக கோபத்திலே விழுந்து
தவித்திடச் செய்தார் இப்போ எடுத்து விடுவீர்
பிரபோ

10. அன்ன லக்ஷ்மீபதியே அம்புஜ நாபனே
அமரர்க்கதிபதியே ஆதி மஹா விஷ்ணுவே
சின்மயனே வைகுண்ட வாஸனே ஸ்ரீதரனே
திகழும் நீல வர்ணனே ஸ்ரீ மதுசூதனனே

11. பிரம்ம ஸ்வரூபனே பிரபஞ்சாதீதனே
பேராயிரம் கொண்ட பேரின்ப வடிவனே
நிர்மலா கேசவா ஜனார்தன வாசுதேவா
நிகிலேசனே கதி தருவாய் கரம் தேஹி — லக்ஷ்மீ

208. விருத்தம்

சங்கரர் இவ்வாறாக சாற்றிய ஸ்துதியைக் கேட்டு
அங்கதையறிந்து லக்ஷ்மீ நரஸிம்ஹரும் மகிழ்ந்து
இங்கிதமாய் அவருக்கு ஈடிலா காக்ஷி தந்தார்
பொங்கியே எரிந்த அந்த அக்கினி தனை அணைத்தார்

## 138. பாட்டு.

" சொல்லெல்லாம் " — என்ற மெட்டு

**கண்ணிகள்**

1. நரஸிம்ம மூர்த்தியும் அருள் மழை பொழிந்தார்
அரைக்ஷணத்தில் அக்கினி அணைந்திடக் கண்டார்
நிறைமதிபோல் குகைவிட்டவர் வந்தார்
குறை தவிர்த்து சிஷ்யர்கள் ஆனந்தம் கொண்டார்

2. சத்குண மதியாகும் சங்கரர் மகிழ்ந்து
மெத்த நாள் பிரிந்த தன் சிஷ்யரை அடைந்து
சித்தத்தில் ஆனந்தமாகவே புகழ்ந்து
பத்ம பாதர் முதல் பல சிஷ்யர் சூழ்ந்து

3. மண்டனப் பண்டிதர் மனைதனில் ஏக
மார்க்க மாகாயமாய்க் கொண்டனர் போக
கொண்டாடியே மிக குதூகலமாக
கூசாமலே மனைக்குள்ளவர் போக

4. மற்று கவலை எதுவும் மற்று
கர்ம பரிபாகமாய் உள்ளம் பெற்று
அற்ப விஷயத்தில் ஆர்வமுமற்று
நிற்பவரை அங்கு நிர்மலனும் உற்று

5. கண்டனர் பண்டிதர் சங்கரர் தன்னை
விண்டிடா ஆனந்தம் கொண்டார் உடனே
பண்டு செய்த பாக்ய பலன் இதுதானே
தண்டாகாரமாய் பணிந்தனர் உடனே

6. உடல் பொருள் ஆவியும் உமதென்றே உரைத்தார்
திடமுடன் எனையாளும் தீனபந்தோ என்றார்
இடருறும் ஸம்ஸாரம் இனி வேண்டேன் என்றார்
இடம் இனி திருவடி என்றவர் நின்றார்

7. உத்தமருக்கு உபசாரங்கள் செய்தார்
அற்புதமாக ஆஸனமது அளித்தார்
வித்துவான்கள் ஸேவிக்க மெத்தவும் மகிழ்ந்தார்
உத்தமியாள் ஸரஸ்வதி கண்டு புகழ்ந்தாள்

209. விருத்தம்

கலைமகள் நாயகனே போற்றி கருணையாம் கடலே போற்றி
மலைமகள் நாதா போற்றி மகாதேவா போற்றி மாரன்
கலைதனை கற்று வந்த கண்கள் மூன்றுடையோய் போற்றி
தலைவனாய் எங்களுக்காக தரணியில் எழுந்தாய் போற்றி

139. பாட்டு

"அகண்டானு பூதி," — என்ற மெட்டு

தாளம்: ஆதி] பல்லவி [ராகம்: காப்பி

காமனை எரித்த காமேசுவரா சரணம்
காம கலையைக் கற்று கடுகி வந்தீர் தருணம்

அனுபல்லவி

1. எல்லாம் அறிந்த நீரும் இந்நிலத்தவர் போல
சொல்லாமலே யோகத்தால் தோற்றுவித்தீர்
இப்பாலே

2. தெய்வ சக்தியை யாரும் தெரிந்து கொள்ளாதிருக்க
செய்தீர் நீர் திகழ்ந்திடும் யோகசித்தி சிறக்க

3. சாற்றும் சுருதிகள் எல்லாம் போற்றி புகழ்ந்துதினம்
ஏற்றி பணிந்திடுவோம் எங்கள் குருவே மனம்

4. உங்கள் ஜயத்தினாலே எங்களுக்கு இல்லை துன்பம்
திங்கள் ஒளியால் தாராகணங்களுக்கு உண்டோ
துன்பம்

5. பூஜித்தன்பர் பணியும் பூரணானந்தரே
யாசிக்கின்றேன் போக விடையளிப்பீர் நீரே

6. எங்களிருவரையும் எளிதாய் ஜயித்து விட்டீர்
சங்கடங்கள் தீர்ந்தது சரணம் அளித்து விட்டீர்

7. பெண் கொடியாம் சாரதா தேவியும் அப்பொழுது
கண் மறைவாய் யோகத்தால் போக பார்த்த பொழுது

8. புறப்படும் சமயத்தைப் புரிந்து கொண்டார் சங்கரர்
சிறப்புடன் ஒரு வார்த்தை செப்புவார் கிருபாகரர்

9. சதுர்முகன் தேவி என்றும் சம்பு சோதரி என்றும்
சதுர் மறையும் துதிக்கும் சைதன்ய வடிவென்றும்

10. சங்கையற அறிவேன் மங்கள ரூபிணியே
சிருங்கேரி முதலான பீடம் சிறக்க நீயே

11. சாரதா என்ற பேர் தரணி எங்கும் விளங்க
சீரதாய் வாஸம் செய்து செய்விர் அருள் ஓங்க

12. சங்கரர் மொழி கேட்டு சரியென சாரதையும்
அங்கு உரைத்து விட்டு அகன்றுள் அவ்விடம் விட்டு

13 சத்திய லோகத்திற்கு சரஸ்வதியும் செல்ல
மெத்த வியப்படைந்து மிக்க சபையோர் எல்லாம்

14, உத்தம துறவறம் பெற்றார் தன் பதி என்று
உத்தமியும் பூமி தொடாமல் ஆகாயம் சென்று

15. அற்புத நிகழ்ச்சியை ஆதி சங்கரர் கண்டார்
நிற்பயமாய் மண்டனர் நிர்மலானந்தம் கொண்டார்

140. பாட்டு

" ஸத்குரு நாதனைக் கண்டேன் ' — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : தன்யாசி

சங்கரரும் ஆனந்தம் கொண்டாரே - சாஸ்திரப்படிக்கு
சன்னியாசம் கொடுக்க நினைத்தாரே

அனுபல்லவி

சங்கடங்கள் துலைக்கும் துங்க ஞானம் செழிக்கும்
மங்கள மகா வாக்கியத்தை சங்கரர் மகிழ்ந்துரைத்தார்

சரணம்

1. உத்தம சிஷ்யனாகி நின்றாரே — உகந்து பிக்ஷை
அளிப்பீர் என்று யாசித்துக் கொண்டாரே
தத்துவமஸி வாக்கியத்தை சத்குருவும் விண்டாரே
தன்னியனானேன் என்று தன்மயமாய்க் கண்டாரே

2. ஆறு விகார தேகம் நீயல்ல அநித்தியமாகி
அழியும் கடபடம் போல் ஆத்மாவல்ல
பேரும் ஊரும் இல்லாமல் பிறப்புமில்லாமல்
பேதம் பிரிந்த அந்த பிரம்ம வஸ்துவதாகும்

3. அநித்தியமானபொருள் தானல்ல அவைகளுக்
கெல்லாம்
அகன்ற விலக்ஷணமே தானாகும்
தனித்த தடியால் கடம் உடைவது போல ஞானம்
ஜனித்தவுடனே தேகாபிமானம் நாசமாகும்

4. பொறிகளுடன் புலன்கள் தானல்ல பொருந்தச்
அருவிக்கரணங்களும் தானல்ல [செய்யும்
பரிவுடன் பார்கிறேன் பகர்கின்றேன் கேட்கின்றேன்
பாங்காய் நடக்கின்றேன் என்றுரைப்பதாலும்

5. இந்திரிய வர்க்கமும் தானல்ல இதனால் கண்ட
எந்த விஷயமும் ஆத்மாவல்ல
பந்தம் விளைக்கும் அந்த மனமும் ஆத்மாவல்ல
சொந்தமான நிலையை சிந்தனை செய்வீர் மெல்ல

6. புகழும் புத்தியும் இங்கு தானல்ல புத்தி விருத்தியால்
புகலும் பொருள்களும் தானல்ல

அத்தனையும் தானென்று அகங்காரத்துடன் எழும்
அந்த விருத்தியும் ஆத்மா ஆவதல்ல அறிவீர்.

7. இன்னும் அநேக விதம் உரைத்தாரே உகந்து கேட்டு
தன்னகத்தில் தானால் நிறைந்தாரே
சின்மய குரு நாதன் திருவடியில் பணிந்து
தன்யன் ஆனேன் சகல சந்தேகமும் துறந்து.

## 210. விருத்தம்

சத்குரு கடாக்ஷத்தால் சந்தேகமற்றிருந்தனர்
சுத்த ஞானியாகியே சுரேசன் நாமம் பெற்றனர்
எத்திசையும் போற்றவே சத் சிஷ்யனாகி நின்றனர்
சத்திய லோக போதம் சதமன்றென்றே துறந்தனர்.

## 141. பாட்டு.

"கையில் வேலும் தரித்து" — என்ற மெட்டு

கண்ணிகள்

1. மகத தேசம் தன்னிலே மாசகந்த மனதுடன்
சுகமுடன் வாழ்ந்து வந்தார் ஸுரேஸ்வரரும்
அகமகிழ்ந்தே இருந்தார் அனுதினமும்
நிகழ்ந்திடும் நர்மதா நதிக் கரை தன்னிலே அமர்ந்து
மிகவும் சூக்ஷ்மமாய் அர்த்தங்களை
அகண்ட சிரவணமும் செய்தார்

2. மண்டனப் பண்டிதரை மகிமையுள்ள சிஷ்யனாய்
மனமகிழ்ந்து ஏற்றுக் கொண்டார் — பணிந்தவர்க்கு
பிரணவார்த்தம் அங்கவர் விண்டார்
கண்டக மதங்களை கண்டித்திடவென்று
எண்ணமும் கொண்டார் சுகத்தில் பண்புடனே
புறப்பட்டார் புகழ ஜகத்தில்.

3. வண்டுகள் மது உண்டு எண்டிசையும் இனிமை
கொண்டு கானங்கள் செய்யவே கேட்டு சங்கரர்
கொண்டார் ஆனந்தம் உய்யவே மனமதினில்
பண்புடன் ஸத்குரு தென்திசை யடைந்து
வெண்மதிபோல் சிறக்கவே அங்குமஹா
ராட்டிரபுரம் அடுக்கவே.

4. தன் மதத்தை எங்கிலும் தடையறவே ஸ்தாபித்து
அன்னிய மதத்தைக் கண்டித்து ஆதி குருவும்
உன்னித மாகவே வந்தார் உகந்து அவர்
சின்மய ஞானியர் தினமும் களித்திடும் ஸ்ரீ
சைலம் தன்னை யடைந்தார் சிறக்க அப்போ
தன்மய மாகவே நின்றார்.

5. அநேகம் மலர்களாலும் அநேகம் விருக்ஷங்களாலும்
அநேகம் மிருகங்களாலும் விளங்குகின்ற
அழகு ஸ்ரீ சைலத்தைக் கண்டார் ஆனந்தம்
கொண்டார்
கலி தோஷமகற்றிட மலையின் அருகில் பெரும்
அலைகள் மிகவீசவே பரிசுத்தமாம்
பாதாள கங்கையை கண்டார்.

6. கங்கையில் ஸ்நானம் செய்து சங்கரரும் மகிழ்ந்து
அங்கம் மிகவும் பூரித்து ஓங்கி வளர்ந்த
சிகரத்தையும் தரிசித்தார்.
மங்களம் ஓங்கும் மலையினில் ஏரியே
மல்லிகார்ச் சுனரைக் கண்டார் மகிழ்ந்து பிர
அம்பிகையை தரிசித்தார்

7. இருகரை ஓரத்திலும் இலங்கும் மரங்களுடன்
இயற்கையை வர்ணிக்கத்தரமோ துறவிகளுக்கு
இருக்க அதல்லால் ஆகுமோ அனுதினமும்
இருவினைப் பயன்களை இல்லாமல் அறுத்துமே
சொரூப நிலையளிக்கும் இடமிது என்று
இருந்தார் குருபரன் அன்று

8. அடைந்தவர் பல பந்தம் அகற்றியே அருள் செய்யும்
ஆசாரிய மூர்த்தியும் அப்போ தடையற தான்
இயற்றிய பாஷியத்தை போதித்தார்
கடையர்கள் கண்டதோர் கசடமான மதங்களை
கண்டித்து காருண்யத்தாலே கடைக்கண்வைத்து
கார்த்தார் கர்த்தனும் அக்காலே.

9. திக்கெட்டும் கீர்த்தி மேவி திகழும் சங்கரர் தன்னை
மிக்கவும் கேட்டு மதஸ்தர் அநேகம் பேர்கள்
அக்கரையாக வந்தார்கள் அவரை ஜயிக்க
பக்கபலமுள்ள பாசுபதர்களும்
பரம வைஷ்ணவ மதமும் வீரசைவமும்
விரைந்து வந்தார் ஜயிக்கவே.

10. அத்தனை மதஸ்தரை அழகுடன் சுரேஸ்வரர்
அன்புடன் ஜயித்து விட்டார் மற்றும் சிஷ்யரும்
மெத்த மதமும் ஜயித்தார்
சர்வ மதஸ்தரும் கர்வமெல்லாம் இழந்து
நிர்மல மனதுடனே சிஷ்யராகி
தர்ம பிரபுவைப் பணிந்தார்.

11. துஷ்ட புத்தியுடையோர் துஷ்ட செய்கைகள் செய்து
கஷ்ட மதத்தைத் தழுவி காலம் கழித்து
கஷ்டங்கள் மிகவும் கொண்டார்
அவர்கள் தினம் மட்டற்ற மகிமையாய்
மகத் குருவும் அப்போ மாசற்ற
சிஷ்யர் சூழவே திட்டமுடனே
கஷ்டங்கள் அற்று வரவே

12. பட்டபாதர் மதமும் பலமிழந்தது என்றால்
இஷ்டமுண்டோ உரைக்க இனி மதங்கள்
எல்லாம் மிகவும் பிரமிக்க

கருணை சற்று மில்லாமல் கண்ட மதங்களை எல்லாம்
கண்டித்து நின்றார் சங்கரர்
அருணன் ஒளி போல் கொண்டார் அழகு அங்கவர்.

பத்தாவது அத்தியாயம் முற்றிற்று.

விருத்தம்—21] பாட்டு—11].



# பதினொன்றாவது அத்தியாயம்.

## உக்கிர பைரவர் வதம்.

### 211. விருத்தம்

சிறக்கவே ஸ்ரீ சைலத்தில் ஸ்ரீ குரு இருக்கும் போது
அரக்கர் போல் எண்ணங்கொண்டு அன்பர் போல்
வேடங்கொண்டு
நிரக்கத் தான் கொண்ட எண்ணம் நிறைவேற்ற
வேண்டுமென்றே
கரபடிந்துள்ளங் கொண்ட கபாலிகன் அங்கு வந்தான்

### 142. பாட்டு

" பித்தன் என்றாலும் பேயன் என்றாலும் "— என்ற மெட்டு.

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : ஜோன்புரி

முக்குண அதீதனே முனிவர்கதிபனே
துர்குணன் தனிமையாய் கண்டான் அம்மா

அனுபல்லவி

அக்கரையுடன் அன்பர்க்கு அருமை பாஷியம்
போதித்து
பக்குவமாய் நிஷ்டையில் பாங்குடன் இருந்திடும்

சரணம்

1 கண்டனன் கண்டனன் கருணை கடாக்ஷனை
விண்டனன் தான் கொண்ட விபரீதமதனை
அண்ட முனிவரும் தொண்டு செய்யும் பரமனை
தொண்டர்கள் தொழுது எற்றும் ஜோதி சொரூபனை

2. சர்வக்ஞரே உமது சாந்த குணத்தைக் கேட்டு
சரணம் அடைந்தேன் உம்மை சந்ததம் மனம் விட்டு
சர்வ மதங்களையும் ஜயித்து ஒருமைப்பட்டு
சாச்வத நிலைதரும் சமரஸத்துள்பட்டு

3. உலகர்க்கு உதவி செய்ய உடலை எடுத்தவரே
பல கலை படித்த பண்டிதரை வென்றவரே
அலகிலா அன்பரை ஆதரித்து ஆண்டவரே
நலம் பெற நான் வேண்டும் வாழும் ஈந்திடுவீர்

4. இந்த உடலோடு ஏக வேண்டும் கைலாசம்
இன்றுமே இயற்றினேன் தவமோ நூறு வருஷம்
சிந்தை மகிழ்ந்து ஈசன் கொண்டார் மிக சந்தோஷம்
சிவபெருமான் களித்து அளித்தார் அருள் கடாக்ஷம்

5. சந்தோஷத்தால் அவர் சாற்றியதை உரைப்போம்
சர்வக்ஞரே கேட்டு தயை புரிவீர் இப்போ
இந்த உலகம் தாங்கும் இறைவன் சிரம் ஆகிலும்
இல்லையாகில் யதியின் சிரஸ்ஸாகிலும் தா என்றார்

6. அந்தப்படி கொணர்ந்து அக்கினியில் ஹோமம் செய்து
அடையலாம் என்னுலகம் அஞ்ச வேண்டாம் உய்து

இந்தபடி உரைத்து எகினார். அருள் செய்து
கேட்கிறேன் இப்போ ஈவீர் சிரம் கொய்து

## 212. விருத்தம்

மலைமகள் நாதனுக்கு மகிழ்ந்துமே ஹோமம் செய்ய
தலையினை தானம் செய்வீர் தயாபர மூர்த்தியே நீர்
நிலையாக நிற்கும் கீர்த்தி நின் விசுவமுள்ள மட்டும்
கலைகளுக்கரசே என்னைக் கருணை வைத்து அருள் செய்வீரே

## 143 பாட்டு

"தேசிகனே" — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : உசேனி

தலை தாருமையா சத்குண சொரூபனே சர்வக்ஞனே
தா — தலை

அனுபல்லவி

பாருக்குள் உம்மைப்போல் படித்த பண்டிதர்
யாருமில்லை ஒரு பேருமில்லை தா — தலை

சரணம்

1. அநித்தியமான தேகமீதென்று அறிந்து கொண்டீர்
சுகமதினில்
ஜனித்திடாத வழியை சிஷ்யர்க்கு சிந்தை மகிழ்ந்து
உரைத்தீர்
மனித உடலம் எடுத்ததின் பலன்
மற்றவர்க்கு உபகாரம் செய்யவே மனதினில்
வைராக்கியம் கொண்டு
வள்ளலாகியே உள்ளமிரங்கியே தா — தலை

2. போரில் விருத்திராசுரனை வதைக்க புரந்தரன்
மிக ததீசியை யாசிக்க

சிறப்புடன் தன் முதுகு எலும்பைக் கொடுக்க
யாரும் செய்யா பெரும் தியாகம் செய்ய
அவனி தனிலே என்றும் இருக்க செய்தனர்
அது போலவே
நீரும் செய்குவீர் நான் உய்குவேனே தா — தலை

## 213. விருத்தம்

அனேக விதமாய் உரைத்து அவரடி பணிந்து நின்றான்
சினமதை ஜயித்து நின்ற ஸ்ரீ குரு ஈதுரைப்பார்
மனமதில் கவலை வேண்டாம் மகிழ்வுடன் அளிப்போம்
என்று
தனிமையில் இருக்கும்போது விஜாரித்துக் கொள்வீர்
என்றார்

## 144. பாட்டு

" வாக்கு மனதில் எட்டாத வஸ்துவை " — என்ற மெட்டு
தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : சௌராஷ்டிரம்

மெத்தத் தவத்தினில் சித்தியடைந்தோர்
உத்தமரே நீர் கேளும்

அனுபல்லவி

தத்துவ நிஷ்டை தன்னில் சார்ந்துமிருப்பேன் நீரும்
அத்தருணம் அங்கு வாரும்
அபீஷ்டம் நிறைவேறும் வாரும்
அடைகுவீர் ஹரன் பதம் நீரும்

சரணம்

1. யாரும் அறியாமல் யோகியே நீரும் ஏகிடுவீர்
இங்குதானே

சீருடன் நிஷ்டையிலிருந்திடுவேன் சித்தில்
சித்தம்லயித்துமே நானே
பாரில் சிஷ்யர் உம்மைப் பார்த்து விட்டால்
மெத்த பயங்கரமாய்விடும் சொன்னேன்
நீரும் பவ்வியத்துடன் நிற்காமலே வாரும் முன்னே
பறித்துக் கொண்டு செல்வீர் தன்னே
பரமசிவனுக்கு பாத காணிக்கையாய்
பாங்குடன் கொடுத்து பரமன் உலகு ஏகுவீர்.

2. சங்கரர் மொழியை சற்றும் இரக்கமில்லாத கபாலிகன்
கேட்டு
தன்னிருப் பிடத்தில் சென்றான் சந்தோஷமாய்
சந்தேகம் யாவையும் விட்டு
மங்கள ரூபனும் தங்கிய இடத்தில் சமரஸத்துள் பட்டு
எங்கும் நிறைந்ததோர் ஏக சொரூபமாய் ஒங்கும்
தன்னைத் தொட்டு
உற்ற பந்த வினையெல்லாம் சுட்டு
அங்குள்ள சிஷ்யர் யாருக்கும் உரைக்காமல்
சங்கரரும் சமாதியில் இருந்தனர்.

## 214. விருத்தம்.

## சங்கரர் சமாதியில் இருப்பதைக் கண்டு கபாலிகன் வருகை.

---

ஐயனும் சமாதி தன்னில் அமர்ந்ததை அறிந்து கொண்டு
கையினில் சூலம் ஏந்தி மெய்யில் விபூதி பூண்டு
துய்ய வெண் எலும்பு தன்னை துலங்கும் மாலையதாய்
பூண்டு
ஐயம் கொண்டு அகத்தில் ஆரியரிடத்தில் வந்தான்.

## 145. பாட்டு.

" எட்டாத கொம்பில் " என்ற மெட்டு

தாளம் : ஏகம்] பல்லவி [ராகம் : அடாணு

கபாலிகன் வந்தான் காருண்ய மூர்த்தி இருக்கும்
இடந்தனில்

அநுபல்லவி

பாப கிருத்தியம் செய்யும் பாவியின் கண்கள்
சிவந்து கள்ளுண்டு மயங்கி மதி சுற்ற கபாலிகன்

சரணம்

1. நித்திய கர்மானுஷ்டானம் செய்ய சிஷ்யர்கள்
மெத்த துலையில் சென்றார்
உத்தமனும் உடல் தியாகம் செய்ய வென்று
உள்ளத்திலுறுதி கொண்டார்.
பத்ம பாதருக்கு பயந்துமே சங்கரர்
பாங்காய் நிஷ்டை யிருந்தார் பரிவுடன்.

2. பொறி புலன் அடக்கி போதம் திகழவே
பூரணரும் இருந்தார்.
பரிவுடனே பிரணவ தியானம் செய்து
பரத்துள் ஒன்றாய் கலந்தார்
தரிபோல் உடலம் சலியாமலே அவர்
தன்மயமாகும் சித்தானந்தத்தில் இருந்தார்

3. நிர்மலரும் நிர்விகல்ப சமாதியில் நீக்கமற இருந்தார்.
தர்ம பிரபுவும் தம் மூக்கு நுனி நோக்கி
தம் தேகம் தனை நிமிர்ந்தார்.
கர்மிடனை கபாலிகனும் கையில்
கத்தி உருவியே அத்தி செய்ய நின்றான்

4, பக்தி நிறைந்த தோர் பத்மபாதர் ஞான
நிஷ்டையினால் அறிந்தார்

அக்கினி போல் அதி கோபத்துடன் அவர்
ஆரியனை நினைந்தார்
உக்கிர நரஸிம்மரை அவர் தியானித்தார்
அக்கணமே அவர் நரஸிம்மமாய் நின்றார்.

5. யாரும் பிரமித்திட அட்டாட்டகாசம் செய்து நரஸிம்மரும்
சீறி பயங்கர கர்ச்சனை செய்யவே
திகைத்து விட்டார் எவரும்
தீர இரண்ய கசிபுவைக் கொன்றது போல்
கோர நகத்தினால் பைரவனைப் பிளந்தார்

6. இந்த கர்ச்சனையைக் கேட்டு சிஷ்யர்கள்
யாவரும் அங்கு வந்தார்
சிந்தை கலங்கி இறந்து கிடக்கும்
பைரவன் தன்னைக் கண்டார்
மந்தகாசத்துடன் மாசற சங்கரர்
தந்திரமாக இருப்பதையும் கண்டார்.

215. விருத்தம்

அண்டகோளம் பிளக்க அட்டகாசம் செய்ய
அண்டர் கோனும் பயந்து அங்கவர் சஞ்சலிக்க
தொண்டர்கள் பக்தியாய் நிற்கும் தூய சங்கரர் விழிக்க
கண்டனர் கமலபாதர் நரஸிங்க உருவாய் நிற்க.

216 விருத்தம்.

நகங்களால் பிளந்து அந்த பைரவன் மார்பில் நின்று
மிகவுமே பெருகுகின்ற ரத்தத்தால் உடல் நனைந்து
அகமதில் கோபம் கொண்டு உடல் மாலை தனையும் பூண்டு
நிகழ்ந்திடக் கண்டார் செய்வதறியாமல் திகைத்து நின்றார்

217. விருத்தம்.

நரஸிம்ம மூர்த்தே கோபம் நடமுடன் அடக்க
வேண்டும்
சிறியவர் செய்த குற்றம் சிந்தையில் பொறுக்க
வேண்டும்
பரவிய இந்த காட்சி பயங்கர மாகுதந்தோ
நிரம்பிய தத்துவதை கொள்வீர் என்றுரைத்தார்.

218. விருத்தம்.

சிறந்ததோர் தெய்வமாக நிகழ்ந்திடும் உம்மை நித்தியம்
மறந்திடாமனிதராகி மகிழ்ந்து பூஜிப் போர்க்கெல்லாம்
பிறந்திடா பதமளிப்பார் பீதிகள் யாவும் தீர்ப்பீர்
அறிந்து கொண்டோம் ஐயா நின் அற்புத
தரிசனத்தால்

219 விருத்தம்

பங்கஜ பாதம் தன்னை பாவனை செய்தவர்க்கு
அங்கு நீர் அளிப்பீர் முக்தி ஆனந்த வடிவமாக்கி
இங்கு இவன் தங்களாலே எளிதினில் முக்திபெற்றான்
எங்கள் நாயகமே போற்றி இணையடி பணிந்தோம்
ஐயா.

220. விருத்தம்.

முக்குணங்களில் தோன்றி முத்தொழில் இயற்று
கின்றீர்
பக்குவமுள்ள பக்தர் பக்கமே நின்று காப்பீர்
எக்குலப் பிறப்புமின்றி எங்குமாய் நிறைந்ததோர்
ஆவீர்
உக்கிர ரூபம் கொண்டீர் வந்து எனைக்காக்க வென்றே

### 221. விருத்தம்.

மங்கள ரூபம் காண மாயனே ஆசை கொண்டோம்
பங்கஜக் கண்களோடும் பாவையாள் லக்ஷ்மியோடும்
இங்கு நீர் சேர்வை தந்து எங்களைக் காப்பீரென
சங்கரர் உரைக்க முன்போல் சார்ந்து தன்
உருவைக் கொண்டார்

### 222. விருத்தம்.

மெத்த வினயத்துடன் மற்றுமுள சிஷ்யர்கள் மனதினில்
அச்சங்கொண்டு
பக்தன் பிரஹ்லாதன் பக்தினிர்தவசமாகி பெரிய தூணில்
உதித்த
உத்தமனும் உம்முடலில் உதித்ததின் காரணம் உரைத்திட
வேண்டுமிப்போ
பத்மபாதரே என்று பகர்ந்த பக்தரை நோக்கி
பத்மனுபனும் உரைப்பார்

### 146. பாட்டு

கப்பல் மெட்டு

1. சொல்லுகிறேன் கேளுங்கள் தூய
நரஸிம்மமாய் வந்த கதை
சொல்லுகிறேன் கோரரூபம் கொண்ட
அந்த காரணத்தை.
2. பண்டொருநாள் பாலயென்ற பேர்கொண்ட
வனந்தனிலே கொண்டேன்
தவ வேடந்தன்னை தன்னை
நரஹரியைக் காண

3. அந்த வனந்தனிலே அப்போ
வந்தான் ஒரு வேட பாலன்
இந்தவனந்தனிலே எதற்காய்
தவம் இயற்றுகின்றீர்

4. அந்த மொழி கேட்டு கந்து
எந்தன் எண்ணம் எடுத்துரைத்தேன்
அந்தக்ஷணம் ஏகி அவன்
அழகு கொடியாலே சுற்றி

5. கட்டி என்முன் நிறுத்தி விட்டான்
ஏற்றமுள்ள சிங்கம் தன்னை
வேடன் வசம் ஆனதென்னே
என்றவரை கேட்கலுமே.

6. ஏக்கமற எடுத்துரைத்தார்
வென்ற மனதாலே என்னை
விடையுடனே அடைந்து விட்டான்
என்ற வரும் உரைத்து விட்டு.

7. விரைவுடன் மறைந்து விட்டார்
அந்த க்ஷணம் தவம் முடித்து
எந்தை குரு அருள் தன்னை பெற்றிருந்தேன்
பத்மபாதர் உரைத்த மொழி

8. பக்தரெல்லாம் கேட்டு உகந்தார்
பத்மபாதர் கோபம் விட்டு
பரமஹம்ஸ பாதம் போற்றி
நின்றார் பக்தியுடன்

9. இக்கதையைப் பாங்காய்
படிப்பவர் கேட்பவர்கள்
சிரத்தையுடன் வாசிப்பவர்கள்
முக்தி பதம் அடைந்திடுவார்

10. இன்னலெல்லாம் தீர்ந்திடுவார்
நன்ருய் இகபர சுகம் பெறுவார்
பொன்னடி பணிந்தவர்கள்
பெருத்த ஆனந்தம் பெறுவார்

பதினொன்ருவது அதியாயம் முற்றிற்று.

விருத்தம் 12] [பாட்டு 6



# பன்னிரண்டாவது அத்தியாயம்

## அஸ்தகமலர் சிஷ்யர் ஆதல்
## சங்கர பகவத் பாதர் கோகர்ணக்ஷேத்திரம் அடைதல்

### 223. விருத்தம்

கலைக்கதி பதியாய் நிற்கும் காருண்ய மூர்த்தி பின்பு
பல பல சிஷ்யர் சூழ புண்ணிய நதிகள் சூழ
அலை கடல் சூழ்ந்த தான அழகு கோகர்ணம் சென்ருர்
மலைமகள் நாதனுகும் மகாபலே சுவரரைக் கண்டார்.

### 147. பாட்டு

" பெண்ணே ஈசன் சங்கதியை " — என்ற மெட்டு
கண்ணிகள்

1. அயனும் ஹரியும் தினம் அன்புடன் பூஜிக்கும்
அற்புத கோகர்ணம் கண்டாரே
சுயம் ஜோதியாம் குரு சங்கரரும் அப்போ
சொல்லவொண்ணு ஆனந்தம் கொண்டாரே

2. தோன்றிடும் உலக நாடகத்திற்கொரு
சூத்திர தாரியாக விளங்கும்
நேத்திரம் மூன்று உடையவரை பிரபு
ஸ்தோத்தரித்து ஆனந்தம் கொண்டாரே

3. சக்தி சகிதனுக சந்ததம் இருந்திடும்
அர்த்தநாரீஸ்வரரைக் கண்டாரே
பக்தர் புடை சூழ பரமஹம்ஸரும்
பரமானந்தக் கடல்தனில் அமர்ந்தாரே

4. மானை தரித்த வலக்கரமும்
கொஞ்சும் கிளியை தரித்த அந்த இடக்கரமும்
வானையும் வியாபித்த ஜோதி சொரூபமாகும்
வஸ்து நாம் என்று உரைத்தாரே.

5 மாதவியின் மாங்கல்ய சூத்திர மகிமையால்
மகேசன் புஜித்த விஷம் அமுதாக
பேதமகற்றி அபேதமாக நிறைந்த
போத சொரூபமே தானென்றுரே

6. மோகாந்தகாரம் தன்னை ஜெயித்து
முக்குணங்களையும் வேரறுத்து
ஏக பொருளே நாமென்று ஞானிகள் உள
கோகர்ண ஈசரை ஸ்துதித்தாரே

7. மூன்று உலகிற்கும் கீர்த்தி பெற்ற
மூன்று அவஸ்தை அற்ற
சான்றோர்கள் சந்ததம் வசித்திடும் அங்கு
மூன்று தினம் தங்கி அங்கு இருந்தாரே

8. குரு மஹா ராஜரும் பரிவுடன்
தீர்த்த யாத்திரை செய்து வரும்போது
பெருமை மிகவும் கொண்ட ஹரிஹர க்ஷேத்திரம்
தன்னை
பார்த்துப் பரவசம் கொண்டாரே

9. கைலாசமும் வைகுண்டமும் சேர்ந்து
வகையுடன் காட்சி அளிக்கும் ஸ்தலம்
உய்யும் வகை அளிக்கும் உயர்ந்த ஸ்தலம் இதென்று
உள்ளத்தில் உவக்கையும் கொண்டாரே.

10. சைவ வைஷ்ணவ பேதமற்றிட
சங்கர நாராயணரை பூஜித்தார்
கைவல்ய முக்தி தரும் கருணைக் கடலும் அப்போ
கலந்து இருவரையும் ஸ்துதித்தாரே

## 224. விருத்தம்

யாவரும் வணங்க நின்றாய் இந்துவை சிகையில் கொண்டாய்
பூவையாள் மேனி பெற்ற மீன் விழியாளைக் கொண்டாய்
எவரும் போற்றுகின்ற எருது வாகனமும் கொண்டாய்
பாவலர் தினம் பணியும் பரமனே காப்பாய் தானே

## 225. விருத்தம்

மச்சாவதாரம் செய்து மறைந்த வேதாந்தமெல்லாம்
அச்சுதா கொணர்ந்தாய் இங்கு அன்பர் களிக்க வென்று
இஜ் ஜெகத் தோர்கள் உய்ய எளிதினில் காட்சி நல்கும்
சச்சிதானந்தா ஸ்ரீமன் நாராயணா காப்பாய் தாமே

## 148. பாட்டு.

" மண்ணெடுத்து அடிபட்டு " — என்ற மெட்டு
கும்மி

1. ஆலகால விஷம் புஜித்து அமரரைக் காத்த
நீலகண்டா உமது பாதம் போற்றினேன்

வேலைதன்னில் மந்திரத்தைத் தாங்க கூர்மமாய்
கோலங்கொண்ட நீலவர்ணா பாதம் போற்றினேன்

2. ஆடும் அரவை அழகாய் அணியாய் பூண்டாய்
தேடும் அடியார் செல்வமாம் சம்புவே போற்றி
நாடியே துதிக்கும் சேஷன் மேல் சயனித்த
ஈடில்லா வராக ரூபம் கொண்டாய் போற்றி

3. கங்கையை அணிந்த சம்புவே போற்றி
கஜாசுரனைக் கொன்று ஆடையாய் கொண்டாய் போற்றி
சிங்க வடிவாக வந்து இரண்ணிய கசிபுவை
சீக்கிரமாய் மார்பிளந்த நரஸிம்மா போற்றி

4. தக்ஷயக்ஞம் துவம்சம் செய்து தேவியை விட்டு
பக்ஷமாய் தவம் புரிந்த பரமசிவா போற்றி
இஷ்டமுடன் மாபலியிடத்தில் யாசித்து
திட்டமாய் மூன்றடியளந்த வாமனா போற்றி

5. பார்த்தனை ஜயித்து பாசுபதம் அளித்தீர்
ஆர்திகளைத்தீர்க்கும் ஆத்ம நாதனே போற்றி
கார்த்த வீரிய அர்ச்சுனனை முதல்
தீர்த்து ஜயம் கொண்ட பரசுராமனே போற்றி

6. காமனை எரித்த காமேஸ்வரா போற்றி
காமேசுவரியின் பிராண நாதனே போற்றி
பூமகளை கொண்டு சென்ற இராவணன் தன்னை
நேமமுடன் கொன்ற ராமனே போற்றி

7. தத்திமிதோம் என்று தினம் தாண்டவமாடும்
நித்தியானந்தம் அளிக்கும் நிர்மலா போற்றி

உத்தம தாலவிருக்ஷத்தை கொண்டியாய்க் கொண்ட
பக்த பரிபால பலபத்திரனே போற்றி

8. பால கணேசனை பாங்காய் மடியில்
சீலமுடன் கொண்ட சிவ சங்கரா போற்றி
ஆலமுது கொண்டு வந்த பூதனை உயிர்
கோலாகலமாக உண்ட கோபாலா போற்றி

9. ஸர்குரு மூர்த்தியுமாகி சர்வமும் ஆகி
ஸர்வ ஜோதியான சிவ ஜோதியே போற்றி
நிர்விகார வஸ்துவாகி நிர்மலமாகி
தர்ம பிரபுவான புத்த பகவானே போற்றி

10. வாக்கு மனதுக்கு எட்டாத வஸ்துமயமாய்
நீக்கமற நிற்கும் ஸ்ரீ சங்கருக்கும்
காக்கும் கடவுளாம் கல்கி தேவர்க்கும்
தீர்க்க மனதுடன் தினம் போற்றி பணிந்தேன்

11. இவ்விதமாக அநேகம் ஸ்தோத்திரம் செய்து
செவ்வையாய் பூஜைகள் செய்து பூரித்து நின்று
அவ்விடம் விட்டு அப்பொழுது அன்பாய் சங்கரர்
திவ்வியமான மூகாம்பிகை க்ஷேத்திரம் சென்றார்

# சங்கர பகவத் பாதர் மூகாம்பிகை க்ஷேத்திரம் செல்லல்.

---

226. விருத்தம்.

ஏகமாய் எங்கும் தாமாய் இணையில்லா ஜோதியாகி
தாகமாய் அடைந்தோர் தன்னை தன்மயமாக்கி வைக்கும்
பாகமாய் மனமிருந்த பல சிஷ்யர் சூழ ஆசான்
வேகமாய் மூகாம்பிகை க்ஷேத்திரந்தன்னில் வந்தார்

149. பாட்டு

"டாட்டே இடபர" என்ற மெட்டு

கண்ணிகள்

1. வேகமுடனே குரு மூர்த்தியும் மூகாம்பிகா
க்ஷேத்திரந்தன்னை வந்து அடைந்தாரே
சோகத்துடனே இருவர் தனயனை இழந்து
தவிப்பதை சங்கரர் கண்டாரே

2. கருணைக் கடலும் மிகக் கவலைப் படும் பொழுதில்
கருத்திலொன்றும் அறியாதிருந்தாரே
தருணம் அறிந்து அப்போ அசரீரிவாக்கொன்று
தருவதை குருபரன் அறிந்தாரே

3. காப்பாற்றும் சக்தியில்லாதவன் அன்றோ
கவலையில் இப்படி இருந்திடுவான்
காப்பாற்றும் வல்லமை உமக்கு இருக்கும் பொழுது
காலங்கடத்துவது சரியாமோ

4. என்ற இவ்வுரை தன்னை சங்கரர் கேட்கவே
இன்று உன் அருளால் இந்த மகன் பிழைக்க
நன்றாய் அருள் செய்வாய் என்றுமே உரைத்து
நாதனும் அங்கு ஸ்துதித்து நின்றார்

5. இந்த விதம் இவர் உரைத்து நிற்கும் பொழுது
அந்த மகவும் பிழைத்து எழுந்து விட்டான்
வெந்துயர் தணிந்துமே தந்தையும் தாயும்
வந்து சங்கரர் அடிபணிந்து நின்றார்

6. பல பல விருக்ஷங்கள் அடர்ந்து அழகுடனே
பல திசையும் இருக்கக் கண்டாரே
மலமூன்றும் கழற்ற மகான்கள் தவம் செய்ய
பலம் தரும் க்ஷேத்திரத்திற்குள் புகுந்தாரே

7. பக்தி பரவசமாய் பரமஹம்ஸரும் அப்போ
சக்தியை தியானித்து நின்றாரே
உத்தமரும் தம் உள்ளம் உருக கண்ணீர்
மெத்தவும் பெருகவே துதித்தாரே

8. பாதகிரணத்தின் பிரபையினால் பிரபஞ்சங்கள்
போதத்தை அடைந்துமே இருக்குதம்மா
பேதத்தை அகற்றிடும் கிரணமே முன்னூற்றி
அறுபது ஆகவே இருக்குதம்மா

9. சோம சூரிய அக்கினி வடிவுடன்
தாமாய் எங்கிலும் வியாபித்து
தாமதமன்றியே சகலருக்கும் அருள்
க்ஷேமமுடன் செய்திடுவீர் அம்மா

10. அக்கினியின் கிரணம் நூற்றி எட்டு ஆகவும்
ஆதவனுக்கு நூற்றி பதினாறும்
மிக்கவே சந்திரனுக்கு கிரணமோ
மிகுந்த நூற்றிமுப்பத்தாறு ஆகும்

11. அறுபத்திறைு உபசாரங்கள் உடனே உன்னை
நிரம்பிய மனதுடன் பூஜிப்பார்
பெறுவார் பாவனு யோகத்திறுலேயே
அருமையுடன் உன்னை அடைந்திடுவார்

12. விசுத்தியிலும் ஆக்ஞா சக்கரத்திலும் உன்னை
விளங்கவே ஸகஸ்ரார கமலத்திலும்
அசுசியகன்ற அன்பர் அநுதினமும் பூஜிப்பார்
அறுபத்திறைு உபசாரத்திறைல்

13. உத்தமர் உன்னை உள்ளில் உபசரிப்பார்
மத்திமர் உள் வெளியும் பூஜிப்பார்
மெத்தபேர் உன்னை வெளியில் உபசரிப்பார்
அத்துவைதமாய் ஞானிகள் அறிவார்

14. தத்துவக் கலைகளை கடந்து நிற்கும் பாதத்தை
தத்துவ ஞானிகள் பூஜை செய்வார்
முத்தொழிலும் இயற்றும் மூலபொருள் உம்மை
உற்றவர் எத் தொழிலும் புரிவார்

15. உந்தன் அருளை உற்று குரு உபதேசம் பெற்று
சந்ததம் தியானிக்கும் பெருமையினுல்
சிந்தையில் தியானிக்கும் அந்த தெய்வமே தானுய்
பந்தமற பிரத்யக்ஷமாய் அறிவார்

16. ஆருதாரமும் அவைக்கதிஷ்டானமும்
அறிந்துன்னை அன்புடன் பூஜிப்பார்
பேராநந்தத்துடன் புவியில்
போக மோக்ஷங்கள் அநுபவிப்பார்

17. உந்தனை சந்ததம் சதுர்வித ஐக்கியாறு
சந்தானத்துடன் உபசரிப்பவர்கள்
சந்தோஷமாய் உன்னை அடைந்து கலந்தவர்
சதுர்வித புருஷார்த்தங்களும் அடைவார்

18. தேவியை இவ்விதம் ஸ்தோத்திரம் செய்துமே
மேவி பிக்ஷான்னத்தால் திருப்தி கொண்டு
தாவியே வந்த உபாசகர்கள் உடனே
சந்தோஷமாக அங்கு வசித்து வந்தார்

## 227. விருத்தம்

சங்கரரும் தன்னகம் கொண்டனர் ஸ்ரீபலிபுரம் அதைக் காணவென்று
அங்கு தன் சிஷ்யர்கள் அனைவரும் சூழவே அக்கிர காரத்தை சேர்ந்தார்
பொங்கவே ஆனந்தம் கொள்ளவே பூசுரர் புரிகின்ற அக்கினி காரியம்
அங்கு அதைக் காணவே ஆரியர் தன் மனம் பரவசமாக நின்றார்

## 150. பாட்டு

"கோலே நல்ல கோலே" — என்ற மெட்டு

கண்ணிகள்

1. மெத்த இடங்களெல்லாம் குருநாதன் சித்தம் மகிழ்ந்து சென்று
உத்தமமான இந்த அக்கிரகாரம் தன்னை அடைந்து கொண்டார்

2. அக்கினி கோத்திரங்கள் செய்து அந்தணர்கள் வசித்தார்
மிக்க சுத்த தர்மங்களைச் செய்து அதர்மங்களை ஜெயித்தார்

3. வேதாத்தியயனம் செய்தும் வேதத்தில் விதித்த யக்ஞம் செய்தும்
போதம் திகழ்ந்ததான வேதியர் விளங்க இரண்டா யிரமாம்

4. அந்தகாரம் துலைக்கும் அழகுள்ள சந்திரன்போல்
ஜ்வலிக்கும்
சுந்திரமாய் இலங்கும் பரமேசன் சன்னிதானம்
விளங்கும்

5. இப்படி உள்ள அந்த அக்கிரகாரம் தன்னில் ஓர் விப்ரர்
ஒப்பில்லா வித்தை கற்று உலகெங்கும் செப்ப
வொண்ணு கீர்த்தி பெற்று

6. பிரபாகரர் என்ற பேரால் பிரசித்தியால் பேரும்
புகழும் பெற்ருேர்
கிரகத்திலும் அஷ்டலக்ஷ்மி வசிக்கக் கீர்த்தியுடன்
வாழ்ந்தார்

7. அத்தனையும் இருந்தும் அவருக்கு சித்தம் விச்ராந்தி
யின்றி
மெத்த துயரம் அடைந்தார் விப்ரரும் புத்திரனல்
அப்போ

8. பேசுவதும் இல்லை ஒன்றும் புரிந்து கொள்வதும் இல்லை
நேசமான விஷயம் புஜிப்பது மில்லை மனம் பாச
மொன்றிலுமில்லை

9. ஞானிகள் மனம் போலே எப்பொழுதும் தியான
பரனுய் இருப்பான்
ஊனவில் சூரியன்போல் சந்திரன் போல் ஒளியோ
நிறைந்து இருப்பான்

10. பார்த்தவர் இவனுக்கு பிசாசு பிடித்தது என்பார்
பார்க்க வேணும் இவனை. பல மந்திர ஔஷதத்தினல்
என்பார்

11. இவ்விதம் இருந்திடவே அவ்வேளை சங்கரரும் அங்கு
வந்தார்
செய்வையாய் மைந்தன் தன்னை காப்பவர்
இவரெனவே அறிந்தார்

12. மைந்தனை அழைத்துக் கொண்டு மகத்தான காணிக்
கை கொண்டு
ஐயனே குருவே என்று சங்கரரின் அடிபணிந்து
ஸ்துதித்தார்

## 228. விருத்தம்.

ஜடதன்மை கொண்டு நின்ற தனயனை வணங்கச் செய்து
படிதனில் பாதமல்லால் பற்று மற்றுமில்லையென்றே
திடமுடன் பணிந்த பாலன் தண்டமாய் கிடக்கக்
கண்டார்
மடமையைத் தீர்க்க ஆசான் மலர் கையால் தூக்கி
விட்டார்

## 151. பாட்டு

"வஞ்சகமாம் இவ்வுடலை" — என்ற மெட்டு

கண்ணிகள்

1. அம்புஜ கையினாலே ஐயனும் தூக்கி நிறுத்த
தன் முகத்தைத் தாழவிட்டு பாலனும்
சற்றும் பேசாதிருக்கக் கண்டார் தந்தையும்

2. சிந்தை குளிர்கவந்த ஐயனே அடிபணிந்தேன்
எந்தையே ஸத்குருவே பாலகனைக் கண்பாரும்
இந்த விதமிருக்கக் காரணம் என்னவென்று
உரையும் என்றார்

3. வயது பதிமூன்ருகியும் வையகத்தார் போல் அறிவு
உயர்வில்லை இவனுக்கு இன்னம் ஐயனே
பயன் பெற படிப்புமில்லை மெய்யனே

4. உபநயனம் செய்து வைத்தும் ஒன்றும் பலன்
காணவில்லை
அபயம் நீர் அளிக்க வேண்டும் எங்களுக்கு
யாரும் துணையில்லை உம்மையல்லால் பாரில்

5. அந்தணர் உரைத்த மொழி சிந்தையில் அறிந்த குரு
அந்த மைந்தனைப் பார்த்து நீ யார்
மந்த புத்தி கொண்ட ஜடனே நீ யார்

6 சங்கரர் மொழியைக் கேட்டு சந்தோஷத்துடன்
பாலனும்
சங்கையற உரைக்கலுற்ருன் பாலனும்
மங்களமான வாக்கினுல் பாலனும்

7. சத்குரோ ஜடன் நானல்லன்
அகத்தில் ஜடதன்மையல்லன்
ஜகமதினில் சேதனத்தின் சம்மந்தத்தாலே
விளங்கும் எல்லாம்

8. ஆறு விகாரமில்லை ஆறு வித தாபமில்லை
பேரானந்தம் அளிக்கும் பிரம்ம
தத்பத பொருள் தானுகும் ஐயனே

9. வித்தைக் கதிபதியே முக்திபதம் சேர்வதற்கு
உத்தம வழி இதுவே ஐயனே
மெத்தவும் சிறந்ததுவே மெய்யனே.

10. உன்னிதமாம் பொருள் அதனை பன்னிரண்டு
பாகங்களாக
அன்புடன் அமைத்து உரைத்து
தத்து வத்தை நிறைத்து எவர்க்கும்

11. அஸ்தாமலகம் போலே அத்துவைதம் உரைத்ததினுல்
அஸ்தாமலகர் என்று அவர்க்கு
விஸ்தார நாமம் இட்டார் சங்கரர்

227. விருத்தம்

சாதனமின்றி வந்த தத்துவ ஞானங்கொண்டு
போதமே சிறந்த அந்த புண்ணிய புதல்வனுக்கு
தீதெல்லாம் அகற்றியாளும் நீ குரு கருணையாலே
வாதினில் ஜயித்த ஐயன் வலக்கரம் சிரத்தில் வைத்தார்

152. பாட்டு

" ராஜனும் தசரதர் " — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : தன்யாசி

அஸ்தம் சிரஸில் வைத்து அஸ்தாமலகருக்கு
அனுக்கிரகம் செய்தாரே

அனுபல்லவி

சொஸ்தமான ஆத்ம நிஷ்டை யடைந்துய்ய
ஜோதிர் மயானந்த தூய பரவெளியாய்

சரணம்

1. பரமஹம்ஸர் உரைப்பார் பாலன் தந்தையைப் பார்த்து
பிறந்ததின் பயன் பெற்ருன் பிரம்ம வஸ்துவை சேர்ந்து
சிறந்தவன் அல்லன் கிருஹ கிருத்தியங்களுக்கு உகந்து
பரந்த ஆத்ம தத்துவத்தை படிக்காமலே உணர்ந்து

2. இருக்கிருன் இவனை இங்கு விட்டு ஏகுவீர்
ஒருவருக்கும் இவனுல் பயனில்லை என்றறிவீர்
பிறந்தனன் பூர்வ புண்ணிய பலத்தால் என்றே தெரிவீர்
பிராம்மணோத்தமரே நீர் பயங்கொள்ள வேண்டாம் செல்வீர்

3. அன்பு மிகுந்த அந்த அஸ்தா மலகரையும்
இன்பத்துடனே இன்னும் அநேகம் சிஷ்யர்களையும்
தான் அழைத்துமே அவ்விடம் விட்டு ஏகிடவும்
பின்னும் பிரபாகரர் பிரிய மனம் இன்றியும்

4. அன்னவருடன் சில தூரங்கள் சென்று பின்பு
தன் இருப்பிடத்திற்கு சார்ந்து சென்றுர் அன்பு
உன்னிதமாய் பெருக உள்ளம் மிகததும்ப
இன்னது செய்வது என்றறியாமல் திரும்ப

## 230. விருத்தம்

வானவரும் மண்ணவரும் வணங்க போற்றும்
ஞானியர்கள் உகந்துமே சூழபெற்றும்
தீன தயாபரனுகி திகழும் ஆசான்
என உள் அன்பருடன் ஏகினுர் சிருங்ககிரிக்கு

## 153. பாட்டு.

"பெரியோர் இருக்குமிடம்" — என்ற மெட்டு

கண்ணிகள்.

கற்ருேர் இருக்குமிடம் கண்டார் கவலை யாவையும்
தீர்க்குமிடம்
தவமோ செய்வதற்கு நல்ல தகுந்த இடமிது
உகந்த இடம்
கருத்தையடக்கி தவம் கொண்ட கலை முனி
வசிக்கும் இடம்
கண்டார் சங்கரரும் கருதவொண்ணுத ஆனந்தம்
கொண்டு மிக
துங்கா நதிக் கரையும் அந்த சிருங்ககிரியின்
சிறப்பினையும்

பார்த்தார் பரவசமாய் பாங்காய் ஆர்த்திகள்
தீர்த்திடும் ஸ்தலம் இதென்றே
தீர்ந்தே விடும் துன்பம் நன்ருய் கார்த்திடும்
கற்பக விருக்ஷம் என்றே
வேதசாஸ்திரங்கள் மெத்த கற்றவர்கள் அருள்
பெற்றவர்கள்
வேதவிதிப்படியே தினம் வேள்விகள் மெத்தவும்
செய்திடுவார்
ஆதிசங்கரரும் அன்பாய் அங்கு வந்தார் ஆனந்தம்
பொங்க
மெத்தசிறந்த சில சிஷ்யர்களுக்கு பாஷியம் தனை
உரைத்தார்
உபதேச வழியால் அங்கு உற்றவர்க்கு உண்மை
பொருள் உரைத்தார்
வெட்கத்தால் பலரை அவர் அக்கணமே தலை குனிய
வைத்தார்
அக்ஞானம் துலைத்து ஆத்ம ஞானமதை அன்பாய்
போதித்து
ஜீவேஸ்வர பேதத்தை நன்ருய் சிதறச் செய்தே
யோகம் திகழச் செய்தே
ஒன்றை அன்றியினிவ் வேருய் இல்லையெங்கிலும்
உறுதியுடன்
நின்றே பிரஹஸ்பதி போல் நன்ருய் நிகழ்த்திடவே
எங்கும் உரைத்திடவே
இந்திர சபையெனவே மெச்ச சுந்திரமான விமானம்
செய்து
மந்திர சொரூபிணியை அயன் முதல் அனைவரும்
பூஜிக்கச் செய்து
பேரோர சாரதையாம் நன்ருய் பாரினில் யாவர்க்கும்
பலன் அளிக்க

சீரோ பொங்கு கின்ற அந்த சிருங்க கிரியினில்
தங்கும் அந்த
தேவி தனை பூஜிக்க நன்ருய் தேசிகரும் யாவருக்கும்
உரைத்தார்

## 231. விருத்தம்

வித்தையில் குறைந்தோனும் விநயத்தில் மிகுந்தோனும்
பக்தியில் சிறந்தோனும் பணிவினைக் கொண்டோனும்
உத்த தன் கடமை தனை உறுதியாய் செய்வோனும்
உத்தம குணம் நிறைந்த ஒருவர் அங்கு ஏகினரே

## 232. விருத்தம்

அவரையும் சிஷ்யனுக ஆசாரியர் ஏற்றுக் கொண்டார்
எவரையும் மிஞ்சும் பக்தி அவரிடம் கண்டார்
தவறிடா குரு சிசுருஷை சந்ததம் செய்வதற்கு
இவரிடம் எல்லையில்லா அன்பு சங்கரரும் கொண்டார்

## 154 பாட்டு

"ஸோ ஹமே ஹம் ஸோ ஹமே" என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம்: ஸிந்துபைரவி

குருகுலவாஸம் செய்தார் கோதற்ற மனமாய்
ஆனந்த கிரியும்

அனுபல்லவி

குருமணியாகும் ஐயன் சங்கரருக்கு
அடிமலர் பூஜித்து அல்லும் பகலுமாய்—குரு

சரணம்

1. ஆசான் எழுமுன் எழுந்து ஸ்நானம் செய்வார்
கூசாமல் குருவின் காரியம் செய்வார்
மாசற வஸ்திரம் மகிழ்ந்தவர் தோய்ப்பார்
பூஜா காரியங்களும் குறையற செய்வார்

2. பாதகமலம் வருடியே மகிழ்வார்
பணிந்து நிழல் போல் பின்பக்கமாக நிற்பார்
நாதன் மகிமையை நாடெங்கும் புகழ்வார்
நான் எனதற்ற நிலையாக இருப்பார்

3. குருநாதன் கூறும் விஷயங்களையெல்லாம்
கொண்டாடியே மனம் கொண்டு மகிழ்வார்
ஒரு நாளும் அவரைப் பிரிந்தவர் அறியார்
ஓதாமலே குரு உள்ளமும் அறிவார்

4. வள்ளலின் வஸ்திரம் தன்னை எடுத்தவர்
வாஞ்சையாய் துங்கா நதியை அடுத்தவர்
மெள்ளவே துவைத்து இருந்திடவே அவர்
மெத்த குருவின் மேல் பக்தி மிகுந்தவர்

5. பக்தியில் சிறந்த சிஷ்யரெல்லாம்
உத்தம பாஷ்யம் உரையுமென்று சொல்ல
அத்தனும் கேட்டு அரைந்திடுவார் மெல்ல
ஆனந்த கிரியும் வரட்டுமே என்று சொல்ல

6. பத்மபாதரும் பரிகாசத்துடனே
பார்த்தாரே குட்டிச்சுவர் அதனை
சித்தத்தில் அறிந்தார் தேசிகரும் பின்னே
வித்தைக் கதிபதியாய் செய்தார் உடனே

## 233. விருத்தம்

பத்மபாதர் முதலாம் பல சிஷ்யர் எண்ணம் தன்னை
அத்தனும் அறிந்து நன்றாய் அருளிட வேண்டுமென்று
வித்தைபதி நாலும் வந்துமேவிட வேண்டுமென்று
சித்தத்தில் கொண்டு அப்போ சிறந்திட செய்தார் தானே

## 155. பாட்டு.

" ஸ்வாமி விவேகானந்தா " — என்ற மெட்டு

தாளம் ஆதி] பல்லவி [ராகம் : இந்துஸ்தான்

நாதன் கருணைப் பெற்றார் குருநாதன் அருளைப் பெற்றார்
ஆனந்த கிரியும் குரு அப்போ

அனுபல்லவி

ஆதியந்தமற்ற வஸ்து ஜோதிர்மய மாகவே

சரணம்

1. போதம் திகழ பதினாலு வித்தையும் கற்றார் பேதமற
வேத வேதாந்த மெல்லாம் விரிவாய் அறிந்து கொண்டார்
வெட்கித்திட யாவரும் விரைவுடனே
தீரவே ஸ்தோத்தரித்தார் தோடக விருத்தமதினால்

2. ஆசாரியர் பாதமதே பாங்காய் விதையதாக அமைந்ததுவாம்
ஆசாரிய தேகமதே சுவை படர அமைந்ததான கொம்பதுவாம் அழகான தாக
நேசமாய் அவர் கருணை நினைத்திட நல் ஜலமதுவாம்
ஆசாரிய பக்தி கொண்ட அழகான தோடக விருத்த மதனால்

3. நேசமுடன் துதிக்கும் ஆசையுடன் அன்பர்கள்
அனுதினம் புஜித்திடும் நற் கனியதாகும்
மாசறவே சாதுக்களாம் மகிமையுள்ள கிளி புஜிக்கும்
மோக்ஷம் அடைவதற்கு முறையாய் அமைந்த குருபக்தியாகும்

4. மும்மலமு மகற்றும் முக்தி பதத்தில் ஏற்றும்
ஆக்ஷேப மற்ற ஆத்ம தத்துவமாகும்
சூக்ஷித்து அறிந்துபார்த்தால் சாக்ஷாத்காரம் அடையும்
மோக்ஷ சாகர சொரூபர் இவர் அன்றோ

5. உபநிஷத்தின் கருத்தை உரைத்தார்
தோடக விருத்தமாக அதை
அபரிமிதமாகவே அன்பருடனே மிக
அல்லும் பகலுமாகவே களித்தார்
உவமை இல்லானந்தத்துடன் உள்ளம் பூரித்து-
கந்தார்

6. மெத்தவும் சுவைநிறைந்த உத்தம விருத்தமதை
கண்டவர்கள் உத்த செருக்கை துறந்து
மெத்தவும் பிரமையடைந்து—வியந்துகொண்டார்
பக்தியில் மிகச் சிறந்த பரம ஞானி என புகழ்ந்தார்

7. தோடக விருத்தம் செய்ததால் தோடகாசிரியர்
என நாமம் இட்டார்
தேடாமலே வித்தைகள் தேசிகன் அருளினாலே
தெய்வகதியால் வந்ததென்றுரைத்தார்
ஈடில்லாமலே புவியோர் யாவரும் புகழுபெற்றார்

8. நான்கு சிஷ்யர்களையும் நான்கு வேதமென சிலர்
உரைப்பார்
நான்கு புருஷார்த்தமும் நான்முகன் திருமுகமோ
நான்கு சாதனமோ தான் என்றுரைப்பார்
பத்மபாதர் சுரேஸ்வரர் அஸ்தாமலகர் தோடகராம்

9. பகவத்பாதர் உரைத்த பரம சித்தாந்தமதை
பாவித்து அவர்
மிகவும் ஆனந்த மென்று மேன்மையாகவே நின்று
சுகமுடன் தன்னிலையை யறிந்து கொண்டு
ஜகத் குருவின் மலரடியை சேவித்து மனமகிழ்ந்து

10. துஷ்டர் மதம் தொலைத்து தூய கீர்த்தி வியாபித்து
சிஷ்யருடன்
அஷ்ட திக்கும் புகழ அன்பர் யாவரும் சூழ
ஆனந்தம் கொண்டு முனிசிரேஷ்டரப்போ
இஷ்டமுடன் சிஷ்யர்களுக்கு ஈடில்லா கடாக்ஷம்
வைத்தார்

அஸ்தாமலகர் முதலான சிஷ்யர்களையடைந்த
பனிரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

விருத்தம் 11] [பாட்டு 9



# பதிமூன்றாவது அத்தியாயம்.



## பிரம்ம வித்தையின் விசாரம்.

234. விருத்தம்

இப்படி இருக்க ஓர் நாள் இயம்புவார் சுரேஸ்வரர் தன்
ஒப்பில்லா குருவின் பாதம் ஒளிபெற வணங்கி நின்று
தப்பில்லா பாஷியத்திற்கு தகுந்ததோர் விருத்தி ஒன்றை
இப்பவே எழுத எண்ணம் கொண்டேன் நீர் அருள்வீர்
என்றார்

156. பாட்டு

" சுசன ஜீவன " — என்ற மெட்டு.

தாளம் : ரூபகம்] பல்லவி [ராகம் : கமாசு

அருள் புரிகுவீர் திருவாக்கு உதவுவீர் குரோ

அனுபல்லவி

திருப்பணி செய்து தினம் தொண்டனாகவே
இருப்பதல்லால் வேறு ஒன்றும் எண்ணிடேன்
விமல பாதனே (அருள்)

சரணம்

1. மெத்தவும் சிறந்த சிஷ்யன் உரையைக் கேட்கவே
உத்தமனும் உகந்து உள்ளம் கொண்டு மகிழவே
உத்திரவிட்டார் குரு வார்த்திகம் செய்யென்று
அத்தருணம் அடிபணிந்து ஆமோதித்து நின்று (அருள்)

2. யுக்திகள் அநேகம் கொண்டு இலங்கும் பாஷியம்
புத்திமான்கள் புகழ்ந்து போற்றும் புனித பாஷியம்
கர்த்தனே நானும் கருணா கடாக்ஷத்தால்
இத்தரையில் எழுத எண்ணினேன் உமது
பிரசாதத்தால் (அருள்)

3. ஸத்குருவின் ஆக்ஞைத் தலைமேல் வகித்தவர்
சித்தத்தில் ஆனந்தம் கொண்டு சிறப்புடனவர்
பத்மபாதரும் பல சிஷ்யர்களுமாய்
சித்சுகர் முதலான பேர்களும் சிறக்க அறிந்தனர்
(அருள்)

## 235. விருத்தம்

பத்மபாதர் முதலான பல சிஷ்யர் ஒன்றாக சேர்ந்துமே
உத்தமமான பாஷியத்திற்கு வார்த்திகம் செய்யக்
கூடாதென்றே
சித்தத்தில் எண்ணம்கொண்டார் யாவரும் குருவிடம்சென்று
அத்தனே விருத்தி உரை செய்ய இவர் அருகனல்லவென்று
உரைத்தனர்

## 157. பாட்டு

" கேளும் ராஜ குமாரா " — என்ற மெட்டு.

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : பூரிகல்யாணி

கண்ணிகள்

1. கேளும் குரு ராஜனே நாங்கள் உரைக்கும் மொழிக்கு
செவி சாய்த்து நீர் கேளும் — குருராஜனே

2. நாளும் சுரேஸ்வரருக்கு நாடும் மனம் கர்மகாண்டம் தன்னில்
ஆளும் ஐயனே இவர் அபிப்பிராயம் வேருய் அமர்ந்துவிடும்

3. உங்கள் அபிப்பிராயத்தை உகந்தவர் வார்த்திகம் எழுதுவாரோ
தங்கள் மதக் கொள்கையை தவிர்த்து சித்தம் கொள்ளுவாரோ

4. கர்ம மார்க்கமதிலே கருத்தை யிழுந்து இருந்தோர் அன்ரே
நிர்மல ஞானமதை நிகழ்த்திட வல்லமை யுள்ளவரோ

5. எண்ணம் வேருகக் கொண்டு எழுதிட்டால் விபரீதம் ஆகுமன்ரே
வண்ணமுடன் கர்மத்தை உரைந்திடுவார் இது திண்ணமன்ரே

6. சந்நியாசம் கொண்டதுவும் சற்றும் சம்மதத்துடனல்ல
உந்நித வாதம் செய்து உம்மால் ஜயித்ததனுலே நல்ல

7. எங்கள் மனதினிலே இப்போ சந்தேகம் மிக தோன்றுவதினுல்
மங்கள வார்த்திகத்தை வரைந்திடவேண்டாம் இவர் தானென்ருர்

8. கங்கைதனில் இறங்கி சங்கரா சத்குரோ என்று உரைக்க

அங்கு பங்கஜம் வர அதை மிதித்து உண்மையடைந்த தனால்

9. அன்று முதல் அவரை அம்புஜபாதா என்று அழைத்தீர்
இன்று வார்த்திகம் செய்ய இவரே தகுந்தவர் ஆகுமைய்யா

10. மெத்த குருபக்தியில் சித்தம் லயித்து இருப்பாரன்றோ
பக்தியுடன் துறவு பால்யம் தன்னிலே யடைந்தோர் அன்றோ

11. ஆகையால் பாஷ்யத்திற்கு அவரே உரைசெய்ய வேண்டுமென்று

தாகத்துடனே மெத்த சிஷ்யர்கள் யாவர்களும் உரைத்தார்

12. இல்லையாகில் இப்போது ஆனந்த கிரியே இயற்றிடு வார்

எல்லா வித்தையும் உம்மால் எளிதாக இருப்பதனால்

13. விஸ்வரூபரே ர கர்மகாண்டத்தில் சுத்த மனதுகொண் டவர்

விசுவாஸமில்லை எங்கள் ஐயனே என்று அவர் உரைத்தார்

14. இப்படியாய் உரைக்க அப்போது பத்மபாதர் உரைப்பார்

ஒப்பில்லா ஞானம் பெற்ற அஸ்தாமலகர் அருகன் என்றார்

15. கையில் ஆமலகம் போல் கைவல்ய நிலைதன்னை உரைத்தோர்

ஐயம் எல்லாம் அகல அத்துவைதம் தன்னையறிந்து கொண்டோர்

16. அஸ்தாமலகர் என்று அழகான பேரை தரித்துக்
கொண்டோர்
விஸ்தாரமாக பிரம்ம வித்தையை கற்று விளங்குகின்றார்
17. என்று பத்ம பாதரும் எடுத்து பகர்ந்திடவே சங்கரர்
புன்முறுவல் பூத்தவர் புகலுற்றார் அப்போ பூர்வகதை
18. வல்லமையில் சிறந்த அஸ்தாமலகர் மகிமைதனை
சொல்லுவேன் கேட்டிடுவீர் சுத்த சைதன்ய
மதானவரை
19. எந்நேரமும் அவர் அந்தர்முகவிருத்தி கொண்டதினால்
இந்த பாஷியத்திற்கு இவர் இசைந்திடார் விருத்தி
உரை எழுத

## 236. விருத்தம்

சங்கரர் இவ்வாறாக சாற்றிய மொழியைக்கேட்டு
அங்குள சிஷயரெல்லாம் ஆச்சரியம் கொண்டு மிக்க
எங்கள் சத்குரு இங்கு இவர் ஞானம் பெற்ற மார்க்கம்
உங்கள் வாக்கு அதனால் நன்றாய் உரைத்திட வேண்டு
மென்றார்

## 158. பாட்டு

" தன்னையறிந்து இன்பமுற " — என்ற மெட்டு

கண்ணிகள்

1. கூறும் சிரவணுதியின்றி கூடுமோ ஞானம் எங்கள்
குருபரனே உரைத்திடுவீர் என்று உரைத்தார்
2. மடமை நீங்கி வஸ்துமாத்திரம் ஆனது எதய்யா உமது
உடமையாகி உள்வினைகள் ஒழிந்த தேனய்யா
3. உறுதி ஞானம் கொண்டு சதா ஒளிர்வது எதய்யா
இப்போ
கருத்துகந்து கர்த்தனே கழறுவீர் ஐயா

4. முக்காலம் உணர்ந்த முனியாக திகழும் யதி
சக்ரவர்த்தியும் உரைப்பார் சாந்தி திகழும்
5. முன்னொருநாள் நடந்த கதை ஆகும் அறிவீர் நீங்கள்
நன்றாகவே மிக நன்மை பெறுகுவீர்
6. இல்லறத்தில் ஆசையற்று இலங்கும் யோகத்தில் அவர்
அல்லும் பகலும் இருப்பார் ஆத்ம தியானத்தில்
7. யமுனை நதிக்கரை தன்னில் எப்போதும் வசிப்பார் பொல்லா
யமனையும் ஜயித்து ஏகமாக ரசிப்பார்
8. ஒரு தினம் ஓர் விப்ரஸ்த்ரீயும் ஸ்நானம் செய்யவே அங்கு
இருவயது பாலனுடன் ஏகி வரவே
9. பக்கந்தன்னில் வந்து அந்த பாலனை விட்டு மாது
மிக்கவும் பணிந்தவளை பார்த்து உரைப்பாள்
10. பிராமணோத்தமரே இந்த பாலனை நீரும் நன்றாய்
பிரேமையுடன் பார்த்துக்கொள்வீர் என்று உரைத்தார்
11. சீக்கிரம் நான் ஸ்நானம் செய்து திரும்புவேனென்றாள் அந்த
சித்தரிடம் குழந்தையை விட்டேகியே சென்றாள்
12. தெய்வ கதியால் குழந்தை நதியிலிறங்கி அப்போ
உய்யும் வழியறியாது இருந்தது தயங்கி
13. கண்டு அந்த தந்தை தான் சிந்தை கலங்கி அங்கு
கொண்டு வந்தார் கோதற்ற முனியை வணங்கி
14. ஐயனே நான் என்ன செய்வேன் என்று அலறவே
தூயதாம் யோகத்தால் அந்த உடலில் செல்லவே
15. அந்த முனியே இவராகும் என்று அறிகுவீர் நன்றாய்
சிந்தையில் சந்தேகமின்றி தெளிகுவீர்

16. சகலதத்துவமும் சாஸ்திரமும் கற்றோர் இந்த
நிகில பிரமை நீங்கி நித்தியானந்தமே பேற்றோர்

17. அந்தர் முகத்திலிருந்து ஆனந்த முற்றோர் அவர்
இந்த பாஷியத்திற்கு உரை எழுதிடுவாரோ

18. சரஸ்வதியை சாட்சிவைத்து ஸர்வக்ஞனை அந்த
திறமை கொண்ட மண்டனரே தகுந்தவர் என்றார்

## 237. விருத்தம்

உலகினில் பிரசித்தி பெற்றோர் உத்த வித்தை கற்றோர்
அலைகடல் போலெ கல்விக்கடலைக் கடந்தோர் ஆவர்
இலங்கவே அவரையல்லால் இயற்றிடயாரே வல்லர்
அலகிலா தர்மம் தனை அவனியில் விரித்தோர் ஆவர்

## 238. விருத்தம்

இஷ்டமுங்களுக்கு இன்றேல் இசைந்திடவில்லை நானும்
கஷ்டமாய் உங்களுக்கெல்லாம் கருத்தினில்பட்டதேனோ
மட்டில்லா சந்தேகத்தால் மயக்கமும் கொண்டெல்லோரும்
இஷ்டம்போல் ஆகவென்று இறைவனும் இருந்துவிட்டார்

## 159. பாட்டு.

" குருநாதனுக் கென்மீதில் " — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : இந்துஸ்தான்

ஸத்குரு நாதனே ஆக்ஞை செய்தால்
ஸனந்தனனே வியாக்கியானம் செய்குவார்

அனுபல்லவி

1. உத்தம ஸந்நியாசம் பெற்றனர் பாஷியத்தில்
அத்துவைத சாஸ்திரத்தை பற்றியே
புத்தியில் மெத்த சிறந்தவர் அவர்
பிரம்மசாரி விருதத்தை பெற்றவர் (ஸத்குரு)

2. இந்த விதம் மற்ற சிஷ்யர்கள் உரைத்ததை
சிந்தையில் அறிந்துமே சங்கரர்
முந்தியே சுரேஸ்வரர் தமக்கு முற்றிலும்
வாக்தானம் செய்தனோம் (ஸத்குரு)

3. ஆகையால் வார்த்திகம் எழுதவேண்டாம் வேறு
வியாக்கியானம் ஒன்று செய்தால் நன்று
ஏகமனதுடன் செய்குவீர் என்று
இட்டார் கட்டளை இசைந்து என்று (ஸத்குரு)

4. சுரேஸ்வரரே நீரும் துன்பம் கொள்ள வேண்டாம்
செய்குவீர் சிறந்த நூல் ஒன்றென்றூர்
நிரீசுவர வாதம் கொண்டோரெல்லாம் வென்று
நேர்மையுடன் நீர் செய்குவீர் (ஸத்குரு)

5. மற்றவர் உம்மைக்கண்டு மயக்கம் தெளிந்திட
உற்றதோர் சாஸ்திரம் இயற்றுவீர்
என்று ஆசாரியார் உரைக்கவே அப்போ
தன்னுள் வருத்தமவர் உற்றனர் (ஸத்குரு)

6. மகத்குரு உரைத்ததை மண்டனர் கேட்டுமே
அகத்தினில் ஆனந்தம் கொண்டாருடன்
ஜகத்தில் பிரசித்தி யடைந்தோர் நல்ல
நைஷ்கர்ம ஸித்தி நூல் இயற்றினர் (ஸத்குரு)

7. யுக்தி வசனங்கள் மெத்த மிகுந்ததுப்
தத்துவ ஞானம் நிறைந்ததும்
உத்தகர்ம பந்த மற்றதுமான
உத்தம சாஸ்திரம் இயற்றினர் (ஸத்குரு)

8. சங்கர குருவிடம் ஸமர்பணம் செய்திட்டார்
அங்கம் பூரித்தவர் கொண்டிட்டார்
அங்குள்ள சிஷ்யர் அனைவரும் பார்க்க
இங்கிதமாக உரைத்திட்டார் (ஸத்குரு)

9. கர்மபந்தமதைக் களைந்துமே நன்றாய்
நிர்மலமாக்கும் இந்நூல் என்றார்
பிரம்ம ஞானிகளும் போற்றியே தினம்
பேயுன்ப மாகும் இந்நூல் என்றார் (ஸத்குரு)

10 பேருக்கும் புகழுக்கும் பேராசை கொண்டல்ல
பிரபுவே இந்நூலை இயற்றினேன்
ஓதும் குருமொழி கொண்டுமே உள்ளம்
கூற துணிந்தேன் இந்நூல் தன்னை. (ஸத்குரு)

## 239. விருத்தம்.

இல்லறம் தனிலிருந்து இயற்றிய கர்மம் தன்னை
நல்லதோர் துறவு பூண்டால் நாடுமோ மனம்தான்பின்னே
எல்லையில்லா விஷயபோகம் இளமையில் கொள்வதுண்டு
தொல்லையாம் முதுமை வந்தால் தோற்றம் வேறாகுமன்றோ

## 160. பாட்டு

“யாருக்கு பொன்னம்பலம்” — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : பைரவி

இல்லறத்திலிருந்து இயற்றிய கருமத்தால்
என்ன பிசகையனே

அனுபல்லவி

நல்ல மனமே மோக்ஷம் பொல்லா மனமே பந்தம்
எல்லாமறிந்தாலுள்ளில் ஏது இனி பிரதிபந்தம்

சரணம்

1. சந்நியாசத்தில் மனம் கொள்ளவில்லை யென்றால் நான்
உன்னிய பந்தத்தில் இசைந்திடுவேனோ தான்
அன்னியருரை கேட்டு அவதிப் படுவது ஏன்
என்மனை புகுந்து நீர் ஏற்றுக்கொண்டீர் பிக்ஷைதான்
(இல்லற)

2. தத்துவ ஞானம் கொண்டு சந்தேகம் தெளிந்திட
உத்தமா ! உம்மிடத்தில் உற்றேன் நான் வாதிட
மெத்த வைராக்கியத்தால் மேவினேன் துறந்திட
உத்தமோர் தோல்வியால் அல்ல நான் நின்றிட (இல்)

3. துஷ்டவாதிகளுடைய கர்வங்களை துலைத்து
திட்டமுடன் அத்துவைதம் சிறக்க எங்கும் உரைத்து
இஷ்டமுடன் அன்பர்க்கு இகபரமும் கொடுத்து
எட்டு திக்கிலும் கீர்த்தி ஏற்றமாக விதித்து (இல்லற)

4. இருக்கும் உம் பாதத்திற்கு இரவும் பகலும் தொண்டு
இறைவனே இன்பமுடன் நான்தினம் செய்து
கொண்டு

குருபரனே இருக்க எண்ணம் மிகவும் உண்டு
கோதற்ற பாதபத்மம் பஜிப்பேன் சிரமேல்கொண்டு
(இல்லறம்)

## 240. விருத்தம்

இந்தவாருக இங்கு சுரேஸ்வரர் உரைக்கக்கேட்டு
எந்தவாறு இவர் துன்பத்தை தீர்ப்பது என்று எண்ணி
வெந்திடும் மனம் குளிர விவேகமாம் தண்ணீராலே
சுந்திர குரு அணைத்து சுரேஸ்வரரோடு ஈதுரைப்பார்

## 161. பாட்டு

திருப்புகழ் : " தொந்தி சரிந்த மயிலே " — என்ற மெட்டு

1. சிந்தை தளரவேண்டாம் சுரேஸ்வரரே
சொந்தமுடனே உரைப்பேன் அதைக் கேட்டு நீர்
சந்தோஷமாக வேறு பாஷியம்
சுந்திரமாக எழுதுவீர்

2. தத்துவ ஞானம் சுரக்கும் தைத்திரியமும்
சார்ந்த பிரகதாரண்ணியகமும்

மெத்த சிறந்ததான நரஸிம்ம
தாபந்ய உபநிஷத்தும்

3. தக்ஷிணாமூர்த்தி சாஸ்திரம் சிறந்ததான
பஞ்சகரண மதற்கும்
பக்ஷமுடன் வார்த்திகம் எழுதுவீர்
என்று உத்திரவு அளித்தார்

4. என் மனம் மகிழ்ந்திடவே யஜுர்வேதத்தில்
இலங்கும் உபநிஷத்திற்கு அருமையாக
இன்பமுடன் வார்த்திகம் எழுதிடவே
வேண்டும் நீர் என்று உரைத்தார்

5. கண்வ சாகைக்கும் அதுபோல் களிப்புடனே
திண்ணமாக வார்த்திகம் நீர் எழுதவேண்டும்
எண்ணம் எனக்கு இதுவே இதில் தடை
இல்லை உறுதி இதுவே

6. ஆர்த்திகள் எல்லாம் தீர்க்கும் இந்தவார்த்திகம்
கார்த்திகை நிலவாகும் கலியுகத்தில்
கீர்த்தி மிக ஓங்கும் களிப்புடனே
பார்த்து நீர் செய்வதாகும்

7. பரமஹம்ஸர் பகர்ந்த கட்டளை தன்னை
பாங்காய் சிரமேல் வைத்தார் மண்டனரும்
திடமுடன் பாஷ்யம் இரண்டும் வார்த்திகம்
வரைந்தார் வள்ளல் அருளால்

8. குருவின் கட்டளை தன்னை கருதியவர்
உறுதி மனதில் கொண்டு சுரேஸ்வரரும்
அருமையாக வார்த்திகம் எழுதி
குருபாத காணிக்கை வைத்தார்

9. ஆசாரியர் அருளினால் ஸனந்தனரும்
மாசற்ற பாஷ்யம் அதற்கு சிறந்ததான

நேசமாம் வியாக்கியானமும் செய்தார்
கூசிடாது எவரும் போற்ற

10. பஞ்ச பாதுகை என்ற முதல்பாதமும்
மிஞ்சிய பாதி அதற்கு விருத்தி என்றும்
சஞ்சல மெல்லாம் தீர சகலரும்
நெஞ்சில் ஆனந்தம் பூண

11. வியாஸ சூத்திரத்திற்கும் விரிவாக பீடிகை
ஒன்று எழுதினர் விளங்க சிறப்பதாக
கியாதியுடனே குருவின் பாதமதினில்
கீர்த்தியுடன் சமர்ப்பித்தார்

12. சிந்தையில் ஆலோசித்து சங்கரரும்
சுரேஸ்வரரிடம் உரைப்பார் ரகஸியமாய்
இந்த பீடிகையும் உலகினில்
ஐந்து பாதமே பிரசித்தி யடையும்

13. வாசஸ்பதியென்று பேர்கொண்டு உலகில்
வந்து பிறப்பீர் பின்னையும் பிராப்தத்தால்
நேமமாய் பாஷியமதற்கு விசேஷ உரை
நேசமாய் எழுதி மகிழ்வீர்

14. ஆனந்த கிரி முதலாம் ஞானம் நிறைந்ததான
அத்துவைத நூலை
நான் என்பதறவே நீரும் எழுதுவீர் என்று
நாதனும் கட்டளை யிட்டார்

15. சத்குரு ஆக்ஞையினால் சகலரும்
தத்துவ பதங்கள் நிறைந்த சமரஸமாம்
அத்துவைத சாஸ்திரம் தன்னை அவரவர்
சக்திக் கிசையவே செய்தார்

[ பாட்டு : 6
விருத்தம் : 7 ]

பதிமூன்றுவது அத்தியாயம் முற்றிற்று.



# பதிநான்காவது அத்தியாயம்.

## பத்மபாதர் தீர்த்த யாத்திரை.

---

### 241. விருத்தம்

ஆர்த்திகள் தீர்க்கும் எந்தன் ஐயனே குருவே நானும்
தீர்த்த யாத்திரைகள் செய்து சிறந்ததோர் ஸ்தலங்கள்கண்டு
மூர்த்திகள் தன்னைக் கண்டு கீர்த்தியாய் வருவதற்கு
பார்த்தருள் செய்வீர் என்று பத்ம் பாதரும் பணிந்தார்

### 162. பாட்டு

" மானும் மறையவே " — என்ற மெட்டு

கும்மி

1. பத்மபாதரும் பகர்ந்த மொழிதன்னை பரமகுருவும்
கேட்டு
சித்தந்தனில் மிக சிறக்க ஆலோசித்து ஸ்ரீகுரு
ஈதுரைப்பார்

2. குருவின் பணிவிடை செய்திருப்பதே கோடி நல்
ஸ்தலமதாகும்
குருவின் பாதபத்மதீர்த்தமே நமக்கு கோதிலா
கங்கை ஆகும்

3. அவர் உபதேசத்தால் ஆத்மாவை அறிவதே அநேக
மூர்த்திகளுமாகும்
அவர் பணிவிடை செய்து அவருடன் மகிழ்வதே
ஆனந்தம் மிகவாகும்

4. துறவறம் பூண்டு சுத்த ஞானம் பெற்று நிறைமதி
யானவற்கு
பிறகு ஒரு தீர்த்தமும் மூர்த்தியும் ஸ்தலமும் பரிவாக
இருப்பதுண்டோ

5. தத்துவ பதார்த்த சோதனை செய்து நித்தியம்
இருப்போர்க்கு
எத்திக்கும் சுற்றி திரிவதினால் மிகவும் சித்த விச்ராந்தி
யுண்டோ

6. சில சில இடங்களில் சிறந்த சௌக்கியம் உண்டு
சில இடம் துன்பமுண்டு
அலகிலாமலே வரும் அதனால் ஆயாசமுண்டு உளவு
மனதிலுமுண்டு

7. தேக சௌக்கியமும் கெடும் தெய்வ பூஜையும் விடும்
தாகம் பசியும் மேலிடும்
வேகமுடனே தியானம் செய்யாமலே போகும்
வேதனை மிக ஆகும்

8. சங்கரரும் மிக தயவுடன் இரங்கி இங்கித மொழி
உரைத்தார்
பங்கஜபாதரும் பாங்குடன் கேட்டு பரிவுடன்
எடுத்துரைப்பார்

9. எங்கள் குல தெய்வமே இறைவனே நீரும்
உரைத்தது மிக நன்றே
உங்கள் பணிவிடை செய்திருப்பதே உயர்ந்ததோர்
கடனாகும்

10. முன்னோர்கள் சென்று முக்காலமும் பணிந்த
மூர்த்திகளைக்காண
என்னவர் ஐயனே எனக்கு நீர் அருள் செய்வீர்
என்றவர் பணிந்தார்

11. கஷ்டங்கள் வரினும் கருணை கடாக்ஷா உம் கருணையால்
நான் ஜெயிப்பேன்
திட்டமுடன் சென்று தேச யாத்திரை செய்ய
இஷ்டமாய் அனுக்கிரகிப்பீர்

12. புண்ணிய தீர்த்தங்கள் ஆடியே மனமும் புனித
மாகியே வருவேன்
புண்ணிய மூர்த்தே புரிந்திடுவீர் அருள் பொன்னடி
பணிந்து கொண்டேன்

13. சாதுக்களுடன் கூடி சந்ததம் வசித்து நான் சமரஸ
மாயிருப்பேன்
பாதுகா தியானமே பாங்குடன் செய்து நான்
பாரெங்கும் சஞ்சரிப்பேன்

## 242 விருத்தம்

எத்தனை எடுத்துரைத்தும் இசையாமல் பத்ம பாதர்
உத்தம தீர்த்தமாட உறுதி தன் மனதில் கொண்டார்
சத்துவ குணம் நிறைந்த சங்கரர் அதனைக்கண்டு
மெத்த சந்தோஷமாக விளம்பிட உற்றனரே

## 163. பாட்டு

"காலையில் கண்ணன்" — என்ற மெட்டு.

கண்ணிகள்

1. பத்மபாதரே நீரும் பகர்ந்தவை யெல்லாம் அறிந்தேன்
சித்தந்தன்னில் விருப்பம் போல் நீர் தீர்த்த யாத்திரை
செய்குவீர்
மெத்தவும் தளர்ச்சி தரும் சஞ்சாரம் செய்யாமலும்
உத்தமமான இடத்தை உற்றறிந்து செல்குவீர்

2. அநேகமான தீர்த்தங்களும் அநேகமாகும் மூர்த்திகளும்
அநேகமான ஸ்தலங்களும் அவனியில் மெத்த உண்டு

அநேகமாய் நீர் சுவையெல்லாம் அடைவது என்பது
ஆகாதனில்
அநேகமான வழிகளும் அநேகமாய் துன்பம் தரும்

3. இவ்விதம் இருப்பதால் நீர் இவையெல்லாம்
ஆலோசித்து
செவ்வையாய் ஓர் அக்கிரகாரத்தை அடைகுவீர்
யோசித்து
ஒவ்வவே இடும் பிக்ஷையை உகந்து உள்ளம் கிரகித்து
எவ்விதத்திலும் துஷ்டர் உறவை சேராமல் தியஜித்து

4. முன்னோர்கள் சாவகாசமே முற்றும் நன்றாய்
செய்திடில்
அன்னவரால் ஆத்மஞானம் அடைவது எளிது அதில்
இன்னல்கள் எல்லாம் அகற்றும் இயம்பிடும் மொழி
தன்னில்
இன்னமுது ஊறிடும் இளைப்பெல்லாம் தவிர்த்திடும்

5. மாறு வேஷம் கொண்டு சோரர் வந்திடுவார்
வழிதன்னில்
நேருடன் அதை யறிந்துகொள்ள வேண்டும்
நெஞ்சினில்
யாருடனும் நட்புக் கொள்ளலாகாது சோதியாமல்
சீருடன் நீர் தீர்த்தயாத்திரை செய்து இங்கே
திரும்புவீர்

6. விர்ப்பனர்கள் மதமதனை விளங்கவே நீர்கொள்ளுவீர்
அற்பர்களை அண்டாமல் நீர் ஆனந்தமாய் செல்லுவீர்
நிற்பயமாய் நிர்மலமாய் நிற்குணமாய் நிகழ்ந்திடும்
சொற்பமும் மனதில் ஐயம் இன்றியே நீர் துலங்கிடும்

7. மந்தகாச முகத்திலிருந்து வரும் வாக்கியமுதம் உண்டு
சிந்தை குளிர்ந்து மிகவும் சிறந்தனர் பத்மபாதர்

எந்தையே உமது அருளால் ஏகிவருவேன் என
சுந்திர பாதம் தொழுது தூயவரும் சென்றனர்

8. சிருங்ககிரி தன்னில் அநேகம் சிஷ்யர்கள் சூழவே
தங்கியே சிலகாலம் சமரஸமாகவே
சங்கரரும் தனது யோகசித்தியாலே யோசித்தார்
அங்கு தாயின் அந்திம திசை நன்றாய் அறிந்தனர்

9. சுகமுடன் நீர் இருப்பீர் என்று சிஷ்யர்களுக்கு
உரைத்துமே
ககன மார்க்கமாக அங்கு கடுகியே விரைந்துமே
அகமதில் ஆயாசம் கொண்டு அன்னை தன்னைக்
கண்டார்
மிகவும் மனம் மகிழ்ந்து மாதா மலரடியில் பணிந்தனர்

10. வெய்யிலினால் தாபம் கொண்டு வெதும்பிடுவோர்
களுக்கு அங்கு
பெய்தமழை போலமிக்கப் பேணி மனம் குளிர்ந்தனள்
மைந்தனுக்கும் சங்கரரை மாதா கண்டு மகிழ்ந்திட
ஐயங்களெல்லாம் அகற்றி ஆயாசம் தவிர்ந்திட

243. விருத்தம்

அன்னையே வந்துவிட்டேன் ஆயாசம் கொள்ளவேண்டாம்
என்ன நான் செய்ய வேண்டும் என்பதை எடுத்துரைப்பாய்
சின்மயன் மொழியைக்கேட்டு சிறப்புடன் தாயும்
சொல்வாள்
உன்னையான் கண்ட பின்பு உற்றிடும பதம் வேறுண்டோ

164. பாட்டு

“பள பளவென பதக்கம் மின்னுதே” — என்ற மெட்டு

கண்ணிகள்

1. அன்பே உருவாய் எழுந்த அருமை மைந்தனே —
எனக்கு
உன்னையல்லால் உண்டோ கதி— அருமை மைந்தனே

2. இந்த உடல் சுமக்க எண்ணம் — இனி எனக்கில்லை
இந்த உலக விஷயம் மெத்தவும் தொல்லை
3. சாஸ்திரப்படிக்கு நீ சத் கருமம் செய்குவாய்
நாஸ்திகர்களைத் தொலைத்து நலமுடன் உய்வாய்
4. புனிதமாய் என் ஜன்மம் புண்ணிய லோகமடைய
இனி பிறவா பதவியை நான் எய்துமே உய்ய
5. அன்பு மயமாய் இலங்கும் அன்னை மொழியை
இன்பமுடன் அறிந்துரைப்பார் அவரும் வழியை
6. ஆதி மத்தியாந்தமற்ற ஆத்ம வடிவை
ஜோதி ரூபனும் உபதேசித்தார் திருவை
7. மாயை என்னும் வியாதியகற்றி திகழும்
தூய சுகமாக எங்கும் துலங்கி நிகழும்
8. வேத பிரமாணங்களால் விவரிக்க வொண்ணாததாய்
போதமாய் விளங்கும் வஸ்து தன்னை உரைத்தார்
9. ஆறு விகாரங்களற்று ஆகாயம் போலே
சீருடன் அகம் புறமும் நிறைந்தது என்றார்
10. நித்திய சுத்தமான பரபிரம்மம் நீ என்றார்
உத்தமனும் அத்துவைத உபதேசம் செய்தார்
11. சற்குணனே நிர்குணத்தை நீ உரைத்ததால்
நிற்கவில்லை என் மனம் என்ன செய்குவேன் என்றாள்
12. ஷட்குணம் நிறைந்ததான ஸகுண மூர்த்தியை
சாற்றிடுவாய் என்றுரைத்தாள் தாயும் பார்த்துமே
13. சங்கரரும் தாய் மொழியைக் கேட்டு மகிழ்ந்தார்
திங்கள் அணிந்த சம்புவை ஸ்துதித்தார்
14. சோம சேகரர் மகிழ்ந்து தூதரை அனுப்ப
தாமதம் செய்தார் மறுத்து தாயும் வெறுப்பாய்
15. இவருடன் நான் செல்லக் கொண்டிடேன் என்றாள்
அவரும் அதை யறிந்து அச்சுதனை ஸ்துதித்தார்

## 244. விருத்தம்.

பன்னக சயனனும் பார்மகள் சமேதனும்
முன்னலிதன்னில் பக்ஷிராஜன் அங்கு இருப்போனும்
எண்ணிலத்தோர் போற்ற எழில் மிகக் கொண்டோனும்
மின்னிடும் கிரீடங்கொண்ட மாதவன் தன்னை ஸ்துதித்தார்

## 245. விருத்தம்

தாமரைக்கண்ணன் தன்னை தனயனும் ஸ்துதிக்கக்கேட்டு
பூமகள் சமேதனாக பொருந்தவே தியானம் செய்தாள்
நேமமாய் நிஷ்டை தன்னில் நெஞ்சை நன்றாய் நிறுத்த
தாமதமன்றியே தன் தேகத்தை தியாகம் செய்தாள்

## 246. விருத்தம்

வந்து தூதர் மகிழ்ந்து மங்கள விமானம் ஏறி
சுந்திரமாக விஷ்ணு தூதர்கள் அங்கு தோன்ற
விந்தையே மைந்தா வென்று வெகுவாக புகழ்ந்து
கொண்டாள்
வந்தனர் வைகுண்டத்தை வகையுடனே அப்போ

## 165. பாட்டு

"எப்படி இருந்தாயோ" — என்ற மெட்டு

கண்ணிகள்.

1. அன்னைக்கு அபர கிரியை செய்ய ஆரியர் நினைந்தாரே
தன்னினத்தவர்களை தனக்கு உதவி செய்ய
சத்குரு அழைத்தாரே நன்றாய்

2. சங்கரர் உரை கேட்டு அங்குள அனைவரும்
ஈதுரைப்பார்
துங்க ஞானம் கொண்ட துறவியே உமக்கு
இங்கு உண்டோ கர்மம் என்றார் அவர்கள்

3. மெத்தவும் எடுத்துரைத்தும் சங்கரர் மேலும்
பிரார்த்தித்து நின்றார்
அத்தனையும் அவர்கள் ஒத்துக்கொள்ளாமலே
உதவி செய்யாதிருந்தார்

4. அக்கினி அளிக்கவில்லை அவர்கள் அண்டையில்
செல்லவில்லை
மிக்கவும் கோபத்தில் மேவிய சத்குரு
அக்கணம் சாபமிட்டார்

5. தன் வலக்கரந்தன்னிலே ஈம அக்கினியை தயாபரன்
வரவழைத்தார்
தன் கரத்தினாலேயே தண்ணீர் கொணர்ந்தார்
சகல சாமானும் சேர்த்தார்

6. தன்னிலத்தின் அருகில் தாய்க்கு தகன கிரியையும்
செய்தார்
அன்னியரான அந்தணரைப் பார்த்து
ஆரியர் ஈதுரைப்பார்

7. வேதகர்மங்கள் ஒழிந்து வேதம் ஓதுவதும் துறந்து
சாதுக்கள் பிக்ஷைக்கும் தகுந்தவர் அல்லாமல்
ஆகுவீர் என சபித்தார்

8. அவரவர் இல்லமது உங்களுக்கு ஆகும் வன்காடு
என்றார்
தவறு இழைத்தவருக்கு தகுந்த சாபம் கொடுத்து
சங்கரரும் நடந்தார்

9. பத்மபாதர் வரவை நோக்கியே பரமனும் காலடியில்
சித்தம் மகிழ்ந்துமே சிலகாலம் தங்கினார்
ஸ்ரீ குருவும் தனியாய்

## 247. விருத்தம்

ஆரியாருளைப்பெற்று அன்புடன் பத்மபாதர்
சீருடன் வடதிசைக்கு சென்றனர் சிறப்பு மிக்க
நேருடன் அங்கு தீர்த்தம் மூர்த்தியும் கண்டு உகந்தார்
பாருளோர் போற்ற பத்மபாதர் தென்திசைக்குச் சென்றார்

## 166 பாட்டு

" சீதை சகிகளுடன் கூடி " — என்ற மெட்டு
காவடிச்சிந்து

1. தென்திசை நோக்கியே நடந்தார்
சிறந்திடும் காளகஸ்தியடைந்தார்
உன்னிதமாம் சுவர்ணமுகி நதியினில் ஸ்நானம் செய்து
மகிழ்ந்தார் மெத்த புகழ்ந்தார்

2. பன்னகா பரணமது பூண்டு பார்வதிசமேதருக நின்று
பொன்னடி பணிந்தவரின் பிறப்பு இறப்பை யகற்றும்
ஈசன் பரமேசன் விண்ணவரும் பூஜைசெய்து
புகழ்ந்தார்
கண்ணப்பனும் பூஜை செய்து மகிழ்வார்

3. எண்ணிக்கையின்றியே எல்லையில்லா பக்தர்கள் மிக
வருவார் தினம் புகழ்வார் பார்வதி சமேதராக
கண்டார்
பத்மபாதரும் ஆனந்தம் மிகக்கொண்டார்
சீருடனே பூஜை செய்து சிந்தை குளிர அவர்
ஸ்துதித்தார் பிரார்த்தித்தார்

4. உத்திரவு பெற்றுக் கொண்டார் உடனே அங்கு
பத்திரமாய் புறப்பட்டார் உடனே
மெத்தவும் கீர்த்தி மிகுந்த காஞ்சிமாநகரம் தன்னை
கண்டார் களி கொண்டார்

5. ஏக பரம்பொருளாக விளங்கும் அந்த
ஏகாம்பரேஸ்வரரைப் பணிந்தார்
தாகமெல்லாம் தவிர்க்கும் தாயாம் காமாக்ஷியையும்
பணிந்தார் மனம் குளிர்ந்தார்

6. அனாதி காலமாய் விளங்கும் அந்த
அன்னை லக்ஷ்மீ பதியையும் கண்டார்
மன்னுதிகளுக்கெட்டாத மாசற்ற சொரூபனை
போற்றினார் ஸ்துதித்து ஏற்றினார்

7. சிதம்பர க்ஷேத்திரத்தை யடைந்தார் திரு
நடன சபையைக் கண்டு பூரித்தார்
நிதம் அன்பர் மகிழ்ந்திடும் திருநடராஜனை
பார்த்தார் ஆர்பரித்தார்

8. சிவகங்கையில் ஸ்நானம் செய்தார் சிலர் உரைக்க
அதன் பெருமை அறிந்தார் பவபயங்கள் அகற்றி
பரமன் அருள் பெறுவார்
எவர் அவர் நன்றாய்

9. ராமேஸ்வரம் போகவென்றே பத்மபாதரும்
புறப்பட்டார் பத்மபாதர் வரும் வழியில்
சிறக்கும் காவேரி தன்னை
பார்த்தார் மெத்த பிரமித்தார்

10. ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் அழகாய் சிஷ்யர் சூழ
வழிப்பட்டார் அன்பாய் வரும் வழிதன்னில்
மாமன் வீட்டை பத்மபாதரும்
கண்டார் அங்கு புகுந்தார்

11. பந்து வர்க்கங்கள் இவரைக் கண்டார் பர
மானந்த கண்ணீர் பெருக நின்றார்
ஸந்தோஷத்துடன் அவருக்கு ஸகல உபசாரமும்
செய்தார் மனம் உய்தார்

12. மெத்த நாள் ஆச்சுதே பிரிந்தென்றார் சிலர்
உத்து உம்மைக்காண பெற்றோம் என்றார்
மெத்த பரிகாஸம் செய்தும் மெத்த ஸ்துதித்தும்பலபேர்
வந்தார் அங்கு வந்தார்

13. முன்னோர்கள் செய்த தவப்பயனே நீரும்
இந்நேரம் இங்கு வந்தீர் என்றார்
முன்னாள் பிரிந்த துன்பம் மறந்திட சிலநாள்
தங்கி செல்வீர் என்றாள்

## 248. விருத்தம்

உறவினர்கள் உரையைக் கேட்டு உகந்துமே ஈதுரைப்பார்
ஒருவித செயலும் நம்மால் உருவதிங்கில்லை பாரில்
விரும்பியதெய்திய போதும் விட்டொழிந்திட்ட போதும்
கருத்தினில் கருதாதேனோ களங்கமில் ஜீவன் முக்தன்

## 249. விருத்தம்

பசி என வந்தவற்கு பரிந்துமே அன்னமிட்டு
புசித்திடச் செய்வோன் யாவன் அவன் புண்ணியசாலி
என்றார்
சுசிபெற அவன் முன்னோர்கள் சுத்தலோகத்தை எய்தி
அசிபத லக்ஷியார் தம் ஆகுவர் ஐயமின்றே

## 167. பாட்டு.

" நடமாடி திரிந்த " — என்ற மெட்டு

தாளம் : ஜம்பை] பல்லவி [ராகம் : காம்போதி

பல பல விதமாச பந்து வர்க்கங்களுக் கெல்லாம்
பத்ம பாதரும் தத்துவம் போதித்தார்

அனுபல்லவி

சில காலம் தங்கிட வேண்டும் என்க
அகிலானந்த முடன் அவர் பிக்ஷை கொண்டார்
பின்னும் (பல பல)

சரணம்

1. பிக்ஷை முடிந்ததும் சிஷ்யன் கையிலிருக்கும்
சிறந்த கிரந்தமேதென்று சிறக்க மாமனும் கேட்க
பக்ஷமுடன் பத்மபாதர் கேட்டு சிறக்க
பாஷியத்திற்கு செய்த வியாக்கியானம்'இது என்க
(பல பல)

2. பார்த்திட ஆவல் என்று பாங்காய் மாமன் உரைக்க
பத்ம பாதரும் சரி என்று அளித்து நிற்க
பார்த்தார் மிக பிரமித்தார் பரமானந்தமே மிக்க
பகர வெண்ணாததான பொருமையும் மேல் ஓங்க
(பல பல)

3. தன்மதத்தை அவர் தாழ்த்தி உரைத்ததையும்
உன்னிதமாய் அத்துவைதம் உயர்த்தி உரைத்ததையும்
தன்னுள்ளறிந்தவர்தான் கொண்டார் பகையையும்
பின்னும் அறியாதவர் மேலே புகழ்ந்ததையும் (பலபல)

4. இந்த கிரந்தம் உம்மிடம் தந்து செல்கிறேன் என்றார்
சொந்த பொருள் போல் இதை ரக்ஷித்துகொள்வீர்
என்றார்
எந்தன் உயிருக்கு ஈடானது இது என்றார்
வந்திடுவேன் சிஷ்யருடன் சேது சென்று என்றார்
(பல பல)

5. புறப்படும் சமயத்தில் பொருந்தவில்லை சகுனம்
புறப்படும் வேளையில் இடதுகண் துடித்தது
புறப்படும் தருணத்தில் தும்மி நின்றான் ஒருவன்
புறப்பட்டார் அவைகளை பொருட்படுத்தாமல் நன்றாய்
(பல பல)

## 250. விருத்தம்

மாமனும் மனதில் நன்றாய் மன்னி யோசனையும் செய்தார்
க்ஷேமமாய் இந்த நூலும் நிலவிடும் மேல் உலகில்

தாமதமன்றி கிரந்தம் தாரணி எங்கும் ஓங்கும்
நாமியற்றிய நூலுக்கு நறுமணமற்றே போகும்

## 168. பாட்டு

" அடைந்தவர்கள் பவ பந்தம் " — என்ற மெட்டு

கண்ணிகள்

1. இந்த கிரந்தம் உலகில் இருந்து விடுமாகில்
எந்தன் குரு நாதன் பாதம் மங்கிவிடும் பாரில்
2. இவருடன் நாம் வாது செய்து ஜெயிப்பதரிதாகும்
அவர் வருமுன் கிரந்தமதை எரிப்பது நன்றாகும்
3. தன் மதத்தைக் காற்க வென்று தன்னுள்ளத்தே கொண்டு
தன்மனைக்கே தீயைவைத்தார் தான் பொறுமைமூண்டு
4. அருமையான கிரந்தத்தையும் தன்னகத்துள் வைத்து
நெருப்பை வைத்தார் நெஞ்சில் அவர் வஞ்சகமே சேர்ந்து
5. வீடு பற்றி எரியுதென்று விரைந்து அவர் கூவ
ஓடோடி வந்து அங்கு உறவினர்கள் மேவ
6. பத்மபாதர் அகஸ்தியர் ஆசிரமமதைக் கண்டார்
உத்தம ராமன் தர்ப சயனம் கண்டு மகிழ்ந்தார்
7. சிஷ்யர்கள் இதன் பெருமை கேட்கவேண்டுமென்க
பக்ஷமுடன் பத்மபாதர் பகர்ந்திடுவார் சிறக்க
8. சீதை தன்னையடையும் வழி தெரிந்திடாமல் ராமன்
வேதனையால் ராமன் தர்ப சயனம் கொண்டார்
9. வெகு தூரம் தன்னில் ஒரு ஜோதி ஒன்றை கண்டார்
அகமகிழ்ந்து செல்ல அங்கு அகஸ்தியரைக் கண்டார்
10. மனக்கவலை தீர அந்த மாமுனியைப் பணிந்தார்
தினகரனென திகழும் தேவியையும் பணிந்தார்

11. சிறக்க அவர் பாதங்களுக்கு பூஜையது புரிந்தார்
கரம் குவித்து கவலையற்று தைரியம் மிகக் கொண்டார்

12. இந்தக்கடல் தன்னை இப்போ கடக்க அறியாமல்
எந்தையே கலங்குகின்றேன் கருணை வையும் என்றார்

13. சிங்காஸனமிழந்து திரு முடியும் துறந்து
வெங்கானம் தனிலே விரைவுடனே நடந்து

14. தம்பி லக்ஷ்மணனுடனும் ஜானகி தன்னுடனும்
வெம்பியே கானகத்தில் வேண துன்பம் அடைந்தேன்

15. மாயா மானாக அங்கு மாரீசன் வரவே
மாயமென்று அறியாமல் மைதிலியும் வேண்ட

16. வேதனையுடனே நானும் மாயாமானைத் தொடர
சோதனையால் "ஆ, ஸீதா, லக்ஷ்மணா" என்றலற

17. சப்தமதைக் கேட்கலுமே ஜானகியும் பயந்து
தப்பாமல் செல்லென்று தம்பியையும் விடுத்தாள்

18. அதையறிந்து ராவணனும் ஸந்நியாஸியாகி
பதைத்து நின்ற பாவைதன்னை பாவி கொண்டு
சென்றான்

19. ஜானகியை பிரிந்து மிக தாபம் கொண்டேன் ஐயா
ஞான ஸ்வரூபரே நீர் அருள் புரிவீர் என்றார்

20 இந்த மொழி கேட்கலுமே இரங்கி முனி சொல்வார்
சிந்தை நீ தளர்வதும் சரியாமோ சொல்வாய்

21. துக்க ஸுகம் தொல்லுலகின் இயல்பல்லவோ ராமா
மிக்கவும் அறியாதவர் போல் உரைக்கலாமா

22. வில்லாளியான வீர ராகவனே உமக்கு
சொல் தவறாத தம்பி சூழ்ந்து உன்னை இருக்க

23. சுக்ரீவர் முதலான வானரங்கள் இருக்க
அக்கரைக்குச் செல்வதற்கு ஆயாசம் ஏனோ

24. ஒருக்ஷணத்தில் இக்கடலைக் குடித்துமே நான் உம்மை
வருத்தமின்றி செல்லச்செய்வேன் வள்ளலே ஆனாலும்

25. உன் பெருமை உலகறிய உத்தமனே வேண்டும்
அன்புடன் நீர் அணைகட்டி அரக்கன் நகர் செல்வீர்

26. ஜானகியை மீட்டி இங்கு ஜடுதியினில் வருவீர்
வானரப்படைகள் ஸேது கட்டிடுவார் ஐயா

27. துஷ்டனான ராவணனை ஸம்ஹாரம் செய்து
பட்டாபிராமனே நீர் பாங்குடனே வருவீர்

28. என்று அகஸ்திய முனியும் எடுத்துரைத்த மொழியை
நன்று என்று ராகவனும் நாடியுளம் கொண்டார்

29. கானகத்தில் உள்ள கல்மலைகளெல்லாம் கொணர்ந்து
வானரப்படைகள் இலங்கை செல்ல வழியிட்டார்

30. இலங்கைதன்னில் புகுந்து அவர் ராவணனைக்கொன்று
துலங்க ஸீதை தனை கொணர்ந்த இடமிதுவே என்றார்

31. ஸ்தலமகிமை கேட்டுமிக ஸந்தோஷம் கொண்டு
அலகிலா ஆனந்தமுடன் அங்கு ஸ்நானம் செய்தார்

32. பத்மபாதர் பாங்குடனே ஸ்தல மகிமையுரைக்க
மற்ற சிஷ்யர் கேட்டு மிக மனது மெத்தக் களிக்க

33. ராமேசுவரம் தனிலே நாட்கள் சில தங்கி
பூமானந்தத்துடன் பூரித்துமே மகிழ்ந்தார்

34. மெத்த மெத்த வித்துவான்கள் மேவி அங்கு அவரை
மெத்தவும் கேள்விகள் கேட்டு சித்தம் மிக தெளிந்தார்

## 251. விருத்தம்

தீர்த்த யாத்திரைகள் செய்து திரும்பிட மாமன் வீடு
கீர்த்தியாய் அடைந்தார் அங்கு கிளிர்மதி என்ன நன்றாய்
ஆர்திகள் தீர்க்கும் எந்தன் அருமையாம் சாஸ்திரம்தன்னை
பார்த்தீரோ வென்று பத்மபாதரும் பகர்ந்தார் அப்போ

## 169. பாட்டு

"வேனி மரச்சாரலிலே ஸ்வாமி" — என்ற மெட்டு

கண்ணிகள்

1. என்னை நம்பி புஸ்தகத்தைத் தந்தாய் என்பால்
என்ன செய்வேன் தீக்கிரையாய் ஆனதென்பால்

2. இல்லம் எரிந்தால் துன்பமில்லை
சொல்ல வொண்ணு துன்பம் பாஷிய மிழந்ததென்ருர்

3. மாமனே நீர் மனக்கவலை கொள்ள வேண்டாம்
நாமென்ன செய்வோம் விதியின் பயன் ஈதென்பார்

4. புத்தி சக்தி கொண்டு புதிதாக
மெத்தவும் விரிவாக உரை செய்வேன் என்ருர்

5. இந்த உரை கேட்டு மாமன் அப்போ
மந்த மதியாகிவிடவே மருந்தும் இட்டார்

6. உத்தமன் உண்ணும் அன்னத்தில் ஒன்ருய்
பத்திரமாகக் கலந்தார் நன்ருய்

7. அன்னத்தை புஜிக்க பத்மபாதர்
முன்னுள்ள பிரக்ஞை இழந்தார் — பத்மபாதர்

8. புத்தியின் வலிமை குறைவாலே
சக்தியற்ருர் கிரந்தமும் எழுத மேலே

9. இன்னும் சிலர் தீர்த்த யாத்திரை செய்து
அன்புடனே அங்கு வந்தார் உய்து

10. பத்மபாதரை பணிந்து நின்ருர்
மெத்தவும் ஆனந்தம் கொண்டு மகிழ்ந்தார்

11. ஸாதுக்களைக் கண்டவுடன் பத்மபாதர்
போதம் மிக திகழக் கண்டார் பத்மபாதர்

12. ஆசாரியர் பாதம் தன்னை எண்ணி
நேசமுடன் தியானம் ஸ்துதி பண்ணி

13. தனது தேக க்ஷேம லாபம் பத்மபாதர்
மனமுவந்து கேட்டிடவே பத்மபாதர்

14. ஆரியர் பிரிவை எண்ணி நொந்தார்
சீருடன் காணவே அவர் விரைந்தார்

15. கேரள தேசத்தில் குரு நாதன்
நேருடன் காணவே அங்கு சென்றார்

## 252 விருத்தம்

யதீசரும் மாதுர் கர்மம் எண்ணிய படியே செய்து
அதீதமாய் வளம் நிறைந்த அழகுள்ள கேரளத்தில்
மதி திகழ் வானம் போலெ மனமது மகிழ்ந்து மிக்க
துதிபெற வாழ்ந்து வந்தார் தூய ஸத்குருவும் அங்கு

## 170. பாட்டு.

" நாத விந்து கலாதி நமோ நம: " — என்ற மெட்டு
திருப்புகழ்

1. மஹா சுரேச்வரர் என்னும் விஷ்ணு ஸ்தலத்தை
மஹானும் கண்டு மகிழ்ந்தார் அங்கு அவர்
நிகரற்ற ஸ்துதி செய்து பகவானைப் — பணிந்தார்

2. ஈடில்லா பக்தி மிகக் கொண்டு வணங்கிடும்
சீடரைக் காண சிந்தையில் நினைந்தவர்
வாடி வரவை எதிர் நோக்கியே சங்கரரும் —
இருந்தாரே

3. ஆத்ம தத்துவம் அறிந்த அச்சிஷ்யர்கள்
யாத்திரை முடிந்தானந்த மாகவே
நேத்திரமாம் குரு நாதனைக் காண அங்கு — வந்தாரே

4. ஐயா சரணம் அருள் மெய்யா சரணம் கிருபை
செய்வாய் சரண மென கிலேசமுடனே அவர்
மெய்யன்புடனே உருகி மேஷிப் பணிந்துகொண்டார்
— பத்மபாதர்

5. ஸ்ரீகுரு நாதன் ஸ்ரீரங்க நாதரை சிந்தை
குளிர தரிசித்து வருகையில்
பிரீதியுடன் பூர்வாசிரம பந்துக்கள் — வந்தாரே

6. பேதமதிகொண்ட பந்து வர்க்கமெல்லாம்
பாதம் பணிந்து பரிந்து
சூதறியாமலே சுத்த பாஷியத்தின் டீகை —
படித்தேனே

7. கேட்டிடவே தாய் மாமனும் மனதினில்
தேட்டமுடன் வாதம் செய்திடவே அவரை
வாட்டங் கொள்ளும்படி வள்ளலே உம்மருளால் —
ஜயித்தேனே

8. பக்தி முத்திரைகளை தரித்து உலகில்
சகலரையும் வசம் செய்யும் மாமன் தன்னை
யுக்தி நிறைந்ததான தத்துவ மொழியால் —
ஜயித்தேனே

9. யுக்திகளாகிய மூங்கில்களிலிருந்து
முத்துக்களாம் உமது சொற் கவசம் அதை
உத்தமனே தரித்து யுத்தம் செய்தவர்களை —
ஜயித்தேனே

10. மெத்த உபசாரம் செய்த மாமன் கிருகத்தில்
சுத்தமாம் பாஷிய டீகையை வைத்து அகத்தில்
மெத்த சந்தோஷமாய் மேவி ராமேசுவரத்தை —
அடைந்தேனே

11. வீட்டுடனே மூகையும் வெந்தணலில் எரிந்து
வெந்தது என்று என் மாமன் உரைத்திடவே
மீட்ட வொண்ணு துன்பத்தினுல் மிகவும் —
நொந்தேனே

12. பின்னையும் புத்தியை பேதிக்க எண்ணியே
அன்னத்தில் ஔஷதம் தன்னை கலந்தவர்
என்னை உண்ணும்படி செய்து புத்தி மயங்க —
விட்டாரே

13. முன் போல் என்புத்தி தெளிந்து உம்மருளால்
உன்னி விருத்தி உரை செய்ய அருளுவீர்
ஐயனே எனக்கும் உம்மை யல்லால் கதி — இனி எது

14. பத்ம பாதரும் பகவத் பாதர் திரு
பாதம் பணிந்து பகர்ந்திடவே அப்போ
சித்தம் இரங்கி ஸ்ரீ சங்கரரும் மகிழ்ந்து —
உரைப்பார்

15. கர்ம வினையைக் கடந்திடக் கூடுமோ
கர்ம பலன் அனுபவியாது விடுமோ
துர்நிமித்தம் கண்டு சுரேஸ்வரரிடம் அன்றே —
உரைத்தேனே

16. அன்று என் முன்னிலையில் அன்புடன் படித்த
உன்னித பஞ்சபாதி என் மனதினில்
சொன்னபடியே இருக்கின்றது அதனை —
உரைப்பேனே

17. பத்மபாதரின் மனம் சாந்தியடைந்திட
அத்தனை கலைக்கும் அதிபதியாம் சங்கரர்
யுக்திகள் நிறைந்த பஞ்சபாதியை முன்போல் —
உரைத்தாரே

18. பழுதின்றியே பஞ்சபாதியை பத்மபாதர்
எழுதியெடுத்தார் எல்லையில்லா ஆனந்தம் கொண்டு
தொழுதுபணிந்து கானம் செய்து நர்த்தனம்செய்தும்
— மகிழ்ந்தாரே

19. கல்வியில் வல்லோனும் கபடமற்றோனும்
கருணை பிரஜைகளிடம் கொண்டோனும்
அவனியில் மிக கீர்த்தி கொண்ட அரசன் அங்கு —
வந்தானே

20. கேரள தேசத்தை கம்பீரத்துடன் ஆளும்
தீரனும் ராஜசேகர அரசனும்
பேரானந்தத்துடன் பரமஹம்ஸர் பாதம்—பணிந்தானே

21. முன்னாள் எழுதிய மூன்று நாடகங்களும்
பின்னாள் பிரசித்தி யடைந்தனவோ என்று
தன்மை கொண்டு சங்கரர் சந்தோஷமாய் ராஜனைக் —
கேட்டாரே

22. ஐயனே என்ன செய்வேன் அக்கினிக்கிரையாகி
அழிந்து விட்டதே என் நாடகம் மூன்று மென்றார்
துய்யனும் சொல்கிறேன் துரிதமாய் ராஜனே எழுது
என்றார்

23. மெத்த வியப்புடனே வேந்தனும் எழுதி
அத்தனே இனி நான் ஆற்றும் பணி எதென
சித்தம் மகிழ்ந்தவன் ஸ்ரீகுரு பாதத்தில் பணிந்தானே

24. சாலவும் துன்பம் இழைத்து சதி செய்த
காலடி க்ஷேத்திர வாசிகளுக்கு நீரும்
மேலும் கர்மங்களுக்கு அதிகாரம் இல்லையென்று
விதிப்பீரே

25. சத்குருவின் ஆக்ஞையென்று சந்தோஷித்து
சித்தம் மகிழ்ந்து பணி செய்துமே உகந்து
பத்மபாதர் முதலான சிஷ்யர்களும் பணிந்தாரே

விருத்தம் : 7 ] [ பாட்டு : 6

பதினான்காவது அத்தியாயம் முற்றிற்று.

———o———

# பதினைந்தாவது அத்தியாயம்.

## ஆசாரியர் செய்த திக் விஜயம்

### 253. விருத்தம்

தீரராய் விளங்கும் ஆசான் திக்கெட்டும் விஜயம் செய்ய
நேரதாய்க் கொண்டு நெஞ்சில் நேர்மையாய் சிஷ்யர் சூழ
சீரதாய் விளங்குகின்ற சுதன்வ ராஜன் தன்னோடும்
வீர ராகவனால் செய்த விமல சேதுவை முன் கண்டார்

### 171. பாட்டு

" மனமே ஈசன் பாதத்தை நாடு " — என்ற மெட்டு.

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : புன்னாகவராளி

சென்றார் சென்றார் ஸ்ரீகுருவும் சேது யாத்திரைக்கு
விரைந்து

அனுபல்லவி

1. அன்னையின் பூஜையில் அபிமான முள்ளவர் போல்
உன்னிதமாம் மெத்த விஷயம் அறிந்தவர் போல்
இன்னிலத்தவரை ஏமாற்றும் சாக்தரை கண்டார் —
கண்டார்

2. தர்மமார்க்கத்தை சாற்றிய சாக்தரை
நிர்மலமாய் செய்தார் நிமிஷத்தில் சங்கரர்
கர்மமார்க்கத்தை கர்த்தனும் சிறப்புடன் அமைத்தார்

3. ராமனுதரை பூஜித்து மகிழ்ந்துகந்தார்
தாமதமின்றி மாயா தேசத்தை யடைந்தார்
நேமமுடன் சோள தேசத்தையும் கண்டார் —
பணிந்தார் யாரும்

4. காஞ்சி மாநகர் தன்னில் களிப்புடன் சென்ருர்
வாஞ்சையுடன் தேவி கோவில் ஒன்று செய்தார்
வாஞ்சித பலன் தரும் வஸ்து சொரூபிணியை —
பஜித்தார் பூஜித்தார்

5. திரும்பி வரும் வழியில் திருவெங்கிட நாதரை
விரும்பிப் பணிந்தவர் வேதாந்த நூலை
பருவம் அடைந்த பலபேருக்கு உபதேசித்து
மகிழ்ந்தார் —மெத்த

6. விதர்ப தேசத்திற்கு விரைவுடன் சென்ருர்
எதிர்த்த பைரவ மதங்களை வென்ருர்
சதிசெய்யும் அஷ்ட மதஸ்தரை சிஷ்யரால் — அவர்

7. கர்ணுடக தேசம் காணவே விரும்பினுர்
விதர்ப ராஜனும் விரைந்ததை மறுத்தனா
தர்ம பிரபுவே தங்கள் புகழ் கேட்க சகியார் —
துஷ்டர் மிக

8. காபாலிக மதஸ்தர் கணக்கின்றியே வருவார்
ஆபத் பந்தோ! மிக அக்கிரமங்கள் புரிவார்
பாவகிருத்தியங்கள் செய்வார் பைரவ பூஜைசெய்து
— அறிவீர் நன்ருய் தெரிவீர்

## 254. விருத்தம்

இந்த விதமாகவே விதர்ப ராஜனும் விளங்கவே
உரைக்கும் போது

அந்த உரை கேட்டதும் அன்புடன் நல்ருய் சுதன்
வனும் ராஜனும் ஈதுரைப்பான்
எந்த வித கவலையும் இனி வேண்டாம் அய்யனே
'எதிர்த்து நான் போராடுவேன்
அந்த மொழி கேட்கவே யதி சக்ரவர்த்தியும் நடந்தார்

## 172. பாட்டு

" இசைந்த சூலமும் " — என்ற மெட்டு

கண்ணிகள்

1. கடலைப் போலவே கணக்கின்றி காபாலிகர் வந்தாரே
திடமுடன் சுதன்வ ராஜனும் அவரை ஜெயித்தாரே
2. ஆயிர மாயிரமாக காபாலிகர் வந்தாரே
தூய விப்ரர்களின் சிரமறுக்க அவர் துணிந்தாரே
3. சங்கர ஸத்குரோ சரணமென்று விப்ரர் பணிந்தாரே
சங்கரர் ஹூம் காரம் செய்ய சாம்பலாய் அவர்
ஆனரே
4. கூட்டங்கள் மாண்டதைக் கேட்டு காபாலிக
தலைவனும்
நாட்டமுடன் சங்கரர் தன்னை பார்த்தவன்
உரைப்பானே
5. பார் ! உன்னை பஸ்மமாய் செய்குவேன் என்றவன்
கண்மூடி
சீருடன் தியானம் செய்தனன் பைரவர் தனை நாடி
6. அக்கினி ஜ்வாலையின் ஒளிபோல் ஜெடையின் ஒளிவீச
உக்கிர பைரவரும் உகந்தார் அவன் எதிர் நின்றுபேச
7. வேண்டிய வரம் என்ன விரைவுடன் விளம்பென்று
ரைத்தாரே

ஆண்டவனே தீங்கு செய்தோரை கொல்லவேண்டும்
என்றானே

8. எந்தனுக்கே தீங்கு செய்திடவென்றே நினைந்தாயே
உந்தனையே இப்போ ஒழித்திடுவேன் என்று
வதைத்தாரே

9. மஹா பைரவரை யதி சங்கரர் ஸ்துதித்தாரே
அகாதமான கஷ்டங்களை கடந்து மகிழ்ந்தாரே

10. அந்தணரும் அங்கு அன்புடன் சங்கரரை பணிந்தாரே
சிந்தை மகிழ்ந்து ஜகத்குருவை மிகப்புகழ்ந்தாரே

11. அங்கிருந்து சங்கரர் அன்புடன் கோகர்ணம்
சென்றாரே

பொங்கும் ஸாகரம் தனில் அங்கம் பூரிக்க ஸ்நானம்
செய்தாரே

12. பார்வதி நாதன் பாதம் பணிந்து மிக மகிழ்ந்தாரே
சீர்பெரும் புஜங்க ஸ்தோத்திரத்தால் அவரைப்
புகழ்ந்தாரே

13. அடைந்த சிஷ்யருக்கு ஆத்ம தத்துவம் உரைத்தாரே
தடையற்றானந்தம் கொண்டு ஸகலரும் இருந்தாரே

14. சிரக்க அவர் புகழ் கேட்டு குருவிடம் உரைத்தாரே
நிரம்ப அகங்கொண்ட நீலகண்டரும் அதை
அறிந்தாரே

15. சங்கரர் என்ற பேர் கொண்ட யதி ஸர்வமதங்களேன்
எங்கிலும் புகழ் பெற ஜயித்து வருகிறார் மஹான்
களேன்

16. மண்டனர் முதலான பல பண்டிதர்களையும் ஜயம்
கொண்டு

தொண்டராய் செய்து மண்டலத்தோர் புகழ
வருகின்றார்

17. பார்வதி நாதன் கோயிலினில் பதியாய் இருக்கின்றார்
பார்த்தவர் பாதம் பணிந்துமே பக்தனாய் விடுகின்றார்

18. நீலகண்டரும் இவர் நிகழ்த்திய மொழியை அறிந்தாரே
சீலமுடன் அவரை ஜயிக்க மனதினில் நினைந்தாரே

## 255. விருத்தம்

மெத்தவும் புகழ் பெற்றோனாய் மேதினி எங்கும் சுற்றி
மெத்த பண்டிதர்கள் தன்னை மேவியே ஜயித்தோன்என்றாய்
மெத்த வல்லமை நிறைந்தோன் மேதையில் மிக்கோன்
என்றாய்
உத்தென்னை ஜெயிக்க வல்லாய் உந்தன் உள்ளத்தில்
கொள்வாய்

## 173 பாட்டு

"ஆகா தாகாதே" — என்ற மெட்டு

கண்ணிகள்

1. யுக்தி யெல்லாம் அறிந்தாலும் வித்தி எல்லாம்
படித்தாலும்
உத்து என்னை ஜயிப்பது மெத்த அரிதே
உத்தம வாது செய்வது மிக பெரிதே

2. அங்கமதில் துங்கமாம் விபூதி ருத்திராக்ஷங்கள் பூண்டு
பொங்கியே கோபமும் கொண்டு அங்கு வரவே
பாங்காய் அநேகம் சிஷ்யர் சூழவே

3. நீலகண்ட மாமுனியும் நிகழ்மதி சங்கரரை
கோலாகலத்துடன் கண்டு கூறலுற்றார்
தன் மதத்தை மிகவும் போற்றியே நின்றார்

4. புத்தியில் மெத்த சிறந்த சுரேச்வர ஆசாரியரும்
அத்தனே அறிந்து நானே வருவேன் என்றார்
உத்திரவு தந்திடுவீர் உகந்து என்றார்

5. அங்கவர் உரைத்திடவே சங்கரும் கேட்டதனை
இங்கு இவரை ஜயிப்பது மிக எளிதே
அங்கம் பூரிக்க வாது செய்யவே இப்போதே

6. நிர்மல சங்கரரும் நீலகண்டர் மதத்தை
நிராகரித்து தன் மதத்தை நிரவச் செய்தார்
மிகவும் எங்கெங்கும் பரவச் செய்தார்

7. அத்தருணம் நீலகண்டர் அத்துவைதத்தை இகழ்ந்து
உத்தமமானது தன் மதம் என்று புகழ்ந்தார்
மெத்தவும் சித்தம் மகிழ்ந்தார்

## 256. விருத்தம்

சுருதிகளின் கருத்தை சோதித்து அறிந்திடாமல்
உறுதியாய் உள்ளம் தன்னில் கொள்வதில் உண்மையாமோ
இறுதியில் இருளும் நன்றாய் இலங்கிடும் ஒளியும் ஒன்றாய்
மருவியே இருப்பதுண்டோ மதத்தலைவரே இங்கென்றார்

## 174. பாட்டு

"ஏகாக்கிரமாய் இருந்து" — என்ற மெட்டு

தாளம் : ஜம்பை] பல்லவி [ராகம் : பேகடை

ஜீவாத்மா பரமாத்மா திகழ்ந்திடும் அபேதமும்
சரியல்ல யதீசுவரரே

அநுபல்லவி

ஜீவனும் ஈசனும் சரி என உரைத்திடில்
திகழ் பிம்பமும் பிரதி பிம்பமும் ஒன்றாமதில்

சரணம்

1. சேதனத்துடனே அசேதனம் ஒன்றாமோ
சோதனை செய்யாது உரைப்பது நன்றாமோ

போதனை செய்குவீர் புவியில் கண்ணுடியில்
கண்ட முகமும் பொய்யாகுமே என்னும் (ஜீவாத்)

2. ஸர்வக்ஞனும் ஈசனும் கிஞ்சிக்ஞனும் ஜீவனும்
ஸர்வ காலமும் பேதம் ஸகஜமாகையினுலும்
ஸர்வமும் அறிந்த நீர் சாற்றுவதினுலும்
ஸர்வ உபாதி தள்ள சைதன்ய மென்ருலும் (ஜீவாத்)

3. மெத்த பிரமாணங்கள் மேவியுரைக்க அதை
அத்தனையும் பிசகென்று மறுத்தால் அதை
ஒத்துக் கொள்வார்களோ உத்தமரும் இதை
எத்தனை ஜாதிபேதம் ஏற்பட்டிருக்க இதை (ஜீவாத்)

4. தாமரைத் தடாகத்தை தகர்த்த யானையை போலே
மாமறை பொருளாகும் பரம அத்துவைதத்தை
தாமதம் கொள்ளாமல் தவிர்த்து நீலகண்டரும்
தாமதமன்றி சாற்றலுற்ருர் சங்கரரும் (ஜீவாத்)

5. நீலகண்டரே நீரும் உரைத்தது சரியாகும்
நேர்மையாம் தத்துவமஸி வாக்கிய மிதுவாகும்
மேவான் கண்ட சச்சிதானந்தமே யாகும்
மேலும் உரைப்பேன் நீரும் கேட்க தகுந்திடும் (ஜீவா)

## 257. விருத்தம்.

வாக்கிய லக்ஷியத்தை வகையுடன் அறிந்திடாமல்
பேச்சினுல் ஆவதுண்டோ பிரித்து நீர் பார்த்ததுண்டோ
வாக்கிய பொருளாம் பேதம் லக்ஷியபொருள் அபேதம்
பேச்சுரையற்ற வஸ்து பார்த்திடில் ஒன்றே என்ருர்

## 258. விருத்தம்

தேச காலத்தை விட்டு திகழுற பார்க்கும்போது
தேவத்துவம் விளங்கும் தேவதத்தனை அங்கு காட்டும்

கூசிடாதெவரும் நன்றாய் கோதர விசாரிக்குங்கால்
மாசிலா வஸ்து ஒன்றாய் மன்னியே நிற்கும் கண்டீர்

## 175. பாட்டு

"ரூப சந்திரனே" — என்ற மெட்டு.

இங்கிலீஷ் நோட்டு

1. மெத்த பிரமாணங்களை உத்தமனும் உரைக்க
அத்தனையும் கேட்டவர் கேட்கவே
சித்தம் நன்றாய் தெளிந்து சிஷ்யர் எல்லாம் சூழவே
அத்தனும் சங்கரரை அடைந்திட்டார்

2. சைவ மதம் ஜயித்து சங்கரரும் ஜொலித்து
மெய்யனும் அன்புடன் விளங்கினார்
துய்ய ஸௌராஷ்டிர தேசத்தை
துருஸாடனே அடைந்தார் சூழும் சிஷ்யருடனே
அருமையுடன் பாஷியத்தை போதித்தார்

3. வேகமுடனே அவர் துவாரகையை அடைந்தனர்
மோகம் கொண்ட சிலரைக் கண்டனர்
தேகமெங்கும் முத்திரைகளை தீக்ஷண்ணியமாகக்
கொண்டவர்
தாக்ஷிண்ணிய மில்லாமலே தங்கி இருக்கும் அந்த
வைஷ்ணவரை சங்கரர் பார்த்திட்டார்

4. அஞ்சுவித பேதத்தை நெஞ்சில் அறிந்தவர்கள்
சஞ்சலம் கொண்ட மெத்த தீனர்கள்
மிஞ்சும் சிங்கத்தால் யானைகள் துஞ்சிடுவது போலவே
துருஸாடன் சிஷ்யரெல்லாம்
அஞ்சாமலே வாதில் ஜெயித்திட்டார்

5. சக்தி நிறைந்ததான சாக்தர் சைவர்களையும்
ஸௌரர் வைஷ்ணவரையும் ஜெயித்திட்டார்

மிக்க ஆனந்தம் கொண்டுமே
மேன்மை மிகுந்த அந்த உஜ்ஜயினி பட்டணத்தை
மேவியே சங்கரர் நடந்திட்டார்

6. மேககர்ச்சனை என மேவி எங்கும் ஒலிக்கும்
மிருதங்க வாத்தியமதை கேட்கவே
மோகமற்ற ஸ்ரீ சங்கரர்
வேகமுடன் வரும் விதவித புஷ்பங்களின்
வாஸனை திக்கெட்டும் கமழவே

7. மகத்வம் நிறைந்த மஹா காளேஸ்வர் கோயிலில்
ஜெகத்குருவும் மகிழ்ந்து சென்றனர்
மிகவும் சிவனை ஸ்துதித்தவர் மேன்மையாக சிறந்தார்
திகழும் மண்டபம் தன்னில் சிரமம் தணிய
சங்கரர் சிறப்புடன் தங்கி இருந்தார்

8. பத்ம பாதரே நீரும் பட்டபாஸ்கரரிடம்
உத்திங்கு வந்ததை நீர் உரைத்திடும்
ஸத்குருவும் உணர்ந்திட ஸந்தோஷமாக கேட்டிட
மெத்த வினயத்துடன் மேவி பணிந்தவரும்
உத்தரவுடன் அவர் சென்றிட்டார்

9. எத்திக்கும் கீர்த்தியுடன் எல்லையில்லா புகழால்
எங்கும் வேதாந்த மழை பெய்துமே
யுக்திகள் பல உரைத்துமே உவக்கையாய் மதம்
ஜயித்துமே
சக்ரவர்த்தியாக திகழும் சங்கரர் உம்மை
சந்திக்க சீக்கிரம் விரைந்தனர்

10. அறிவில் சிறந்தவரே ஆராய்ந்துணர்ந்தவரே
அத்துவைத மார்க்கம் தன்னை கொள்ளுவீர்
பெறுவீர் பேரானந்தம் நீர்

பறக்கும் உமது கொள்கை என்னும் சிறகை
அறுக்க வஜ்ராயுதமாய் வந்தனார்

11. நிந்தித்துரைத்ததனை சிந்தைதனில் அறிந்து
சீறியே பாஸ்கரர் சினத்துடன்
எந்தன் புகழை நீர் அறிந்திலீர் உந்தன் குருவிடம் சென்று
உரைப்பீர் நீர் இங்குற்றதோர் வித்வான்களின் சிரஸ்ஸில்
உகந்து நடனம் செய்வேன் என்று நான்

12. காணுதார்கள் மதத்தை காணுமலே துலைத்தேன்
கபிலர் மதத்தையும் விரட்டினேன்
தோணு மோ இங்கு உம் சொற்கள்
சொல்லும் குருவிடத்தில் தோற்பதுறுதி என்று
துறவியே சீக்கிரமாய் சென்றுமே

13. பட்டபாஸ்கரர் மொழி பத்ம பாதரும் கேட்டு
திட்டமுடனே பதில் கூறுவார்
எட்டுதிக்கும் ஜயித்தவர் எல்லையில்லா புகழ் உற்றவர்
துஷ்டரே நீரவரை தூஷித்துரைத்திடில் நீர்
கஷ்டம் அடைகுவீர் ஈதறிந்திடும்

## 259. விருத்தம்

உத்தம ஞானங்களுக்கு உறைவிடமாய் விளங்கும்
மெத்தவும் கருணை பூத்த மெல்லிய அடியை காண
பத்ம பாதரும் விரைந்து பாங்குடன் வந்து நின்றூர்
சுத்தனே கேட்பீர் என்று தொகுத்துரை செய்தாரே

## 176. பாட்டு.

" போஜனம் செய்ய வாருங்கள் " — என்ற மெட்டு

தாளம் : ஆதி]   பல்லவி   [ராகம் : நாதநாமகிரியை

பட்ட பாஸ்கரரும் வந்தார் பரமனை நாடி
பட்ட பாஸ்கரரும் வந்தார்

அனுபல்லவி

எட்டுதிக்கிலும் கீர்த்தி ஏகமாய் பரவியே
மட்டற்ற வெற்றியை மேலும் விரும்பியே

சரணம்

1. வெற்றி தோல்வி இது என்றறியாமலும்
மெம்மேலும் வாது புரிந்தனர் அதனாலும
உற்று அநேகம் பேர் சற்று இருக்கையாலும்
ஒருவர்க் கொருவர் தோல்வி இல்லாதிருப்பதாலும்
(பட்ட பாஸ்க)

2. சங்கரரும் அவர் சாமர்த்தியத்தைக் கண்டு
அங்கம் பூரித்து அநேக யுக்தியால் வென்று
அங்கு பாஸ்கரரும் அரைய வொண்ணமல் நின்று
சங்கரரும் ஜெயித்தார் சங்கைகளெல்லாம் வென்று
(பட்ட பாஸ்க)

3. மழைகாலத்து மேகம்போல் வாக்மழை பொழிந்திட
மன்னியே சபையோர்கள் கண்டு மகிழ்ந்திட
தழைத்தோங்க அத்துவைதம் ஸத்குரு ஜயித்திட
சரத்கால சந்திரன் போலவே திகழ்ந்திட (பட்ட பா)

(பல்லவிபோல்)

4. சங்கரரும் ஜெயித்து விட்டார் பாஸ்கரர் மதம்
அங்கிருந்து அவந்தி தேசத்தை நாடி சென்றார்

சங்கரரும் பாஷியம் ஸகலருக்கும் போதித்தார்
அங்குள்ள பாணன் மயூகன் மதம் துலைத்தார்
சங்கையில்லா சிஷ்யருடன் பால்ஹீக தேசமடைந்தார்
(பட்ட பாஸ்க)

5. ஆர்வம் மிகவும் கொண்டு அழகாய் பாஷியம் உரைக்க
ஆர்கத மதஸ்தர் ஆர்பாட்டத்துடன் எதிர்க்க
சீர் பெற ஸ்ரீகுரு ஜெயித்தார் அவர்கள் தோற்க
வேறு சில தேசங்களும் விமலனுமே நடக்க (பட்ட)

6. காமரூப தேசம் கருணைமூர்த்தியும் செல்ல
காணவே அங்கு வந்தார் அபிநவ குப்தர் மெல்ல
தாம் அகம் கொண்ட அந்த சாக்தர்களை வெல்ல
நாதனும் பாஷியம் அவர்களுக்குகந்து சொல்ல
வேத மென்றும் வெண் தாமரை மலருக்கு
போத மெனும் பானுவாகும் இவருக்கு
வேதனை தீரவே விரைவில் ஆபிசாரத்தால்
பூதலத்தில் ஜயம் கொண்டு விடலாம் (பட்ட பா)

(பல்லவிபோல்)

7. அபினவ குப்தனும் வந்தான் வள்ளலிடத்தில்
இந்த விதமாகவே எண்ணியே மனதினில்
எந்தவிதம் ஜயிக்கலாம் சிஷ்யரிடத்தில்
மந்திராலோசனை செய்து மாசடைந்த உள்ளத்தில்
வந்த சிஷ்யன் போலே வஞ்சகமாய் அவ்விடத்தில்
(பட்ட பாஸ்க)

8. வட தேசம் ஜயித்து வகையிலா சிஷ்யருடன்
திடமுடன் கோசலம் சென்றார் ஆனந்தத்துடன்
இடத்தில் சிறந்ததான அங்கு வங்க தேசத்துடன்
விடாமுயற்சி கொண்டு விரைந்தார் விளங்கவே தான்
(பட்ட பாஸ்)

9. முராரி மிச்ரரையும் உதயனாசாரியரையும்
திறமிகக் கொண்டதான தர்ம புத்திரன் தன்னையும்
பரந்த கீர்த்தி படைத்த பரமஹம்ஸர் பின்னையும்
சிரமம் அன்றியில் ஜயித்தார் கௌட தேசத்தினையும்
(பட்ட பாஸ்)

10. அத்துவைதத்தை நிந்தித்து அக்கிரம புத்திகொண்ட
புத்த மதஸ்தரையும் புகழ்பெறவே ஜயித்து
எத்திக்கும் கீர்த்தி கொண்டு எல்லா மதஸ்தரையும்
மெத்தவுமே சிஷ்யராக்கி விருது முழங்க வந்தார்
(பட்ட பாஸ்)

11. பண்டிதரான மண்டன மிச்ரர் முதல்
பாவிகளான பாஷண்டர் மதம் வரை
எண்டிசையும் புகழ எளிதில் ஜயித்துக்கொண்டார்
எல்லையில்லா ஆனந்தம் கொண்டு மிகுந்தார் சங்கரரும்
(பட்ட பாஸ்)

## 260. விருத்தம்

கணக்கற்ற மதங்கள் எல்லாம் கருணை வள்ளலும் ஜயித்தார்
குணக்குன்றாய் நின்றார் யாரும் கோமள பாதம் போற்ற
வணங்கியே அன்பருக்கு வழங்கினார் வாக்கியார்த்தம்
இணங்கியே மதஸ்தருக்கு ஹிதோபதேசமும் செய்தாரே

## 177. பாட்டு

" எப்படி பாடினரோ " — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : கர்னாடக தேவகாந்தாரி

தப்பற ஜெயித்து வந்தார் ஒப்பிலா சங்கரரும்
உகந்து வாது புரிந்து

அனுபல்லவி

இப்புவியோர் புகழ இரண்டாம் ரவியோ என
அப்ரமேயரும் அங்கு அநேக சிஷ்யர்கள் முன்னால்

சரணம்

1. பாதஞ்சலர்கள் வீரம் பறக்க அடித்து விட்டார்
பறந்த காபாலிகன் குடியைப் பறித்துவிட்டார்
கண்ணில் காணாதார் காவல்காரரை சுட்டார்
கவலைகொண்டு பௌத்தர் கழல் பணிந்து விட்டார்
(தப்பற)

2. சார்வாக மதஸ்தரின் சாகையில்லாமல் செய்தார்
ஆர்வத்துடன் பின்னையும் அநேக மதம் ஜயித்தார்
சீர்பெற சங்கரரும் திசையெங்கிலும் ஜயித்தார்
பார் முழுதும் அத்துவைதம் பரவிடச் செய்து
கார்த்தார் (தப்பற)

விருத்தம் 8 ] [பாட்டு 7

பதினைந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

# பதினாறுவது அத்தியாயம்.

## ஸ்ரீ சங்கரர் சர்வக்ஞபீடம் ஏறுவது.

### 261. விருத்தம்

யதிகளுக்கரசனாகி இலங்கிடும் சங்கரரும் அங்கு
துதி செய்ய சிஷ்யரெல்லாம் தூய பாதம் பணிந்து
கதி தரும் தெய்வமென்று கிலேசமற்றிருக்கும் வேளை
சதி செய்ய மதியும் கொண்டான் அபிநவ குப்தன்தானும்

## 178. பாட்டு

" மனமே மயக்கம் தெளியாயோ" — என்ற மெட்டு.

தாளம் : ஆதி ] பல்லவி [ ராகம் : மாயா மாளவ கௌளசிகா

ஆபிசார பிரயோகம் செய்தான் — அபிநவ குப்தன்

அனுபல்லவி

புவி எங்கிலும் புகழ்கொண்டோங்கும் சங்கராருக்கு
பாபியும் பரமனுகி பறிக்க எண்ணியே

சரணம்

1. பகந்தர மென்னும் மூலவியாதி வரவே மிக்க
அகமதில் துன்பம் கொண்டெல்லோரும் — ஜகத்தில்
பரிகாரம் அறியாமல் விழித்தார்
மகத்குருவைக்கண்டு மாசற்ற சிஷ்யரெல்லாம் உரைக்க
மகத்தான துன்பம் கொண்டு வணங்கிடலுற்றார் (ஆபிசார)

2. சங்கரர் தாளடி பணிந்து சகலரும்
இங்கிதமாய் சொல்லார் சிறந்து — அவரிடத்தில்
மெத்த வினய மாய் பயந்து
எங்கள் குருநாதனே உங்கள் உடல் நலம்
பொங்கி செழிக்க வேண்டும் புரிவீர் அருள் இன்றும் (ஆபிசார)

3. சத்துரு தலைமேல் இருக்க யாவருக்கும் அது
மெத்த பயமல்லவோ சுவாமி ஒழிக்கா விடில்
ஐயா துயரமன்றோ சுவாமி
உத்த வியாதியை இப்போ ஒழித்திட வேண்டுமினி
அத்தனே அருள் புரிகுவீர் அழைப்போம் வைத்தியரை தனி (ஆபிசார)

4. தன்வந்தரி சாஸ்திரத்தைக்கற்ற தகுந்த தான
உன்னித புகழதைப்பெற்ற வைத்தியர் தன்னை
என்னையனே கொணர்ந்து மெத்த
துன்பம் விளைக்கு மிந்த துஷ்ட வியாதி துலைத்து
முன்போல் துலங்கிடவே முற்று அருள் புரித்து
(ஆபிசார)

5. பாதமலர் மதுவை யுண்டு வண்டுகள் போலே
நாதனே இருப்போம் உட் கொண்டு உகந்து மிக்க
போதம் நீர் உற்றிட நான் கண்டு
வேதனை யெல்லாம் விண்டு விமலா உமக்கு தொண்டு
கொண்டிட ஆசை கொண்டோம் குருபரனே
அருள்வீர் (ஆபிசார)



## சங்கரர் சிஷ்யர்களுக்கு தன் அபிப்பிராயத்தைத் தெரிவித்தல்.

———:o:———

### 262. விருத்தம்

போன ஜன்மங்களில் புரிந்திட்ட வினைப்பயன்
புகுந்து இத்தேகம் தன்னில்
ஆனது இவ்வியாதி என்று அகத்தினில் அறியாமல்
ஆனதே மிகவும் விந்தை
ஏனெனில் இந்த ஜன்மத்தில் நாம் விட்டிடில்
இனி வரும் ஜன்மம் எய்தும்
ஆனதால் அனுபவித்தே இதை அகற்றிட
அகத்தினில் எண்ணம் என்றார்

## 179. பாட்டு

" ஸொரூப நிலையடைய தூரம் இல்லை "— என்ற மெட்டு

தாளம் : ஆதி ] பல்லவி [ ராகம் : இந்துஸ்தான்

(சங்கரர்)

1. உழ்வினைப்பயனால் உற்ற இவ்வியாதியை
ஒழித்திட வைத்தியரை நாடவில்லை

தொகையரு

அழிந்திடும் தேகமும இவ்வியாதியால் என்று நாம்—
அறிந்தால்

பிழைத்திட வழிதேட பிரியமும் கொண்டிடேன்
பரியாயம் வீணென்றார் (உழ்வினை)

பல்லவி

2. அனித்திய தேகத்தில் ஆசக்தி ஏனோ என்றார்
ஜனித்திடா ஆத்மா நாமன்றோ என்றார்

தொகையரு

(சிஷ்யர்கள்)

குருபரா, நீர் இங்கு கூறிய மொழி சரியல்ல
வென்றே மறுத்தார்

திருவடி துணையல்லால் திகழ வேறு கதியுண்டோ
தெய்வமே எங்களுக்கு என்றார் (உழ்வினை)

பல்லவி

3. ஜலமதில் வாழ்ந்திடும் ஜலசரங்களுக்கு அந்த
ஜலமதே ஜீவன் அல்லால் அன்னியமுண்டோ

தொகையரு

உலக மானிடருக்காக உற்ற உடலமிதே
உத்தமா என்று உரைத்தார்

அலகிலா அன்பருக்கு ஆனந்தம் அளித்திடும்
அத்துவைத மூர்த்தே என்றார்

பல்லவி

விருப்பம் தேகத்தில் உமக்கில்லை என்றாலும்
பொறுப்பு எங்களுக் கென்று போற்றி பணித்தார்
(உழ்ஷினை)

தொகையறு

பரமஹம்ஸரும் நன்றாய் பக்தியால் சிஷ்யர்கள்
பகர்ந்ததை யறிந்து கொண்டார்
பரிவுடன் பரமனும் அனுமதி பகர்ந்திட பணிந்து
பல திக்கும் சென்றார்

பல்லவி

4. ஆயுர்வேதம் கற்று அதிகம் வல்லமை கொண்ட
அற்புத வைத்தியரை அழைத்து வந்தார் (உழ்ஷினை)

தொகையறு

அளவிலா பொருள்களை ஆனந்தம் கொண்டிட
அள்ளியே அவர்களுக்கு ஈந்தார்
வளமுடன் வைத்தியர்கள் வள்ளலை வணங்கி நாம்
செய்திடும் பணி ஏதென்றார்

பல்லவி

5. வையகத்திருள் தன்னை மாய்த்திடும் வையோன்போல்
வியாதியாம் இருள் நீக்கும் நிபுணர்களே (உழ்ஷி)

தொகையறு

வைத்தியரே வந்த என் வியாதியின்நிலைசொல்வேன்
வகையுடன் கேழ்ப்பீர் என்றார்
மெய்யது வருந்திடச் செய்திடும் கொடியதோர்
மூல வியாதி இதென்றார்

பல்லவி

எந்தவித பரிகாரம் செய்தாகிலும்
பரித்திடுவது உமது காரியம் என்றூர் (உம்வினை)

## 263. விருத்தம்

இந்தவாறுக ஆசான் இயம்பிய மொழியைக் கேட்டு
வந்த வைத்தியர்கள் நன்றய் வள்ளலை வணங்கி போற்றி
சிந்தையில் பக்திகொண்டு திறமையாய் வைத்தியம்செய்தார்
அந்த நோய் அகலவில்லை அகத்தினில் அச்சம் கொண்டார்

## 264. விருத்தம்

எந்தையே என்ன செய்வோம் எங்களால் ஆனமட்டும்
வந்த நோய் அகல வென்று வகையுடன் வைத்தியம்
செய்தோம்
சிந்தையில் வருந்துகின்றேம் சிறிதும் நோய் அகலவில்லை
வந்தனம் செய்து வைத்தியர் மனமிக நொந்து உரைத்தார்

## 180. பாட்டு

" ஸமாதியோகம் ஸாதனையாலே' — என்ற மெட்டு

பல்லவி [ராகம் : நாதநாமகிரியை
தாளம் : ஆதி ]

சிந்தை தளர்ந்திட வேண்டாம் வைத்தியர்காள்
சிந்தை தளர வேண்டாம்

அனுபல்லவி

1. வந்து வெகு நாளாக தங்கிவிட்டீர் இங்கு
சொந்த மனைக்குச் செல்வீர் துருஸாட்டன்
சொந்த மனை செல்லுவீர் (சிந்தை)

2. அரசன் முதலாக அங்குள்ள ஜனங்கள் அனைவரும்
வரவை நோக்கியே வழி பார்த்திருப்பார் உம்மை
வைத்தியரே செல்லும் என்றூர் வகையுடன்
வைத்தியரே செல்லும் என்றூர் (சிந்தை)

3. உண்மையே நீர் இங்கு உரைத்த வகை யெல்லாம்
உத்தமரே என்றார்
விண்ணுலகடைந்தவன் மண்ணுலகம் தேடி
வந்திடுவாரோ என்றார் வைத்தியர்கள்
வந்திடு வாரோ என்றார் (சிந்தை)

4. ஸத்குரு ஆக்ஞையால் வைத்தியர்களும் அப்போ
தன்னிருப்பிடம் சென்றார்
மெத்தவும் வேதனை செய்திட தேகத்தில் அபி
மானம் அற்றிருந்தார் சங்கரர்
அபிமானம் அற்றிருந்தார் (சிந்தை)

5. வேதனை தாங்க வொண்ணமலே விசுவேசனை
விமலனும் தியானம் செய்தார்
தீதகற்றிடும் ஸ்ரீ மஹா தேவன் ஆக்ஞையால்
தீரர்கள் இருவர் வந்தார் சிறக்க
தீரர்கள் இருவர் வந்தார் (சிந்தை)

6. அந்தணர் வேடம் பூண்டு அசுவனி தேவர்கள்
ஆதரவாக வந்தார்
வந்தவர் சங்கரர் அண்டையில் அமர்ந்து
ஸந்தோஷமாய் உரைப்பார்
ஸந்தோஷமாய் உரைப்பார் (சிந்தை)

7. இந்த வியாதி ஆபிசார பிரயோகத்தால்
ஆனது ஐயா என்றார்
எந்த ஔஷதத்தாலும் ஏகிடாது என்றார்
யதிச்ரேஷ்டரே என்றார் அவர்கள்
யதிச்ரேஷ்டரே என்றார் (சிந்தை)

8. வந்த அசுவனி தேவர் வகையுடன் உரைத்து
ஸொந்த இடம்தானும் சென்றார்

சிந்தையில் அறிந்து சினத்துடன் பத்ம பாதர்
ஜபம் செய்தார் பிரணவமதைச் சிறக்க
ஜபம் செய்தார் பிரணவமதை (சிந்தை)

9. ஜபத்தின் பலத்தினுல் அபிநவகுப்தனை
சென்றடைந்தது வியாதி
தபித்திட செய்து அபிநவகுப்தன் உயிர்
தக்ஷணம் பிரித்ததுவே உயிரை
தக்ஷணம் பிரித்ததுவே (சிந்தை)

10. சங்கரரும் வியாதி நீங்கி ஸந்தோஷமாய்
கங்கைக் கரைதனிலே
பொங்கும் ஆனந்தத்துடன் பிரம்மதியானம் செய்து
தங்கி இருந்திடவே அங்கு
தங்கி இருந்திடவே (சிந்தை)

## 265. விருத்தம்

யோகியுள் சிரேஷ்டராக ஒளிர்ந்திடும் கௌடபாதர்
ஏகிடக் கண்டார் அங்கு எழில் ஓங்கும தென்றலென்ன
தியாகிகளுக்கு அரசனாக திகழ்ந்திடும் பகவத் பாதர்
ஆகும் சங்கரரும் அந்த கௌடபாதரை தான் கண்டார்

## 181. பாட்டு.

" தினதயாகர " — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : தோடி

பூஜை செய்தார் சங்கரர்
நேசமுடனே கௌடபாதர் பாதமலரை நன்றாய்

அனுபல்லவி

1. வாசாம கோசர வஸ்து சொரூபரை — (பூஜை)

2. ஆசாரியர் பரம்பரையாக நிகழ்ந்திடும்
மாசற்ற மனதுடன் மகிழ்ந்து அன்புடன் அங்கு —
(பூஜை)

3. பக்தி சிரத்தை யுடனே பரமன் அடி பணிந்து
சித்தம் மகிழ்ந்து கரம் குவித்து எதிர் அமர்ந்து —
(பூஜை)
மெத்த ஆனந்தத்துடன் வினயத்துடன் வியந்து —
(பூஜை)

சரணம்

துதித்துமே பூஜித்து துலங்க அருள் யாஜித்து
எதிரில் அமர்ந்த அந்த சங்கரர் தன்னைப் பார்த்து
மதித்து கௌடபாதரும் மனது மிக பூரித்து
பூரண கடாக்ஷம் வைத்து புகழ் பெறவே
ஆர்ணவமாகும் பவக்கடல் கடத்திட
பூரண ஞானம் பெற்று அயர்ந்தனையே என்று
(பல்லவிபோல்)

கௌட பாதரும் வினவ
இளர் மதி என திகழ் தெளிந்த சங்கரரிடம்

சரணம்

கோவிந்த பாதரை நீ கண்டு பணிந்தனையோ
கூறும் உபதேசத்தால் குறைகள் தவிர்ந்தனையோ
ஆவியுடல் பொருளும் அர்ப்பணம் செய்தனையோ
அத்துவைத வஸ்துவானாயோ அழிவில்லாத
சத்து சித்தானந்த வஸ்து ஸ்வரூபமாய்
நித்திய நிர்மலமாக நிறைந்தாயோ கௌடபாதரும்
உன்னை அடைந்தவர்கள் உன்னிடம் அன்பு பூண்டு
உள் கருவிகளுடன் புர கருவியும் வென்று
தன்னை யறிந்திட சாதனங்கள் கைகொண்டு
சமரஸ நிலையைக் கண்டு ஸர்வ முக்தனாய்
சார்ந்து நிறைந்து ஸதானந்தமும் கொண்டு
ஸர்ததமும் தொண்டு செய்கின்றனரோ என—கௌட

### 266. விருத்தம்.

நித்தியானந்தமாக நிகழ்ந்து உள் பகையை வென்று
சத்திய போதம் தன்னை சார்ந்தெங்கும் வெற்றி பெற்று
உத்தம யோகத்தாலே உலகெலாம் போற்ற ஞான
சித்தியை சிறக்க இங்கு செய்தது உண்டோ சொல்வீர்

### 267. விருத்தம்

அத்துவைத ஞான நூலை அவனி எங்கிலும் விரித்த
உத்தம கௌட பாதர் உரைத்ததை உகந்து நன்றாய்
சத்திய சாந்த சீல சங்கர பகவத் பாதர்
சித்தமே உருகக் கண்ணீர் சிந்தவே பணிந்துரைப்பார்

### 182. பாட்டு

"அருள் ஒளி அல்லால் ஒரு துணை இல்லை" — என்ற மெட்டு
பல்லவி [ராகம் : சிம்மேந்திரமத்திமம் தாளம் : ஆதி]

கருணைக்கடலே நின் கடாக்ஷம் கிடைத்தால்
கருத்தில் குறைகள் தான் உண்டோ ஐயா

அனுபல்லவி

திருக் கடாக்ஷப் பெருமையால் ஊமையும்
திகழுவான் திவ்விய வாக் விலாஸமாயும்

சரணம்

1. பாமரன் பண்டிதனாக நிகழுவான்
பாபிஷ்டனும் புண்ணியவானாய் திகழுவான்
காம குரோத லோப குணங்கள் விலக்குவான்
கருத்துடன் ஞானிகள் சமூகத்தில் கூடுவான்
எல்லை கடந்த புகழ் எங்கும் பெற்றோரே
சொல்லிட வாக்குண்டோ தூய பெரியோரே
தொல்லையகன்ற சுகமுனியை நேரே
அல்லலகலக் கண்டு ஆனந்தம் உற்றோரே (அருள்)

## 268. விருத்தம்

எவர் ஆத்ம தத்துவம் பெற்று எங்குமாய் விளங்கலானோர்
எவர் உதாஸீனம் பெற்று எங்குமே நிறைந்தோர் ஆவர்
எவர் வியாஸ முனியால் மைந்தா என அழைத்திடப்
பெற்றரோ
அவர் இங்கு எவரும் போற்றும் சுகமுனி யாகும் என்றார்

## 269 விருத்தம்

சங்கர பகவத்பாதர் சாற்றிய மொழியைக் கேட்டு
கங்குலை யகற்றியாளும் கௌடபாதரும் மகிழ்ந்து
துங்க ஞானத்தைப் பெற்று துலங்கிடும் மைந்தா வென்று
அங்கம் பூரித்துரைத்து அகம் மிக மகிழ்ச்சி கொண்டார்

## 183. பாட்டு.

"புவியில் ருக்மாங்கதன்" — என்ற மெட்டு

**கண்ணிகள்**

1. மாண்டுக்கிய காரிகை என்னும் மலருக்கினிய
மகத்தான ரவி எனவே — தோன்றிய பாஷியத்தை
தூயோனே கண்டு குளிர்ந்தும்மைக் காண வந்தோம்

2. இவ்விதமாய் கௌடபாதர் உரைக்கவே
செவ்வையாய் சங்கரரும் —
ஒவ்வொரு மாண்டுக்கிய உபநிஷத்
பாஷியம் உரைத்து நின்றார்

3. மாண்டுக்கிய காரிகை என்னுமிரண்டு பாஷியமும்
கேட்டுகந்தேன்
வேண்டும் வரமதை வேண்டிக்கொள்வாய் என
கௌடபாதர் உரைத்தார்

4. மும்மூர்த்திகளுக்கும் முதல் மூர்த்தியாகும் விஷ்ணு
மூர்த்தி என்றறிந்தேன்
இம்மையில் உம்மை யான் கண்டிடும் பாக்கியம்
பெற்றே அகம் மகிழ்ந்தேன்

5. உத்தமா ! உம்மை யான் உற்றிட பெற்ற பின்
பெற்றிட வரமதுண்டோ
தத்துவ ஞானம் சற்றும் விலகாதிருக்க ஸத்குணனே
வரம்தா

6. ' அப்படி ஆகுக ' என்று வரமீந்து அப்பொழுதே
மறைந்தார்
ஸ்வப்ரகாசமாய் ஜொலித்திடும் சங்கரர் அங்கு
இரவைக் கழித்தார்

விருத்தம் 8 ] [ பாட்டு 7



# சங்கரர் சர்வக்ஞபீடம் ஏற முயலுதல்

## 270. விருத்தம்

சங்கர பகவத் பாதர் ஸத்குண சிஷ்யர் சூழ
கங்கையில் ஸ்நானம் செய்து கருதிய கருமம் செய்து
அங்கவர் பிரம்ம நிஷ்டை அழகுற செய்து வந்தார்
திங்களோ ரவியோ என்ன திக்கெட்டும் கீர்த்தி மேவ

## 184. பாட்டு

" பித்தா பிறை சூழ " — என்ற மெட்டு

1. உத்தம குருவும் அங்கு உகந்து நிஷ்டை புரிந்தார்
மெத்த புகழ்ந்துரைத்தார் சிலர் காஷ்மீரத்தின் பெருமை

அத்தனையும் கேட்டவரும் ஆனந்தமும் அடைந்தார்
சித்தமதில் தீர்மானமாய் செல்ல எண்ணம் மிருந்தார்

2. கருதவொண்ணு புகழ் பெற்றதோர் காஷ்மீர்
தேசத்தில்
ஒருத்தராலும் ஜெயிக்க வொண்ணு ஒளிதிகழ் பீடத்தில்
பெறுத்த கூட்டம் கூட்டமாக பேரறிஞோராலும்
வருத்தம் கொண்டார் வகையுடன் அப்பீடம் ஏற
என்ருர்

3. பூர்வ திசை தன்னை மெத்த புகழ் அடைந்தபெரியோர்
பூர்வவாசல் திறந்து வைத்தார் புவியோர் மெத்தபுகழ
மேற்குவாசல் திறந்து வைத்தார் மேற்கிருந்த அறிஞர்
ஏற்க வொண்ணு உறுதி கொண்டார் வடக்கு
வாசல் திறந்தார்

4. தெற்கு வாசல் திறப்பார் அன்றி திரளாய் இருள்மூடி
நிர்குணத்தை திறக்க அங்கு நிகழ்வாரில்லை நாடி
அர்க்கன் ஒளிகொண்ட ஆதி சங்கரரும் கேட்டார்
தர்க்கம் செய்து ஜெயித்து வாசல் திறக்க எண்ண
மிட்டார்

## 271. விருத்தம்

தென்திசை தனில் உதித்து திகழும் சங்கரரும் கேட்டார்
மன்னியே மனதில் நன்ருய் மகிழ்ச்சியும் கொண்டார் மிக்க
உன்னியே உறுதிகொண்டார் உகந்து வாதில் ஜெயிக்க
சென்றனர் காஷ்மீரத்தின் சிறப்பதை காண வென்றே

## 185. பாட்டு

"ஒரு நினை ஒரு மொழி" — என்ற மெட்டு

கண்ணிகள்

1. காலடியில் எழுந்த கருணைக்கடலும் அப்போ
ஆலயம் தேடிச் சென்ருர்— ஆலயம் தேடிசென்ருர்

2. சீலமுடன் தெற்கு வாசல் திறப்பதற்கு
ஞாலத்தில் யாருமில்லை என்ற சொல்லை

3. சங்கரரும் கேட்டு தவிர்த்திட வேண்டுமென்று
அங்கம் பூரித்துச் சென்றார் அங்கு அன்று

4. மதம் கொண்ட மதகரியான மதவாதியை
யதிராஜ சிங்கம் எதிர்த்து போராடிடவே

5. துறவறம் என்னும் பற்கள் துலங்கும் ஆயுதமாக
விரிந்த வேதாந்த வனம் ஸஞ்சாரம் செய்து

6. துவைத வனங்களையும் தூள் தூளாகவே செய்து
துவைதிகளையும் தூரத்தில் துரத்தி விட்டு

## 272. விருத்தம்

யதிகளுக்கரசனாகி இலங்கும் சங்கரரும் அப்போ
துதி பெறும் தெற்கு வாசல் திறப்பதற்கு எண்ணம் கொண்டு
கதி இதே என்று அங்கு சந்தோஷமாகச் சென்றார்
மதித்திடோம் திறக்க என்று மறுத்தனர் மத்யஸ்தர்கூடி

## 186. பாட்டு.

" அவடையக் காப்பாட்டு ஆரடா " — என்ற மெட்டு

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : கல்யாணி

அட்டகாஸம் மிகக்கொண்டு ஆடம்பரத்துடன் இந்த
ஆலயம் திறக்க வந்தாரைய்யா

அனுபல்லவி

மட்டற்ற பெருமை கொண்டு மற்றவரை மதிக்காமல்
திட்டமிட்ட காரியம் சொல்வீரய்யா

சரணம்

1. எல்லாம் அறிந்தோன் என்றும் எங்கும் ஜயம்
கொண்டோமென்றும்
சொல்லுவீராகில் எங்களை ஜயிப்போமென்றும்
வெல்ல வேண்டும் எங்களையும் விரைவில் நன்றாய்
செல்லலாம் நீர் பின்பு தெற்கு வாசல் திறப்பதற்கு
(அட்டகாச)

2. ஸர்வக்ஞராக எண்ணம் மேல் சாற்றிடும் மொழிக்கு
நீரும்
சற்றும் தயங்காமல் பதில் சாற்றிடுவீர்
ஸர்வ மதமும் தர்க்கத்தால் ஸகலரையும் ஜயிக்கும்
தார்கிகன் பின்னும் சாற்றலுற்றான் (அட்டகா)

3. இரண்டணுவையும் பற்றி இருக்கும் அணுவிற்கு
இருக்குமிடம் ஏதென்று எடுத்துரைப்பீர்
திரண்ட பொருள் அதனை செப்பிடுவீராகில் நீரும்
சிறந்ததோர் ஸர்வக்ஞர் ஆகுவீர் என்றார் (அட்ட)

4. இரண்டணுக்களின் துவைத தோற்றமே அதற்கு
இருப்பிடமென்று சங்கரர் உரைத்தார்
மிரண்டு விழித்தவரும் விரைவில் பாதம் பணிந்து
மிக்க உபசாரம் செய்து மேன்மையடைந்தார் (அட்ட)

5. கௌதம மதஸ்தர் இதைக் கேட்டு அங்கு ஓடிவந்தார்
கேட்டார்கள் அநேக வித கேள்வி தனை
ஔதாரியத்துடனே ஐயன் அவரை ஜயித்து விட்டார்
ஆனந்த மாகவே அமர்ந்திருந்தார் (அட்டகாச)

6. கபிலனுடனே பௌத்தன் ஜைனன் ஜைமினி மதம்
கருவத்துடன் சகல மதஸ்தர் வந்தார்
அபிமானமற்று இலங்கும் ஆதி சங்கரர் நன்றாய்
அவரவர் மதங்களேன் ஜயித்துவிட்டார் (அட்ட)

## 273. விருத்தம்

இந்தவாருக அங்கு ஏகிய மதஸ்தர் தன்னை
சிந்தையில் ஐயம் நீங்க சிறப்புடன் சாஸ்திரார்த்தத்தை
எந்தையும் உரைக்க நன்ருய் எல்லையில்லா புகழ்கொண்டு
வந்தவர் அவர் பாதத்தை வணங்கியே பூஜை செய்தார்

## 187. பாட்டு

"எல்லோரையும் போலவென்னை" —என்ற மெட்டு.

தாளம் : ரூபகம் ] பல்லவி [ ராகம் : சுத்தசாவேரி

நாஸ்திக மதஸ்தரை யெல்லாம்
ஆஸ்திகர்கள் ஆக்கியே வைத்தார்

அனுபல்லவி

ஸ்தோத்தரித்து ஸ்துதி செய்ய யாரும்
பூஜ்ய பாதரும் திறந்தார் வாசலை

சரணம்

1. வாசலை திறந்தார் வாஞ்சையுடனே அவர்
கூசாமல் பீடத்தின் அருகிலே வந்தார்
நேசமாய் பத்மபாதரையும் அழைத்தார்
ஆசானும் பீடத்தில் ஏறவே நினைந்தார் (நாஸ்திக)

2. இந்த விதம் பீடம் ஏறிடும் வேளையில்
வந்தது அசரீரி வாக்கியம் காதினில்
சுந்திர சர்வக்ஞ பீடம் ஏறுவதாயில்
சிந்தை சுசியாய் தெளிந்ததுண்டோ சொல் (நாஸ்)

3. சர்வமும் கற்றதோர் ஸர்வக்ஞனானாலும்
சர்வ மதமும் ஜயித்தவர் ஆனாலும்
நிர்மலா நீ காமகலையை கற்றதாலும்
தர்மமாமோ மனம் மாசடைந்ததாலும் (நாஸ்திக)

ccccooo

## சாரதா தேவிக்கு சங்கரர் பதிலுரைத்தல்

### 274. விருத்தம்

சாரதா தேவியங்கு சாற்றிய மொழியைக் கேட்டு
ஸ்ரீராம் பகவத் பாதர் சிறப்புடன் உரைக்கலுற்றார்
நேரதாய் செல்லவில்லை நேர்மையாம் உடலைக்கொண்டு
வேறொரு உடலை மேவி வேண்டினேன் போகம் என்றார்

### 188. பாட்டு

" தில்லை வெளியினில் கலந்து " — என்ற மெட்டு

கண்ணிகள்

1. சாரதா தேவியே சாந்த சொரூபியே
சார்ந்தருள் புரிகுவாயே
நேரதாய் ஸர்வக்ஞ பீடத்தில் அமர்ந்திட
நேர்மை நீ தரு வாயே

2. இந்த உடலுடன் உகந்து போகம் புஜிக்க
உற்றிட வில்லை அம்மா
சுந்திர அமருகன் சொரூபத்தில் புகுந்து நான்
சுரத லீலையைப் புரிந்தேன்

3. மாசிலா மனதுடன் மாநிலத்தில் நானும்
மதித்திட நடந்தேன் அம்மா
கூசிடாது நீயும் ஆசி புரிகுவாய் இப்போ
நேசமுடன் அமர

4. சங்கரர் மொழி கேட்டு சந்தோஷத்துள்பட்டு
சாரதா அம்பிகை உரைப்பாள்
சங்கடங்கள் தவிர்க்கும் சர்வக்ஞபீடம் ஏற
தகுந்தவர் நீரே என்றாள்

5. சாரதா தேவியும் சாற்றிய மொழி தன்னை
சங்கரர் கேட்டு உகந்தார்
ஆரவாரத்துடனே அநேக சிஷ்யர்கள் சூழ
அமர்ந்து மனம் மகிழ்ந்தார்

6. பண்டிதர் முதலாக பாமரர்கள் வரையும்
பாதமலர் பூஜித்தார்
கொண்டாடியே சாரதா தேவியும் பூஜித்தாள்
குருமூர்த்தி பாத மலரை

7. சர்வக்ஞ பீடமதில் சங்கரரும் அமர்ந்தார்
சர்வ மதமும் ஜயித்து
சர்வக்ஞ மூர்த்தியை சர்வமதஸ்தரும்
சர்வ காலமும் பஜித்தார்

8. ஜெய ஜெய என்றுமே திக்கெட்டும் வாத்தியம்
ஜெயபேரி முழங்கிடவே
பயமில்லை நமக்கென்று பக்தர்கள் பூரித்து
சுயம் ஜோதியாக நின்றார்

9. பிரம்ம வித்தைக்கு அதிபதியாக நின்றார்
பிரபுவாம் சங்கரரும்
தர்ம சொரூபியும் தாக்ஷிண்ணிய மின்றியே
சகல மதமும் ஜயித்தார்

## 275. விருத்தம்.

சங்கர பகவத் பாதர் சர்வக்ஞபீடம் ஏற
அங்கு தேவர்கள் மகிழ்ந்து ஆகாயம் தன்னில் நின்று
துங்கமாம் மலர்கள் தூவி தோத்திரம் செய்து கொண்டு
மங்கள வாத்தியம் எங்கும் வழங்கிடச் செய்தார் நன்றாய்

### 189. பாட்டு.

" சங்கரி சத்குரு சந்திரமுகி " — என்ற மெட்டு.

தாளம் : ஆதி ] பல்லவி [ ராகம் : சாவேரி

சங்கர சத்குரு சர்வக்ஞராய்
சர்வக்ஞ பீடத்தில் அமர்ந்து கொண்டார்
சர்வ மதஸ்தரும் தான் வணங்க அவர் இணங்க

அனுபல்லவி

அங்கவர் அத்துவைத கொடி பறக்க
அன்பு மிகும் சிஷ்யர்களும் சிறக்க
சிருங்க கிரி தன்னை அவர் அடுக்க
மிக சிறக்க சுரேஸ்வரர் அங்கு இருக்க
அங்கம் பூரிக்க (சங்கர)

சரணம்

பதரிகாசிரமம் சென்றடைந்தார்
பதஞ்சலருக்கு பாஷியம் உரைத்தார்
இதம் சொல்லி அனைவருக்கும் எடுத்துரைத்தார்
இசைவுடன் சில நாள் அங்கு கழித்தார் (சங்கர)

### 276. விருத்தம்.

திங்களின் கிரணம் மின்ன திக்கெட்டும் திகழ கீர்த்தி
சங்கர பகவத்பாதர் சாஸ்திரார்த்தங்கள் எல்லாம்
அங்கு வந்து அவர்க்குரைத்து அவர்மதி தெளியவைத்து
துங்க ஞானியர் சூழ சுகமுடன் அமர்ந்திருந்தார்

### 277. விருத்தம்

கலிமலம் அகற்றவந்த காருண்ய மூர்த்திக்கப்போ
பொலிவுடன் வயதுபூர்ணம் ஆனது முப்பத்தி இரண்டாய்

சலிப்பர ஸிஷ்யர் எல்லாம் சங்கர குருவே என்று
ஒலிபெர ஸ்துதித்து நின்றார் ஒப்பற்ற உவக்கை கொண்டு

## 190. பாட்டு

பாரில் பலராமன் தம்பி — என்ற மெட்டு.

தாளம் : ஆதி] பல்லவி [ராகம் : பூரிகல்யாணி

1. பண்டிதர்களை ஜெயித்துகொண்டார் கொண்டார்
எண்டிசையும் ஏகம் என்று விண்டார், விண்டார்
தொண்டர்கள் தொழுதுபோற்ற கண்டார், கண்டார்
மண்டலம் முழுதும் மதியாய் நின்றார், நின்றார்

2. யதி சக்ரவர்த்தியாக நின்றார், நின்றார்
துதி பெற கேதாரத்துக்கு சென்றார், சென்றார்
மதியணி மகேசனை ஸ்துதி செய்தார், செய்தார்
கதி அறிந்து அவரும் அருள் பெய்தார்; பெய்தார்

3. அங்கு குளிர் தாங்காமல் ஸிஷ்யர் எல்லாம்
சங்கரகுரோ சரணம் என்றார் மெல்ல
அங்கவரும் அக்கினி தடாகம் செல்ல
அங்கு குளித்து குளிர்கள் அவர்கள் தள்ள

---

## சங்கரர் கைலைக்கு ஏகுதல்.

## 278. விருத்தம்

கற்பனை கடந்த ஐயன் கலியில் மானிடர்கள் உய்ய
அற்புத செய்கை செய்து அத்துவைதம் தனை போதித்து
நிர்ப்பயமாக யாரும் திகழ்ந்திட வழியைக் காட்டி
கர்த்தனும் கைலை செல்லக் கருத்தினில் கருதினரே

## 191. பாட்டு

ஊஞ்சல்

1. இவ்விதமாய் சங்கரரும் இருக்கும் போது
அவ்விடத்தில் அயன் முதலாம் தேவர் கூடி
செவ்வையாக சங்கரரை துதித்துப்பாடி
ஒவ்வொண்ணு ஆனந்தத்துடன் உகந்து நாடி

2. இந்திரனுடனே உபேந்திரனும் வந்தார்
அந்தரத்தில் வாயுவுடன் அக்கினி வந்தார்
சுந்திரமாம் ரிஷிகளுடன் சித்தர் வந்தார்
மந்தகாசத்துடனே சிவ கணங்கள் வந்தார்

3. வந்தவர்கள் சங்கரரை வணங்கி நின்றார்
மந்தார மலர் சொரிந்து மகிழ்ந்துகொண்டார்
முந்திப்புரம் எரித்த முதல்வா என்றார்
எந்தையே எழுந்தருள வேண்டுமென்றார்

4. அகில ஜெகத் காரணு நின் கழல்கள் போற்றி
சகல மதமும் ஜயித்த சம்போ போற்றி
நிகிலத்தவர்க்கருள் புரிந்த நிர்மலா போற்றி
அகலாத அன்பு பூண்ட ஹரனே போற்றி

5. ஆலகாலம் உண்ட நீல கண்டா போற்றி
காலனை உதைத்த காலாதீதா போற்றி
பாலன் மார்க்கண்டனைக் காத்த பரமேசா போற்றி
காலடி அவதரித்த கர்த்தா போற்றி

6. பாதாளமும் விசும்பும் ஒன்றாய் நிறைந்தாய் போற்றி
பூதலத்தோர் உய்ய வந்த புனிதா போற்றி
பேத மதவாதியரை ஜெயித்தாய் போற்றி
கேதம் தவிர்த்தாள கைலை வருவாய் போற்றி

7. இங்கிதமுடன் தேவர் ஸ்துதித்து நிற்க
சங்கரரும் கேட்டு மிக சம்மதிக்க
மங்கள ரிஷபம் அங்கு வந்து நிற்க
எங்கெங்கும் துந்துபி வாத்தியம் ஒலிக்க

8. சங்கரரின் அங்கமதில் மங்கை தோண
திங்களுடன் கங்கையும் செஞ்சடையில் காண
அங்கு அமரர் ஸ்துதித்து ஆனந்தம் பூண
சங்கரரும் கைலையங்கிரிக்கு ஏகினரே.

## 192. பாட்டு

நோட்டு.

1. எங்கிலும் வாத்தியம் முழங்கிடவே
சங்கரரும் கைலைக்கு ஏகிடவே
அங்கு பூமாரி பொழிந்திடவே
அங்கம் பூரித்து அவர் அமர்ந்திடவே

2. ஜனகாதி யோகிகள் சூழ்ந்திடவே
மன மாற வாழ்த்தி ஸ்துதித்திடவே
அனவரதம் ஆசி கூறிடவே
தினகரன் என்ன ஜொலித்திடவே

3. ஜெய ஜெய கோஷம் முழங்கிடவே
ஜெய ஜெய என்று மகிழ்ந்திடவே
ஜெய ஜெய என்ன புகழ்ந்திடவே
ஜெய ஜெய பேரிகை கொட்டிடவே

4. அர ஹர சம்போ வென அமரர்
பரமனை ஸ்துதி செய்து மகிழ்ந்தார்கள்
கரமதை சிரமது கொண்டு அவர்கள்
பராத்பரா வென்று பணிந்தார்கள்

5. சிவ சிவா என்றே சித்தரெல்லாம்
சுவையுடன் ஸ்துதித்து மகிழ்ந்தார்கள்
பவக்கடல் கடத்திய பரனே என்று
அவர்கள் அங்கு ஆனந்தம் அடைந்தார்கள்

6. பக்தர்கள் கூடி பரவசம் ஆகியே
சித்தந் தெளிந்து சிறந்தார்கள்
பத்மாசனியாள் பக்தர்களை பணிந்து
அத்துவைதானந்தத்தில் அமர்ந்தார்கள்

ஜய ஓம், ஜய ஓம், ஜய ஓம், ஜய ஓம்
ஜய ஜய ஓம், சாந்தி, சாந்தி, சாந்தி ஓம்.

---

ஸ்ரீ

ஸத்குருப்யோ நம:

———o———

# மங்களம்.

தாளம்: த்ருச்ரலகு] பல்லவி [ராகம்: சுருட்டி

மங்களம் மங்களமே சங்கரருக்கு
மங்களம் மங்களமே

அனுபல்லவி

மங்களம் ஸ்ரீ சங்கரருக்கு மங்களம் ஸ்ரீ சாரதைக்கு
மங்களம் மண்டனர் முதல் மாசற்ற சிஷ்யர்களுக்கு

சரணம்

1. விண்ணவர் துயர் தவிர்க்க மண்ணில் அவதரித்தோர்க்கு
ஷண்மதம் ஸ்தாபித்து எங்கும் தத்துவம் உரைத்தவர்க்கு
எண்ணரிய மதஸ்தரை எளிதாய் ஜெயித்தவர்க்கு
பண்ணிய சூத்திர பாஷ்யத்தை பாரெங்கும் விதைத்தவர்க்கு
மங்களம், மங்களமே

2. ஆலடி அமர்ந்தவர்க்கு அன்பர்க்கருள் செய்தவர்க்கு
காலடி எழுந்தவர்க்கு கருணை கடாக்ஷருக்கு
சீலமுடன் சிவகுருவின் பாலனாய் பிறந்தவர்க்கு
கோலாகலமாக குருகுல வாஸம் செய்தவர்க்கு
மங்களம், மங்களமே

3. மங்கையின் தரித்திரம் தன்னை தங்காமலே செய்த
வர்க்கு
தங்க நெல்லிக்கனி ஈந்த ஸத்குண சீலருக்கு
துங்க ஞானம் பெற்றிட துறவறம் தாவென்று
அங்கு அன்னையிடம் யாசித்தருள் பெற்ற சங்கருக்கு
மங்களம், மங்களமே

4. கோவிந்த பாதரை நாடி கூடியே ஸந்நியாஸமதை
மேவியே அடைந்து மேன்மையாகவே நிறைந்தவர்க்கு
காவியாடை தரித்து கையில் தண்டம் பிடித்து
புவி எங்கிலும் சுற்றி புகழ் கொண்ட புண்ணியருக்கு
மங்களம், மங்களமே

5. காசிமாநகர் அடைந்து சூத்திர பாஷ்யம் செய்து
நேசமுடனே வியாசர் ஆசீர் வாதமும் பெற்று
கூசிடாமலே தன்னை கூடியவர்கள்க் குரைத்து
மாசறவே வயது ஈரெட்டு பின்னும் பெற்றவர்க்கு
மங்களம், மங்களமே

6. குமரிலா பட்டரைக்கண்டு கூறுரு துயரம் கொண்டு
கூறிய பாஷ்யம் காட்டு குறை தீர்ப்பேன் என்ற
வர்க்கு
தவறிலா பாஷ்யம் என்று சந்தோஷித்தவர் சொல்ல
எவரும் உமக்கு நிகர் இல்லை என்று உரைத்தவர்க்கு
மங்களம், மங்களமே

7. மண்டனரை ஜெயித்தெங்கும் மகிழ புகழ் கொண்ட
வர்க்கு
தொண்டனாக்கி தூய ஞான சிஷ்யராக்கிக் கோண்ட
வர்க்கு

விண்டிட வொண்ணுதவிதம் சாரதையும் சில கேட்க
மண்டல மன்னனுய் அமருகன் தேகம் கொண்ட
வர்க்கு
மங்களம், மங்களமே

8. ஸமரஸ சொரூபனும் அமருகன் தேகம் புகுந்து
அமர் செய்யும் விஷயத்தில் ஆசக்தியற்றிருந்து
அமரர்களும் பிரமிக்க அவரும் அங்கு ஜெயித்து
தமக்குத் தானே நிகராய் தரணி நிறைந்தவர்க்கு
மங்களம், மங்களமே

9. சகல தேசமும் சென்று சகல மதமும் வென்று
ஸகல மூர்த்தியும் கண்டு சகல சிஷ்யரேன் கொண்டு
அகலா அன்பு பூண்ட அன்னையிடம் சென்று
அபர கிரியை செய்து அங்கு சாபம் இட்டோர்க்கு
மங்களம், மங்களமே

10. சாப விமோசனம் தாரும் என்றே அவர்கள்
தாளினைப் பணிந்துமே தயங்கியே நின்றவர்க்கு
தாபம் தவிர்த்திட சார்ந்த முப்பத்திரண்டாம்
தலைமுறயில் வருவேன் தளரவேண்டாம் என்றவர்க்கு
மங்களம், மங்களமே

11. சங்கையில்லாது மிக மதங்கள் எல்லாம் ஜெயித்து
சிருங்ககிரியில் பீடம் ஒன்றை ஸ்தாபித்தவர்க்கு
மங்களமதாகவே காஷ்மீரம் தனை யடுத்து
அங்கு தெற்கு வாசல் தன்னை அழகாய் திறந்தவர்க்கு
மங்களம்; மங்களமே

12. சர்வக்ஞ பீடமேறி ஸர்வக்ஞர் ஆனவர்க்கு
ஸர்வ பரிபூர்ண ஸத்குண சீலருக்கு

ஸர்வ சராசர வஸ்து சொரூபருக்கு
ஸர்வ மங்கள வடிவமான சங்கர ஸத் குருவிற்கு
மங்களம், மங்களமே

13. எங்கும் புகழ் ஓங்க சங்கரரும் இருக்க
அங்கு ரிஷபம் வர அமரர் எல்லாம் ஸ்துதிக்க
மங்கள ரிஷபம் ஏறி மஹா தேவரும் ஜொலிக்க
எங்கள் குல குருவாக இலங்கும் சங்கரருக்கு
மங்களம், மங்களமே

14. திரு கைலை சென்ற ஸ்ரீ நீலகண்டருக்கு
ஸ்ரீ குரு நாதனாக திகழும் சங்கரருக்கு
ஸ்ரீ வித்தியா சொரூபிணியாம் ஸ்ரீ லலிதைக்கு
ஸ்ரீ சாரதா தேவி ஸ்ரீ பீட வாஸிக்கு
மங்களம், மங்களமே

15. வாக்கில் வாணியாக இருந்து வசனித்தோர்க்கு
ஏக்கம் தவிர்த்தென்னை ஈடேற செய்தவர்க்கு
நீக்கமற எந்தன் நெஞ்சில் அமர்ந்தவர்க்கு
யாருக்கும் கிடைக்காத பாக்கியம் அளித்தவர்க்கு
மங்களம், மங்களமே

16. பத்மாஸனி யாகவே பாரில் குருவாய் வந்து
பாங்குடனே பரம தத்துவத்தை யுரைத்து
அத்துவைத பொருள் தன்னை அன்புடனே உரைத்து
அடிமையாய்க் கொண்டு அகத்தில் அமர்ந்தவர்க்கு
மங்களம், மங்களமே.

ஓம் தத் ஸத்.

—: சுபம். :—

## வாழ்த்துப் பா.

வாழ்க, வாழ்க, வாழ்க, வாழ்க
வையகத்தோர்கள்
வாழ்க, வாழ்க, வாழ்க, வாழ்க
வானகத்தோர்கள்
வாழ்க, வாழ்க, வாழ்க, வாழ்க
வள்ளல் அன்பர்கள்
வாழ்க, வாழ்க, வாழ்க, வாழ்க
யாவரும் வாழ்க, வாழ்க, வாழ்கவே.

### 279. விருத்தம்

பத்மாஸனியான குருபாதம் வாழ்கவே
அத்துவைத பொருள் உரைத்த ஐயன் வாழ்கவே
தத்துவ ஸ்ரூபமாம் சாரதா வாழ்கவே
பக்தியாய் படிப்பவர் கேட்பவர் வாழ்கவே

### 280. விருத்தம்

சங்கரர் அருளினுலும் சாரதா கிருபையினுலும்
சங்கர விஜயம் தன்னை சாற்றினேன் தாணி தன்னில்
இங்கு இதிலுள்ள குற்றம் குறை எல்லாம் தவிர்த்து என்னை
மங்களமாகச் செய்வீர் மாசற்ற பெரியோரே நீர்.

சுபம்.

ஓம் தத் ஸத்



A. S. லெக்ஷ்மி அம்மாளால்

இயற்றப்பட்ட

# இதர புஸ்தகங்கள்

ஸர்வவேதாந்த ஸாரஸங்கிரஹ
அத்வைத கீர்த்தனங்கள் :

| | | |
|---|---|---|
| முதற்பாகம் | பைசா | 50 |
| இரண்டாம் பாகம் | ,, | 75 |
| திருபுர ரகசியம் ராக்ஷசோபாக்யானகும்மி | ,, | 25 |
| ஹேமலேகை சரித்திரம் | ,, | 50 |
| அத்வைத ஸத் குருமணி மாலை | ,, | 25 |

இவைகள் கிடைக்குமிடம் :—

A. S. லெக்ஷ்மி அம்மாள்,
"கணேஷ் பாக்"
புதுதெரு ராமேஸ்வரம்
(ராமநாதபுரம் ஜில்லா).

A. S. லெக்ஷ்மி அம்மாள்,
B. 4/20 பூரணானந்தமடம்,
ஹனுமான்காட்,
வாராணஸீ.

வாணீ விலாஸ் அச்சகம், பாலக்காடு.